ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ப்ரபந்நஜநகூடஸ்தரான நம்மாழ்வார் அருளிச்செய்த

திருவாய்மொழிக்கு வ்யாக்யானங்களான

ஒன்பதினாயிரப்படி, இருபத்துநாலாயிரப்படி, ஈடுமுப்பத்தாறாயிரப்படிகளைக் கொண்ட

# ஒன்பது, பத்து பத்துக்கள்

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர் ஸ்வாமி பதிப்பு**

அச்சுத்தாள் திருத்தினவர்கள் :

திருமலை அனந்தாண்பிள்ளை, நாவல்பாக்கம், உபய வேதாந்த வித்யாசிரோமணி

கிருஷ்ணமாசாரியர், திருப்பதி.

M. A. வேங்கடகிருஷ்ணன், திருவல்லிக்கேணி.

கிடைக்குமிடங்கள் :

ஸ்ரீ. அ. அங்காரக்கனி அனந்தாழ்வான், காஞ்சிபுரம்-3

M. A. வேங்கடகிருஷ்ணன், 20, தெற்குமாட வீதி, திருவல்லிக்கேணி.

V. N. தேவநாதன், 213, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1.

திருவல்லிக்கேணி குரு அச்சகத்தில் அச்சிடப்பட்டது.

நள ௵ வைகாசி விசாக வெளியீடு

1976

ஸ்ரீ:
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி

## ஒன்பதாம் பத்து

### முதல் திருவாய்மொழி—கொண்டபெண்டிர்: ப்ரவேசம்

---

#### நஞ்சீயர் அருளிச்செய்த ஒன்பதினாயிரப்படி வ்யாக்யானம்.

ஒன்பதாம்பத்தில் முதற்றிருவாய்மொழியில், எம்பெருமான் பாகவதசேஷத்வபர்யந்தமான நிரதிசயபுருஷார்த்தமானதைக் காட்டிக்கொடுத்த மஹோபகாரத்தை யநுஸந்தித்து, மிகவும்ப்ரீதரான ஆழ்வார், "இப்படி உபகாரகனானவனே ஆத்மாவுக்கு நிருபாதிகபந்துவும், ப்ராப்யப்ராபகங்களெல்லாம், மற்றொருவருமில்லை" என்று தமக்குப் பிறந்த ப்ரீத்யதிசயத்தாலே "ஸமஸ்தசேதநரையும் குறித்து ஸோபாதிகபந்துக்களான புத்ரமித்ராதிகளை விட்டு, நிருபாதிகபந்துவான எம்பெருமானையே பற்றுங்கோள்" என்கிறார்.

#### பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த இருபத்துநாலாயிரப்படி.

ஒன்பதாம்பத்தில், முதற்றிருவாய்மொழியில், எம்பெருமான், பாகவத சேஷத்வபர்யந்தமான நிரதிசய புருஷார்த்தத்தைக் காட்டிக்கொடுத்த மஹோபகாரத்தை அநுஸந்தித்து மிகவும் ப்ரீதரானவர், இப்படி உபகாரகனான இவனே ஆத்மாவுக்கு நிருபாதிகபந்துவென்றும், அல்லாதாரடங்க ஸோபாதிக பந்துக்களென்றும், அவனே ப்ராப்யமும் ப்ராபகமுமென்றும் அநுஸந்தித்து, அத்தால் வந்த ப்ரீத்யதிசயத்தாலே ஸமஸ்தசேதநரையுங் குறித்து "ஸோபாதிகபந்துக்களை விட்டு நிருபாதிகபந்துவான ஸர்வேச்வரனைப் பற்றுங்கோள்" என்று உபதேசிக்கிறார். "ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாதவ:", "பூதாநாம் யோऽவ்யய: பிதா" என்று இத்யாதிகளாலே நிருபாதிகபந்து அவனேயிறே; மாதாபிதாக்கள் கைவிட்ட ஜயந்தனுக்கு ப்ரஹ்மாஸ்த்ரம் தொடுத்துக்கொடுநிற்கிற தாமேயிறே புகலானார். "ஸ பித்ரா ச பரித்யக்த:". பிதா எதிரியாக அவனிலும் அண்ணியவுறவாய் உதவிற்றனிறே ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு. "த்வாம் து திக் குலபாம்ஸநம்" என்று ஹிதஞ்சொன்ன ஸ்ரீவிபீஷணாழ்வானைத் தள்ளிவிட்டான் ராவணன்; "நத்யஜேயம்" என்று அவனையொழியச்செல்லாதாயிற்றுப் பெருமாளுக்கு. மஹாராஜர் ஜ்யேஷ்டனாலே நோவுபட, நிருபாதிக பந்துவாய்ச் சென்றுதவினார். த்ரௌபதியை பரர் பரிபவிக்க, பர்த்தாக்கள் தர்மபரதந்த்ரராய்க் கவிழ்ந்திருந்து நகை பக்கிற, அவ்வளவிலே உதவினபின்பும் "கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம்" என்று புண்பட்டது அவன் திருவுள்ளமிறே. உபாயாந்தரங்களைக் குறித்து சோகித்த அர்ஜுநனைக் குறித்து, "அவற்றையடங்க விட்டு என்னையே பற்று; உன்னை நான் ரக்ஷிக்கிறேன்; சோகியாதே கொள்" என்றானிறே. இப்படி "நிருபாதிகபந்து அவனே: புறம்புள்ளாரடங்க ஸோபாதிக பந்துக்கள்" என்று அநுஸந்தித்து, அத்தால்வந்த ப்ரீதியாலே "எல்லாரும் ஸோபாதிக பந்துக்களைவிட்டு அவனையே பற்றுங்கோள்" என்று பரோபதேச ப்ரவ்ருத்தராகிறார்.

தான் தன்ஹ்ருதயத்திலே மிகவும் பந்துக்களாக நினைத்திருக்கும் பார்யாதிகள் கையில் அர்த்தங்கண்ட போது ஸ்நேஹித்தாராயிருக்கு மித்தனைபோக்கி மெய்யான ஸ்நேஹம் ஒன்றுமில்லை. 'கொண்ட பெண்டிர்' என்கிறது அர்த்தாத்யுபாதியாலே ஸம்பாதித்த பார்யை என்றுஞ்சொல்லுவர். [எண்டிசையு மென்று தொடங்கி]-ப்ரளயாபத்தில் தன்னையொருவரும் அர்த்தியாதிருக்கச்செய்தே, எல்லாரையும் தன் திருவயிற்றிலே வைத்துப் பரிஹரித்தருளின மஹோபகாரகனானவனுக்கு அடியோமாய் உய்கையொழிய வேறு ஆத்மாவுக்கு ரக்ஷகரில்லை.

இ.—முதற்பாட்டில், நிருபாதிகபந்துவானவன், ஆபத்ஸகன்; அவனைப்பற்றி உஜ்ஜீவியுங்கோள் என்கிறார். [கொண்டபெண்டிரித்யாதி] - தான் தன்ஹ்ருதயத்திலே பந்துக்களாக நினைத்திருக்கும் பார்யாதிகளென்னுதல், பார்யைக்கே விசேஷணமாய் அர்த்தாத்யுபாதிவிசேஷத்தாலே கொண்ட ஸ்த்ரீ என்னுதல், மாதாபித்ரு ப்ரப்ருதிகளைக் காற்கடைக் கொண்டு எல்லாருமாக நினைத்திருக்கும் ஸ்த்ரீ என்னுதல். [மக்கள்] அப்படிப்பட்ட அவளுடைய யௌவநத்தை யழியமாறிப்பெறும் ப்ரஜைகள். [உற்றார்] தனக்கு ஸத்ருச விஷயமென்று ஆதரித்த ஸம்பந்திகள். [சுற்றத்தவர்] - அவர்கள் மதிக்கும்படியான இத் தலையில் ஜ்ஞாதிகள். [பிறரும்]-அந்யரும்; முன்பு சொன்னவர்களும், இவர்களிருக்கும் நாட்டில் வாசிபெரிதன் றென்கை. [கண்டதோடு பட்டதல்லால்]- ஸந்நிதியிலே ஸ்நேஹிக்குமதொழிய வென்னுதல், கையிலே த்ரவ்யங்கண்டபோது அத்தைப்பற்ற ஸ்நேஹிக்குமதொழிய வென்னுதல். [காதல்மற்று யாதுமில்லை] - காணாத போது மெய்யான ஸ்நேஹமொன்றுமில்லை யென்னுதல், ஸ்நேஹமும் அதற்கெதிர்த்தலையான த்வேஷமுமில்லை யென்னுதல், ஸ்நேஹமும் அதுக்கடியான பந்தமும் இல்லையென்னுதல். [எண்திசையும் இத்யாதி]-பத்துத் திக்கிலுமுண்டான ஸகலசேதநரையும் பிரிகதிர்ப்படாமல் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்தவன்; இவற்றின் பக்கலொன்றுமில்லாத அன்று ரக்ஷிக்குமவன். ப்ரளயாபத்தில் ரக்ஷிக்கைக்குக் கைமுதலுமில்லை; அர்த்தித்வமும் இல்லையிறே; ரக்ஷிக்கைக்குத் தான்அறிந்த ஆபத்தும் ஸம்பந்தமுமிறே வேண்டுவது? அப்போது விலக்குகைக்குப் பரிகாரமில்லையே. [பிரான்] - உபகாரசீலனானவன். [தொண்டரோமாயுய்யலல்லால்] -அடியோமாய் உஜ்ஜீவிக்கையொழிய நம்மதாய் அவனுக்கு கொடுக்கக் வேண்டுவதொன்றில்லை. சேஷத்வத்தை இசையுமித்தனை. சேஷத்வம் ஸ்வரூபமாகையாலே அத்தையறிகை உஜ்ஜீவநம்; சேஷத்வத்தை இழக்கையிறே நாசமும். [இல்லைகண்டீர் துணையே]-"வேறே துணையுண்டாயிருக்க இவனைப்பற்றச் சொல்லுகிறேனல்லேன்; இவனைப்பற்றி ஸ்வரூபம்பெறுதல் இல்லையாகில் இல்லையாமித்தனை." அந்வயத்தாலே ஸாதித்து வ்யதிரேகத்தாலே த்ருடீகரிக்கிறார்.

ஈடு.—முதற்பாட்டில், "ஔபாதிகபந்துக்களான தாரபுத்ராதிகளால் ஒரு ப்ரயோஜநமில்லை; நிருபாதிகபந்துவானவனே ஆபத்ஸகன்; அவனையே பற்றியுஜ்ஜீவியுங்கோள்; வேறு துணையில்லை" என்கிறார்.

[கொண்டபெண்டிரித்யாதி] - தான் தன் ஹ்ருதயத்திலே பந்துக்களாக நினைத்திருக்கும் பார்யாதிகளென்னுதல், [கொண்ட பெண்டிர்] - நிருபாதிகமாகவன்றிக்கே த்ரவ்யாத்யுபாதிகளாலே பரிக்ரஹித்த ஸ்த்ரீகள். அன்றிக்கே, மாதாபிதாக்களைச் செங்கற்சீரை கட்டவிட்டு, தான் ஆர்ஜித்த தனத்தையடைய க் கொடுக்கும்படி தந்த்ரமாக நெஞ்சிலேகொண்ட பெண்டிரென்றுமாம். ஆசார்யனும் பாகவதரும் ஐச்வர்யாதிகளும் எல்லாம் இவளேயாகக் கொண்ட பெண்டிரென்றுமாம். இவளுண்டாகையிறேஎல்லா மென்றிருக்கை. அன்றியே, இது ஸர்வவிசேஷணமாய், பந்துக்களாகத் தான் நினைத்திருக்கும் பார்யாதிகளென்னுதல். [மக்கள்]- அப்படிப்பட்ட அவளுடைய யௌவநத்தையழிய மாறிப்பெறும் ப்ரஜைகள். [உற்றார்] - தனக்கும் ஸத்ருசவிஷயமென்று ஆதரித்த ஸம்பந்திகள். [சுற்றத்தவர்] - அவர்கள் மதிக்கும்படியான ஜ்ஞாதிகள். [பிறரும்] - அந்யரும்; முன்புசொன்னவர்களும், இவர்களிருக்கும் நாட்டில் வாசி பெரிதன்றென்கை. [பிறரும்] மித்ரப்ரப்ருத்யாதிகளென்றுமாம். [கண்டதோடுபட்டதல்லால்] - ஸந்நிதியிலே ஸ்நேஹிக்குமதொழியவென்னுதல், கையிலே த்ரவ்யங்கண்டபோது அத்தைப்பற்ற ஸ்நேஹிக்குமதொழியவென்னுதல். [காதல்மற்றுயாதுமில்லை] - ப்ரயோஜநங்கண்டபோது உடன்படுமதொழிய, ப்ரகாராந்தரத்தில் ஏகதேசமும் ஸ்நேஹமுடையரல்லரென்னுதல், காணாதபோது மெய்யான ஸ்நேஹமொன்றுமில்லை

கைக்கொட்டிற்று ஓரம்பாலே. [எழ்மரமுமெய்த] - ஒன்றிரண்டாலே மஹாராஜர் அதிசங்கை போவதாயிருக்க, ஏழுமராமரத்தையு மெய்த. [எம்கார்முகிலை] - வாலியாலே தூரப்புண்டு வெறுவியரான தசையிலே யுதவப்புக, ரக்ஷணத்திலே அதிசங்கை பண்ணினவனுக்கு மழுவேந்திக் கொடுத்து, அவன்விரோதியைப் போக்கி; "ஏகம் து:கம் ஸுகஞ்ச நௌ" என்று ஆச்ரிதனைச் சொல்லுதல்; ஆத்மநிபூராவசநமாய் அவருக்குச் செய்ததும் தமக்குச்செய்ததாக நினைத்திருக்கும்படி யாலேயாதல். [புணையென்றுய்யப் போகலல்லால்] - அவன்பக்கல் ந்யஸ்தபரனாய் உஜ்ஜீவித்துப் போமதொழிய; "என்கார்யம் உனக்கேபரமாகவேணும்" என்று ஒருவார்த்தையே அவனுக்குச் செய்ய வேண்டுவது. [இல்லைகண்டீர் பொருளே] - புறம்பொருவரைப்பற்றினால் ஒருப்ரயோஜநமில்லை. புறம்பாச்ரயிக்கையிலே க்லேசிக்கச் சிலருண்டு இத்தனை; ப்ரயோஜநரூப மாவதொன்றில்லை.

௨.—இரண்டாம்பாட்டு. உபகாரகரைப்போலேயிருந்து, ஸ்வப்ரயோஜநங்களைத் தலைக்கட்டி நினைக்கும் அவிச்வஸநீயரானவர்களையொழிய, நிர்ஹேதுகமாக விச்வாஸஜநகனும், ஆபத்ஸகனுமானவனைப்பற்றுமதன்றி ப்ரயோஜநமில்லையென்கிறார்.

[துணையித்யாதி] - துணையாவதுதான், "ஏகம் து:கம் ஸுகஞ்சநௌ" என்று ஸுகது:க்கங்களையொக்க அநுபவிக்கை, சார்வாவதுதான் - போக்கடியற்ற தசையில், தாங்களே புகலாகை, பாண்டவர்களுடைய வநவாஸத்தில் தனிமையிலே முகங்காட்டியும், த்ரௌபதியை மீட்டுக்கொண்டுபோகிறபோது "ஜகாம தாம் பார்க்கவகர்மசாலாம்" என்று அவர்கள் தங்கின பணிக்கொட்டிலிலே சென்று முகங்காட்டிக் கூடக்கிடந்து கதறியும் துணையாயும், பாகத்தானவிட்ட சக்தியை அர்ஜுநனைத் தள்ளித் தன்மார்பிலேயேற்றுப் புகலாயும் போந்த க்ருஷ்ணனைப்போலேயிருக்கை. [ஆகுவார்போல்] - தாங்கள் அபேக்ஷிதங்களானபடியே நடக்கைக்கீடாகச் செய்யாதே "ரக்ஷகர்" என்று ப்ரமிக்கும்படி வர்த்திப்பர்கள். [சுற்றத்தவர்பிறரும்] - ஜ்ஞாதிகளும், மற்றுமுள்ளாரும். [அணையவித்யாதி] - கைக்கெட்டின ஸம்பத்துண்டாகில், "இவன்பக்கல் ப்ரயோஜநம் தங்களுக்கு உண்டாம்" என்று தோற்றியிருக்கிலென்னுதல், "தங்கள்பக்கல் இவனுக்கு ஒருப்ரயோஜநமுண்டு" என்று தோற்றியிருக்குமாகில் என்னுதல். [அட்டைகள்போல் சுவைப்பர்] - ரக்தஸ்பர்சமற வாங்காநிற்கச் செய்தே, இவனுக்கு ஹிதஞ் செய்தனவாயிறே இவையிருப்பது; அப்படியே, உபகாரங்கொண்டாராய்க் கொள்ளாதே, ஹிதஞ்செய்கிறோமாகக்கொண்டு உபஜீவிப்பர்கள். 'உன்பக்கலிலே தாங்கெடுகில் வாங்கிக் கொள்வேன், அதற்காக என்மேலே ஏறிட்டுவை' என்று அவனுக்கு ஹிதஞ்செய்கிறார்களாயிற்று, உபஜீவிப்பது. [கணையித்யாதி] - "ஏகேந மஹேஷுணா" என்று கைக்கொட்டித்தேறுர் அம்பாலே, மஹாராஜர் தனியருமாய், வெறுவியருமாய், தமையன் பகையுமாய், மநுஷ்யஸஞ்சாரமில்லாத காட்டிலேயிருக்க, பெருமாளையும் இளையபெருமாளையுந் தூரத்திலே கண்டு "வாலியால் விட்டவர்கள்" என்று அஞ்சியோடித் திருவடியை வரவிட்டு அறிவித்தபின்பு, "நாம் உம்முடைய கார்யஞ்செய்யவல்லோம்" என்று மழுவேந்திக்கொடுத்தும் அவர்கார்யஞ் செய்தாரிறே. [எழ்மரமுமெய்த] - ஒன்றிரண்டாலே மஹாராஜர் அதிசங்கை தீர்க்கலாயிருக்க, ஏழுமராமரத்தையுமெய்த. [எம்கார்முகிலை] - 'எம்' என்று ஆச்ரிதனைச் சொல்லுதல்; ஆத்மநிபூராவசநமாய், மஹாராஜர்க்குச் செய்தது தமக்குச் செய்ததாக நினைத்திருந்தபடியாலேயாதல். [கார்முகிலை] - பரமோதாரனானவனை. அவன்படியிதுவாகில் நாம் அவனுக்குச் செய்ய வேண்டுவதென்னென்னில்?- [புணையித்யாதி] - இ வேண்டுவதொரு பச்சையில்லை, ஒருக்தி மாத்ரம் அமையும். "என்கார்யம் உனக்கே பரம்" என்றொரு வார்த்தையே அவனுக்கு வேண்டுவது. [இல்லைகண்டீர்பொருளே] - புறம்பொருவரைப் பற்றினால் ஒரு ப்ரயோஜநமுமில்லை. புறம்பாச்ரயிக்கையிலே க்லேசிக்கச் சிலருண்டித்தனை; ப்ரயோஜநரூபமாவதொன்றில்லை.

தொழிவதே என்று இன்னாதாகிறார். [குற்றமன்று] - இவ்வுபாயம் அநர்த்தத்தை விளையாதிறே. [எங்கள் பெற்றத்தாயன் என்றுமேலுக்கு] - ஆச்ரிதர்க்காக வடமதுரைப் பிறந்தானுன பசுமேய்க்கும் ஆயனுடைய ஹேயப்ரத்யநீகமான கல்யாண குணங்களை அப்யஸித்து என்றும் வாழ்கை, ஆத்மாவுக்கு யுக்தம்.

௪.—ஏழாம்பாட்டில், பகவத் ஸமாச்ரயணத்தினுடைய எளிமையையும் இனிமையையும் அருளிச்செய்கிறார். [மற்றொன்றில்லை] - இத்தோடொக்க வேறு எண்ணலாவதில்லை யென்னுதல்; இப்போதித்தைச் சொல்லி வேறொருபோது வேறேயொன்றைச் சொல்லுகிறான் என்றிருக்க வேண்டாவென்னுதல். [சுருங்கச்சொன்னோம்] - இதுதன்னையும் பரப்பறச்சொன்னோம். ப்ரதிபத்திக்கு அவிஷயமாம்படியன்றியே ஸங்க்ரஹமாகச் சொன்னோம். [மாநிலத்து] - இதுக்கு அதிகாரிகள் ஸம்ஸாரத்திலே. இவ்வர்த்தத்துக்கு அண்ணியார் பரமபதத்திலுள்ளாராகிலும் உபதேசத்துக்கதிகாரிகள் ஸம்ஸாரிகளென்கை. [எவ்வுயிர்க்கும்] - இது அதிக்ருதாதிகாரமன்று, ஸர்வாதிகாரம். [சிற்றவேண்டா] - ஆயாஸிக்கவேண்டா. சிற்றுதல் - சிதறுதலாய், பரக்கவேண்டாவென்கை. [சிந்திப்பேயமையுங்கண்டீர்கள்] - உக்திநிரபேக்ஷமாகச் சிந்தாமாத்ரமேயமையுங் கிடிகோள். [அந்தோ]- இவ்விலக்ஷணவிஷயத்தை இழப்பதே என்னுதல், ''இது ஸுலபம்''என்றால் காற்கடைக்கொள்ளுகைக்கு உறுப்பாவதே யென்னுதல். [குற்றமன்று]-ஒருநன்மையில்லையாகிலும், ஓர் அநர்த்தத்தை விளையாதே. 'ப்ராதர்த்தேவேதி க்ருஷ்ணேதி'. இவ்வுபாயத்துக்கு ப்பலமில்லையாகிலும் தானே ப்ரயோஜனம் பேருமென்கை. [எங்கள் பெற்றத்தாயன் வடமதுரைப் பிறந்தான்]-ஆச்ரிதர்க்காக வடமதுரைப் பிறந்தானுன பசுமேய்க்கும் ஆயனென்னுதல். ஆச்ரிதர்க்காகப் பசுமேய்க்கும் ஆயனுமாளுக வடமதுரைப் பிறந்தானென்னுதல். [குற்றமில்சீர் - கற்று]- ஹேயப்ரத்யநீகமான கல்யாணகுணங்களை அப்யஸித்தென்னுதல்; பிறப்பிலும் சேஷ்டிதங்களிலும் புரையற்றிருக்கையென்னுதல். ''அஹம் வோ பாந்தவோ ஜாத:''- [வைகல் வாழ்தல் கண்டீர் குணமே] - கற்பதொருகால்; வாழ்ச்சி நித்யமாயிருக்கும் [வாழ்தல் கண்டீர் குணமே]. வாழ்தல்கீழ் இவ்வாத்மாவுக்கு யுக்தம்; அல்லாததெல்லாம் அப்ராப்தமென்கை.

௫.—எழாம்பாட்டு. பகவத்ஸமாச்ரயணத்தினுடைய எளிமையையும் இனிமையையும் அருளிச்செய்கிறார்.

[மற்றொன்றில்லை] - இத்தோடொக்க வேறு எண்ணலாவதில்லையென்னுதல், இப்போது இத்தைச் சொல்லி வேறொருபோது வேறொன்றைச் சொல்லுகிறானென்றிருக்கவேண்டாவென்னுதல். [சுருங்கச்சொன்னோம்] - இதுதன்னைப் பரப்பறச்சொன்னோம். ப்ரதிபத்திக்கு அவிஷயமாம்படி சொல்லுகையன்றிக்கே, ஸங்க்ரஹமாகச் சொன்னோம். [மாநிலத்து]-இதுக்கு அதிகாரிகள் ஸம்ஸாரத்திலே. இவ்வர்த்தத்துக்கு அண்ணியார் பரமபதத்திலுள்ளாராகிலும் உபதேசத்துக்கதிகாரிகள் ஸம்ஸாரத்திலுள்ளாரென்கை. [எவ்வுயிர்க்கும்]-இது அதிக்ருதாதிகாரமன்று; ஸர்வாதிகாரம். [சிற்றவேண்டா] - ஆயாஸிக்கவேண்டா. சிற்றுதல்-சிதறுதலாய், பரக்கவேண்டாவென்கை. ஒரு வ்யாபாரம் வேண்டாவென்றபடி. [சிந்திப்பேயமையும் கண்டீர்கள்]-உக்திநிரபேக்ஷமான சிந்தாமாத்ரமே யமையுங்கிடிகோள். [அந்தோ] ''நற்சரக்குக் கிட்டினதனையும் கைவிடுகைக்கு உடலாவதே!'' என்று அந்தோ! என்கிறார். [குற்றமன்று] கீழ்ச்சொன்ன நன்மைதானின்றியில்லையாகிலும், இதுசொன்னாலும் உங்கள் தலையில் ஓர் தீமை இடிவிழாது. ''யோஜலைகதஸ் ஸ உச்யதாம்''-''ப்ராதர்த்தேவேதி க்ருஷ்ணேதி''. இவ்வுபாயத்துக்குப் பலமில்லையாகிலும், இதுதானே ப்ரயோஜநம்பேருமென்கை. [எங்கள் பெற்றத்தாயன் வடமதுரைப் பிறந்தான்] - அத்திருவவதாரத்துக்குமுன்னே பெற்றத்தாயன் போலிருக்குமவனும், அவதரிப்பதாக ஸங்கல்பித்ததில் புரையற்றிருந்தபடி. ஆச்ரிதர்க்காக வடமதுரைப் பிறந்தானுன பசுமேய்க்கும் ஆயனென்னுதல். பெற்றத்தாயன் - பசுமேய்க்கும் இடையன். [குற்றமில் சீர்கற்று] - ஹேயப்ரத்யநீகமான கல்யாணகுணங்களை அப்யஸித்தென்னுதல்; பிறப்பிலும் சேஷ்டிதங்களிலும் புரையற்றிருக்குமென்னுதல். ''அஹம் வோ பாந்தவோ ஜாத:''. [வைகல்வாழ்தல்கண்டீர்குணமே] - கற்பதொருகாலாய், பின்பு வாழ்ச்சி நித்யமாயிருக்குமாயிற்று; இதொன்றுமே குணம்; இதொழிந்ததடைய அப்ராப்தம்.

இவர்க்கு உபகாரமில்லையிறே இவர்கள் பண்ணுகிறது. [நம்மையாளுடையார்கள்பண்டே] ஒரு ஸம்பந்தத்திலே பித்ருபுத்ரலக்ஷணமான அதிகாரத்தையுடையராயிருப்பாராகில், அவர்கள் பண்டே நமக்கு நாதபூதர். "அத்யேஷ்யந்தே" என்கிறபடியே, இத்தையப்யஸிக்கைக்கிடான யோக்யதையுள்ள ஜன்மந்தொடங்கி நமக்கு நாதர்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

—⁂—

## இரண்டாம் திருவாய்மொழி பண்டைநாள் : ப்ரவேசம்

—⁂—

ஆ.—இரண்டாம் திருவாய்மொழியில், கீழ்த்திருவாய்மொழியிலே அவனுடைய நிருபாதிகபாந்தவத்தையறிவித்த ஆழ்வார் இப்படி பரமபந்துவானவன் கண்வளர்ந்தருளுகிற திருப்புளிங்குடியிலே, அவனோடே யெல்லாப்பரிமாற்றமும் பரிமாறவேணுமென்று ஆசைப்பட்டுச் சென்றபடி பெருமையாலே விஷண்ணராய்த் தம்பக்கலிலே விசேஷகடாக்ஷம்பண்ணாதிருந்ததுக்குமேலே ஒரு சேஷ்டைகள்பண்ணாதே ஏகரூபமாகக் கண்வளர்ந்தருளுகையாலே "திருமேனிவருந்துகிறது" என்று அதிபீதராய் "என்னை உன்னழகிய திருக்கண்களாலே நோக்கியருளவேணும்; திருவடிகளைத் தலையிலே வைத்தருளவேணும்; திருப்பள்ளியுணர்ந்து பிராட்டியோடேகூட விருந்தருளவேணும்; எழுந்திருந்து என்னெதிரேவந்தருளவேணும்" என்று தொடங்கித் தம்முடைய மநோரதங்களையடைய அபேக்ஷிக்கிறார்.

ஒ.—இரண்டாம் திருவாய்மொழியில், கீழ்த்திருவாய்மொழியிலே "அல்லாதாரடங்க ஸோபாதிகபந்துக்கள்; அவனே நிருபாதிகபந்து" என்கிற அர்த்தத்தை அநுஸந்தித்து அதுக்கநுகுணமான பரிமாற்றத்துக்காக, பரமபந்துவானவன் கண்வளர்ந்தருளுகிற திருப்புளிங்குடியிலே அவனோடேஎல்லாப் பரிமாற்றத்தையும் ஆசைப்பட்டுச் சென்றபடி பெருமையாலே விஷண்ணராய், அதுக்குமேலே ஒரு சேஷ்டைகள் பண்ணாதே ஏகரூபமாகக்கண்வளர்ந்தருளுகையாலே திருமேனியலைகிறதென்று அத்தலையிலே நோவைக்குறித்து அதிபீருக்களுமாய், "என்னார்த்தியுந் தீர்க்கிறிலன், தன் ஆர்த்தியுந் தீர்க்கிறிலன்" என்று வெறுக்கிறார். ஆராவமுதில் "என்னார்த்தி தீர்க்கிறிலன்" என்று வெறுத்தார். இரண்டையுங்குறித்து வெறுக்கிறாரிதில். "கொடியார் மாடக்கோளூர்" என்றதுவே தலையெடுத்து தம்மாற்றாமையெல்லாம் தோற்றும்படி, "என்னார்த்திதீரக் குளிர நோக்கவேணும்; அநுகூலத்சநத்தாலே அகவாயிற்பந்தம் தோற்ற விக்ருதனாய்ப் பண்ணும் ஸ்மிதத்தை நான் காணப்பெறவேணும்; பிராட்டியும் தேவருமாயிருக்கிற இச்சேர்த்தியைக்காட்டியருளவேணும்; திருவடிகளை என்தலையிலேவைத்தருளவேணும்: நான்வந்து கிட்டினஇந்நாள் வந்த ப்ரீதிதோற்ற எழுந்திருந்து என்னெதிரே வரவேணும்" என்றுகொண்டு தம்முடைய மநோரதங்களையடைய அபேக்ஷிக்கிறார். ப்ராப்தியை அநுபவித்தார் கீழ்; ப்ராப்திபலத்தை அபேக்ஷிக்கிறார் இதில்.

ஈடு.—கீழ்த்திருவாய்மொழியிலே - "அல்லாதாரடங்கலும் ஸோபாதிகபந்துக்கள்; அவனொருவனுமே நிருபாதிகபந்து" என்றார்; நிருபாதிகபந்துவானால் பின்னை பந்துக்ருத்யம் பண்ணுகிறதிருக்க வேண்டுமிறே. இப்படி பரமபந்துவானவன் கண்வளர்ந்தருளுகிற திருப்புளிங்குடியிலே எல்லாப்பரிமாற்றத்தையும் ஆசைப்பட்டு இவர்சென்று கிட்டினவிடத்தில், இவரை யென்னென்னுதல், திருக்கண்களாலே குளிர நோக்குதல், ஒருவார்த்தைசொல்லுதல் செய்யக்கண்டிலர்; காருணையாலே மிகவும் அவஸந்நரானார்; அது அவனுடைய திருமேனி...

திருவருளும்" என்று ஆச்ரயணதசையாகையாலே புருஷகாரபாவத்தைப் பற்றச் சொல்லிற்றுக் கீழ்; "அடிமைசெய்யுமிடத்திலும் இருவருஞ் சேர்ந்த சேர்த்தியிலே அடிமை செய்யக்கடவது" என்னுமத்தைப் பற்றச் சொல்லுகிறது இங்கு. [இடங்கொள் மூவுலகும்] - இடமுடைத்தான லோகங்களிலுள்ளாரும். [தொழவிருந்தருளாய்] - அநந்யபரரைப்போலே முறையிலே தொழவிருக்கும் இருப்பை நான் கண்டநுபவிக்கவேணும் [திருப்புளிங்குடிக்கிடந்தானே]-ஸௌலப்யனை பின்பு எல்லாஞ் செய்தருளத்தட்டென்? [திருப்புளிங்குடிக் கிடந்தானே-இருந்தருளாய்] - சாய்ந்தருளின அழகை அநுபவிப்பித்தருளிற்று; இருந்தருளின அழகை அநுபவிப்பித்தருளவேணுமென்கை.

ஈடு.—மூன்றாம்பாட்டில். திருவுடம்பசையாதபடியே கண்வளர்ந்தருளாதே, அடியோமுக்காகப் பிராட்டியும் தேவரும் எழுந்தருளவேணும் என்கிறார்.

[கிடந்தநாள்கிடந்தாய்] - "கிடந்ததோர்கிடக்கை" என்று கிடையழகு காணவேணுமென்று ஆசைப்பட்டிருப்பாரொருவனுக்காக, ஆசைப்பட்ட அன்றுதொடங்கிக் கண்வளர்ந்தருளினாய். [எத்தனைகாலங்கிடத்தி] - இனி போராதவன்வந்து 'கிடந்தவாறெழுந்திருந்து பேசு' என்னுமளவும் கிடக்குமித்தனையிறே. எல்லாச்சேஷ்டிதங்களும், "பக்தாநாம்" என்றிருக்கை தவிராதிறே. [உன் திருவுடம்பசைய] - ஸுகுமாரமான திருமேனி அசையும்படி. அர்த்திகளோடே பார்க்குமித்தனையோ? உன்னையும் பார்க்கவேண்டாவோ? [தொடர்ந்துகுற்றேவல்செய்து] - "இத்தசையில் செய்யவடுப்பதுஇது, இத்தசையில் செய்யவடுப்பதுஇது" என்றுணர்த்தி அந்தரங்கவ்ருத்தியைப்பண்ணி. பெருமாள், தமக்கு அபிமதங்களில் அவதரித்தால் நிற்கும் படிக்கு நிற்கப் போரும், 'இவ்வடிமையைக் கொண்டருளவேணும், இவ்வடிமையைக் கொண்டருளவேணும்' என்று அவ்வவகாலங்தோறும் "மாம் வத, மாம் வத" என்று வழிமிட்டு அடிமைசெய்தாப் போலே, அந்தரங்கவ்ருத்திகளைப்பண்ணி. [தொல்லடிமை] ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகமான அடிமையாகையாலே பழையதாய்ப்போருகிற அடிமை. "ஆவிஸ்ஸ்யுர் மம ஸஹஜகைங்கர்யவிதய:" என்னக்கடவதிறே. [வழிவருந்தொண்டரோர்க்கருளி] - அடிமைமுறை தப்பாமேபோருகிற அநந்யகதிகளான எங்களுக்கு க்ருபைபண்ணி. இம்மூன்றுபாட்டிலும், தம்முடைய போக்யதையைச் சொன்னாப்போலேயிரேயிருக்கிறது; அதுஅன்று சொல்லுகிறது; 'ஒருவர்க்கே யாயிருப்பாரை வேறுமுகம்பார்ப்பாரில்லை' என்று தம்முடைய அநந்யகதித்வஞ் சொல்லுகிறார். [தடங்கொள் தாமரைக்கண்விழித்து] - பொய்கையைக் கண்செறிவிட்ட தாமரை போலே, இடமுடைத்தான திருக்கண்களாலே குளிரநோக்கி. [நீயெழுந்து] - நீயெழுந்திருந்து. "சீரியசிங்கமறிவுற்று" என்கிறபடியே, உணர்ந்தருளும்போதை அழகு காணவேணும். [உன் தாமரைமங்கையும்நீயும்] - "பகவத்விஷயத்தில் முதலடியிடுவார் பிராட்டி புருஷகாரமாகப் பற்றக்கடவது" என்னுமத்தாலே, "பங்கயத்தாள் திருவருள்" என்றார் கீழ்; அடிமைசெய்யுமிடத்திலும் இருவருமான சேர்த்தியிலே அடிமைசெய்வதாகச் சொல்லப் போருமத்தைப் பற்றச்சொல்லுகிறது இங்கு. [இடங்கொள்மூவுலகும்] - இடமுடைத்தான லோகங்களிலுள்ளாரும். [தொழவிருந்தருளாய்] - அநந்யப்ரயோஜனரைப்போலே முறையிலே தொழவிருக்குமிருப்பை நான் கண்டநுபவிக்கவேணும். [திருப்புளிங்குடிக் கிடந்தானே] - ஸௌலப்யனை பின்பு, எல்லாஞ் செய்தருளவேணும். அபேக்ஷிதங்களெல்லாஞ் செய்தருளக்கடவதானால் அதில் ஏகதேசஞ்செய்தால், குறையுஞ்செய்து தலைக்கட்டவேண்டாவோ? [திருப்புளிங்குடிக் கிடந்தானே - இருந்தருளாய்] - சாய்ந்தருளின அழகுகாட்டினாப்போலே இருந்தருளினபோதை அழகையுங் காட்டியருளாய்!

**புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள் நின்று***
**தெளிந்தஎன்சிந்தையகங்கழியாதே என்னையாள்வாய்எனக்கருளி***
**நளிர்ந்தசீருலகம்மூன்றுடன்வியப்ப நாங்கள்கூத்தாடிநின்றார்ப்ப***
**பளிங்குநீர்முகிலின்பவளம்போல் கனிவாய்சிவப்பநீகாணவாராயே.** (4)

குணத்தை. [உலகமூன்றுடன்வியப்ப] - விலக்ஷணரோடு அவிலக்ஷணரோடு வாசியற எல்லாரும் போக்கஅநுபவித்து விஸ்மயப்படும்படியாக. [நாங்கள் இத்யாதி] - நாங்கள் விஸ்மயப்படுமளவன்றிக்கே, விக்ருதராம்படி. இவர்க்கு விஸ்மயப்பட அவஸரமில்லையாயிற்று. [பனிக்கு நீர் முகிலின் பவளம்போல்கனிவாய்சிவப்ப] - தெளிந்தநீரை முகக்கையாலே தர்சநீயமான மேகமானது பவளத்தைப்பூத்தாற்போலேயாயிற்று, திருவதரத்தில் பழுப்பிருப்பது. இவர் ஸம்ப்ரமத்தைக் கண்டு அவன்பண்ணும் ஸ்மிதமிருக்கிறபடி. [நீ காணவாராயே] - என்னெதிரே உன்னமுகத்தை வரவேணும். அவன் கூத்திருக்கிறபடி. அவன் மாறிமாறியிடும் அடி, வல்லார் அடிக்குப்போலேகாணும் இருப்பது. பிள்ளைமுதியமணவாளவரையரைப் பெருமாள் ஒருநாள் அருளப்பாடிட்டு, "நாம் இங்ஙனே நடக்கிறோம்; நீ அதுக்கீடாக ஆடிக்காண்!" என்ன, "தம்பிரானே! என்றால் அந்நடைக்கீடாக ஆடப்போமோ? "கானகம்படியுலாவியுலாவி" இத்யாதி: தேவருடைய குழலோசையைக் கேட்டவாறே, பாடல்தவிர்ந்தார்கள்! தேவருடைய ஸ்வாபாவிகமான நடைக்குத் தங்களுடைய சிக்ஷாபலத்தாலுண்டான ஆடல் தவிர்ந்தார்கள்; குரக்கும் கைகொடு கூத்துமாவி அடியேன் தேவர்திருமுன்னே ஆடவல்லேனோ?" என்றாராம்.

**பவளம்போல்கனிவாய்சிவப்பநீகாணவந்து நின்பல்நிலாமுத்தம்***
**தவழ்கதிர்முறுவல்செய்து நின்திருக்கண்தாமரைதயங்கநின்றருளாய்***
**பவளநன்படர்கீழ்ச் சங்குறைபொருநல் தண்திருப்புளிங்குடிக்கிடந்தாய்***
**கவளமாகளிற்றினிடர்கெடத்தடத்துக் காய்சினப்பறவையூர்ந்தானே. (5)**

ஒ.—அஞ்சாம்பாட்டில், ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வந்து தோற்றினாப்போலே வந்து தோற்றியருளவேணுமென்கிறார். [பல்நிலாமுத்தமென்று தொடங்கி] பல்லாகிற ஒளியையுடைய முத்து கதிர் புறப்பட முறுவல் செய்து திருக்கண்களாகிற தாமரை விளங்க நின்றருளாய். [பவள நன்படரென்று தொடங்கி] - நல்லபவளப்படரின் கீழே சங்குகள் நிர்ப்பாதமாய்வர்த்திக்கிற திருப்பொருநலையுடைத்தாய் ச்ரமஹரமான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே! [கவளமென்று தொடங்கி] - மத்தமான பெரிய ஆனையினுடைய விடாய் கெடுகைக்காக, அகப்பட்டு நின்ற பொய்கையிலே ப்ரதிபக்ஷத்தைக் காயும்சினத்தையுடைய பெரிய திருவடியை நடத்திக்கொண்டு தோற்றினவனே!

இ.—அஞ்சாம் பாட்டில், ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வந்துதோற்றினாப்போலே வந்து தோற்றியருளவேணுமென்கிறார். [பவளம்போல் இத்யாதி] - "அவாக்யநாதர:" என்கிறபடியே ஒன்றுக்கும் விக்ருதனாகாத நீ, அநுகூலதர்சநத்தாலே அகவாயில் பந்தம்தோற்ற விக்ருதனாய் ஸ்மிதம்பண்ணி நிற்கும்படியைக் காணவேணும். [பல்நிலாமுத்தம்] - பல்லாகிற நிலாவையுடைய திருமுத்துநிரையானது, [தவழ்கதிர் முறுவல்செய்து] கதிர்தவழும்படி - கதிர் புறப்படும்படி, முறுவல்செய்து. [நின்திருக்கண் தாமரை தயங்க நின்றருளாய்] - திருக்கண்களாகிற தாமரை விளங்க நாலடிவந்து, முடியவரமாட்டாதே ஸ்தப்தனாய்நிற்கும் நிலையைக் காணவேணும், கண்ணினுடைய ஸ்மிதமிருக்கிறபடி. தயங்குகை - தத்காலத்தில் ஒளியாதல், கடல்சலித்தாற்போலே பளைத்து வருகிறபடியாதல். [பவளநன்படரித்யாதி] - நல்லபவளப்படரின் கீழே சங்குகள் நிர்ப்பாதமாய் வர்த்திக்கிற திருப்பொருநலையுடைத்தாய் ச்ரமஹரமான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே! படர்-தூறு, நிர்ப்பாதமாகப் பவளத்தூற்றிலே சங்குகள் வர்த்திக்கையாலே அவ்வூரில் பதார்த்தங்களுக்கு பாதகங்களால் அச்சமில்லையென்கை. [கவளமாகளிறு] - கவளங்கொண்டிருப்பதான பெரிய ஆனை, கவளங்கொண்டதென்றை இத்தால் - மதமுதித தென்கை; இதுக்குமுன்பு இடர் பட்டறியாதஆனை. [இடர்கெடத்தடத்து] - தன்னிலமல்லாத பொய்கையிலே ஒரு க்ஷுத்ரபதார்த்தத்தின் கையிலே யகப்பட்டு ப்ரதிக்ரியையின்றிக்கே யிருக்கும்படியான ஆபத்துப் போக. [காய்சினப் பறவையூர்ந்தானே] - ப்ரதிபக்ஷத்தைக் காயுஞ்சினத்தையுடைய பெரிய திருவடியை அவன் வேகம் போராமே அவனைப் ரேரித்துக்கொடுவந்து தோற்றிற்றிலையோ? ஆனையின் தசையிடாய் என்தசை, அதுக்கு வந்து தோற்றினாப்போலே என்முன்னேவந்து தோற்றவேணும்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுக்கு வந்துதோற்றினாப்போலே வந்து தோற்றியருளவேணுமென்கிறார்.

[பவளமித்யாதி] - *அவாக்யநாதர:* என்கிறபடியே ஒன்றுக்கும் விக்ருதனாகாத நீ, அநுகூல தர்சநத்தாலே பக்வாயில் பக்தந்தோற்ற விக்ருதனாய் ஸ்மிதம் பண்ணியிருக்கும் படியைக் காணவேணும். [நின்பல்நிலாமுத்தம்] - பல்லாகிற நிலாவையுடைய முத்துநிரையானது. [தவழ்கதிர்முறுவல்செய்து] - 'கதிர் தவழ் முறுவல்செய்து' - கதிருள்ளடங்காதே புறம்பே தவழும்படி, முத்தத்திலே பல்நிலாக்கதிர் தவழும்படி. முத்தம் - அதரம். கதிர் புறப்படும்படி முறுவல்செய்து. [நின்திருக்கண்தாமரை தயங்க நின்றருளாய்] - கண்ணினுடைய ஸ்மிதமிருக்கிறபடி. தயங்குகையாவது - அப்போது பிறந்த வொளியாதல், கடல் சலித்தாற்போலே அசைந்துவருகிறபடியைச் சொல்லிற்றுதல். [நின்றருளாய்] - மூன்றுநாலடிவந்து, பின்னை அதுவும் மாட்டாதே ஸ்தப்தனாய் நிற்கும்நிலை காணவேணும். [பவளமித்யாதி] - நல்ல பவளப் படரின்கீழே சங்குகள் நிர்ப்பாதமாய்வர்த்திக்கிற திருப்பொருநலையுடைத்தாய், ச்ரமஹரமான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே! படர் - தூறு. அவ்வூரில் பதார்த்தங்களுக்கு, பாதகத்துக்கு பயப்பட்டுவர்த்திக்குமது இல்லையாயிற்று. அத்தேசஸ்வபாவம் இதுவாயிருக்க "எனக்கு உன்னைக்கிடைக்குமோ? கிடையாதோ?" என்று நான் பயப்படும்படியிருக்கிறதென்? [கவளமித்யாதி] - கவளங்கொண்டிருப்பதான பெரிய ஆனை. கவளங்கொண்ட என்ற இத்தால் - மதமுதிதமென்கை. இதுக்குமுன்பு இடர்ப்பட்டறியாத ஆனை. [இடர்கெட] - "வாராயென்னுரிடரை நீக்காய்" என்று, தன்வாயாலே "ஆரிடர்" என்னும்படியிறே பட்ட இடரின் கனம். "ஆனையின் துயரம்" என்று நெஞ்சுளுக்கும்படியிறேபட்டது. [தடத்து] தன்னிலமல்லாத பொய்கையிலே க்ஷுத்ரபதார்த்தத்தின் கையிலேயகப்பட்டு ப்ரதிக்ரியையின்றிக்கே யிருக்கும்படியான ஆபத்துப் போம்படியாக. தடமென்று-கரைக்கும், பொய்கைக்கும் பேர். [காய்சினப்பறவையூர்ந்தானே] ப்ரதிபக்ஷத்தைக் காயுஞ்சினத்தையுடைய பெரிய திருவடியை, அவன்வேகம்போராமை அவனைப்ரேரித்துக்கொண்டுவந்து தோற்றிற்றிலையோ? அவ்வானையின் தசைகிடாய்என்தசை! அதுக்குத் தோற்றினாப்போலே என் முன்னேவந்து தோற்றியருளவேணும்.

**காய்சினப்பறவையூர்ந்து பொன்மலையின் மீமிசைக்கார்முகில்போல்***
**மாசினமாலிமாலிமானென்று அங்கவர்படக்கனன்றுமுன்னின்ற ***
**காய்சினவேந்தேகதிர்முடியானே கலிவயல்திருப்புளிங்குடியாய்***
**காய்சினவாழிசங்குவாள்வில்தண்டேந்தி யெம்மிடர்கடிவானே. (6)**

ஆறா.—ஆரும்பாட்டில், உன்னுடைய அபிலஷிதங்கள்செய்யவொண்ணாதபடி ப்ரதிபந்தகங்களுண்டேன்னில்; ஆச்ரிதருடைய ஆபத்துப் போக்குகைக்காக திவ்யாயுதங்களேந்தியிருக்கிற நீ, மாலிப்ரப்ருதிகளான ராக்ஷஸரை முடித்தாப்போலே என்னுடைய ப்ரதிபந்தகங்களை நீயே போக்கியருளவேணுமென்கிறார். [காய்சினப்பறவையென்று தொடங்கி] - மேருசிகரத்திலேயேறி மேகம் படிந்தாப்போலே ப்ரதிபக்ஷத்தைக் காயும்சினத்தையுடைய பெரியதிருவடியை நடத்திக்கொண்டு வந்து, பெரிய சினத்தையுடையரான மாலி மால்யவான் தொடக்கமான அஸுரர்கள் அங்கே முடியும்படி சீறி, அவர்கள்முன்பே நின்ற காயும் சினத்தையுடைய வேந்தே! [கலிவயல் திருப்புளிங்குடியாய்] - "அதுபண்டிறே" என்னவொண்ணாதபடி ஸம்ருத்தமான திருப்புளிங்குடியிலேவந்து ஸந்நிஹிதனானவனே! இப்பாட்டில் நிலை மேலிற்பாட்டிலே.

இ.—ஆரும்பாட்டில், உம்முடைய அபேக்ஷிதங்கள் செய்யவொண்ணாதபடி ஆனையிற்காட்டில் உனக்கு ப்ரதிபந்தகங்களுண்டேயென்ன: மாலிப்ரப்ருதி ராக்ஷஸரிலும் வலிதோ என்னுடைய ப்ரதிபந்தகம்? என்கிறர். [காய்சினப் பறவையூர்ந்து] - ப்ரதிபக்ஷத்தில் உனக்குத் தண்ணளியுண்டாகிலும் கண்ணற்

து:க்கங்களையும்போக்கி. [இங்கு என்னையாள்வானே] - பகவத்ஜ்ஞாநத்துக்கு அடைவில்லாத இஹலோகத்திலே அடிமைகொள்ளுகிறவனே! [இமையவர் தமக்குமாங்களையாய்] - அகிஞ்சநரான எங்களுக்கேயன்றிக்கே, "ஈச்வரோऽஹம்" என்றிருக்கிற ப்ரஹ்மாதிகளுக்கும் அங்கு அப்படி நிர்வாஹகனானவனே! [செம்மடலித்யாதி] - சிவந்தமடல் மலராநின்றுள்ள தாமரையையுடைய நீர்நிலங்களை யுடைத்தாய்ச் ரமஹரமான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே! [நம்முடையித்யாதி] - உன்னடியார் உன்னையநுபவிக்கிற ஆரவாரத்தைக் கண்டு நாங்களுகந்து, அந்தவுகப்புத் தலைமண்டையிட்டு ஹ்ருதயத்திலே ஸ்நேஹமானது மேன்மேலென மிக்குவர. [இம்மடவுலகர்காண] - அஜ்ஞரான ஸம்ஸாரிகளநுபவிக்கும்படி எங்கள் கண்வட்டத்திலே ஒருநாளிருந்தருளவேணும். நித்யஸூரிகளுக்கு ஸதாதர்சந விஷயமான நீ, ஒரு நாள் எங்கள் கண்ணுக்கு விஷயமாயிருந்தாலாகாதோ? உன்னுடைய தர்சநம் அதிக்ருதாதிகாரமாகவேணுமோ?

௭.—ஏழாம்பாட்டு. துர்ப்பலரோடு ப்ரபலரோடுவாசியற ரக்ஷகனான நீ, நாங்கள் வாழும்படி கண்ணெதிரே ஒருநாளிருக்கவேணுமென்கிறார்.

[எம்மிடர்கடிந்து] எங்களுடைய ஸாம்ஸாரிக ஸகலது:க்கங்களையும் போக்கி. [இங்கென்னையாள்வானே] பகவத்ஜ்ஞாநத்துக்கு அடைவில்லாத இஹலோகத்திலே என்னை அடிமைகொள்ளுகிறவனே! [இமையவர் தமக்கு மாங்களையாய்] அகிஞ்சநரான எங்களுக்கேயன்றிக்கே *ஈச்வரோऽஹம்* என்றிருக்கிற ப்ரஹ்மாதிகளுக்கும் அங்கு அப்படி நிர்வாஹகனானவனே! [செம்மடலித்யாதி] சிவந்த மடல் மலராநின்றுள்ள தாமரைகளையுடைய நீர்நிலங்களையுடைத்தாய், ச்ரமஹரமான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே! உன்னும் புறம்புமெல்லாம் தாமரையாயிற்று. [நம்முடையித்யாதி] உன்னடியார் உன்னை யநுபவிக்கிற ஆரவாரத்தைக் கண்டு நாங்கள் உகந்து, அந்தவுகப்புத் தலைமண்டையிட்டு, ஹ்ருதயத்திலே ஸ்நேஹமானது மேன்மேலென மிக்குவர. [இம்மடவுலகர்காண] இந்த ஸம்ஸாரத்தில் அறிவுகேடராய், இடக்கைவலக்கையறியாதவர்களும் கண்ணாலே காணும்படியாக. [நீ ஒருநாளிருந்திடாய் எங்கள் கண்முகப்பே] எங்கள் கண்வட்டத்திலே ஒருநாள் இருந்தருளவேணும். நித்யஸூரிகளுக்கு ஸதாதர்சநவிஷயமான நீ ஒருநாள் எங்கள் கண்ணுக்கு விஷயமாயிருந்தாலாகாதோ? உன்னுடைய தர்சநம் அதிக்ருதாதிகாரமாக வேணுமோ?

**எங்கள் கண்முகப்பேயுலகர்களெல்லாம் இணையடி தொழுதெழுதிறைஞ்சி***
**தங்களன்பாரத்தமதுசொல்வலத்தால் தலைத்தலைச்சிறந்துபூசிப்ப***
**திங்கள்சேர்மாடத்திருப்புளிங்குடியாய் திருவைகுந்தத்துள்ளாய்தேவா***
**இங்கண்மாஞாலத்திதனுளுமொருநாள் இருந்திடாய்வீற்றிடங்கொண்டே. (8)**

௮.—எட்டாம்பாட்டில், திருநாட்டிலேயன்றே நீர் அபேக்ஷிக்கிறபடி செய்யலாவதென்னில்; ஸகலலோகங்களும் கொண்டாடும்படி எங்கள் கண்ணெதிரே இஸ்ஸம்ஸாரத்திலே திருப்புளிங்குடியிலே உன்னுடைய வேண்டற்பாடுதோற்ற ஒருநாள் இருந்தருளவேணுமென்கிறார். [எங்கள் கண்முகப்பே யென்று தொடங்கி] - எங்கள் கண்ணெதிரே லௌகிகர் எல்லாம் உன்திருவடிகள் இரண்டையும் நிரந்தரமாகத் தொழுது க்ருதார்த்தராய்த் தங்களுடைய ஸ்நேஹாநுகுணமாகத் தங்களுடைய சக்த்யநுரூபமான சொற்களாலே மிகவும் மேல்விழுந்து கொண்டாட. [திங்களென்று தொடங்கி] - சந்த்ரபதத்தளவும் உயர்ந்த மாடங்களையுடைய திருப்புளிங்குடியிலே ஸந்நிஹிதனானவனே! அவ்வளவன்றிக்கே ஸ்ரீவைகுண்டத்திலேவந்து நின்றருளி மிகவும் விளங்காநின்றுள்ளவனே!

இ.—எட்டாம்பாட்டில், பரமபதத்திலேயன்றோ இருப்பழகு காட்டலாவதென்ன, அவ்விருப்பைத் திருப்புளிங்குடியிலே ஒருநாள் இருந்தருளவேணுமென்கிறார். [எங்கள் கண்முகப்பே இத்யாதி] - எங்கள் கண்முகப்பே இருக்கவேணும். அது செய்தருளுமிடத்தில் லௌகிகரெல்லாம் திருவடிகளிற் சேர்த்தியழகு கண்டு திருவடிகளிலே விழுவதெழுவதாய் ஆச்ரயித்து. [தங்களன்பார] - தங்கள்ப்ரேமம்

மிக்குவர, [தமது சொல்வலத்தால்] - சத்யநுகுணமான சொற்களாலே வெல்லுதல், தாந்தாம் சொல்வல்லவளவிலே என்னுதல். "பொன்னாலே பூணுநா விடுவீர்; நாநாபிராயம் புகுவீர்; "விஜயஸ்வ" என்னுதல். [தலைத்தலைச் சிறந்து பூசிப்ப] - மிகவும் மேல்விழுந்து கொண்டாட. [திங்கள் இத்யாதி] - ஸஞ்சாரசீலனான சந்த்ரனுக்கும் இளைப்பாறலாம்படியான மாடங்களையுடைய திருப்புளிங்குடியிலே ஸந்நிஹிதனானவனே! [திருவைகுந்தத்துள்ளாய்] - அவ்வளவன்றிக்கே, ஸ்ரீவைகுண்டத்திலே நின்றருளினவனே! [தேவா] - பரமபதத்திற்காட்டில் ஸம்ஸாரத்தில் விசேஷமால்வந்த புகர். [இங்கண் இத்யாதி] - இம்மஹாப்ருதிவியிலே திருப்புளிங்குடியிலே பரமபதத்திலிருக்கும் வேண்டற்பாட்டோடே ஒருநாள் இருந்தருளவேணும்.

௮.—எட்டாம்பாட்டு. பரமபதத்திலேயன்றோ இருப்பது காட்டலாவதென்ன? அவ் விருப்பைத் திருப்புளிங்குடியிலே ஒருநாளிருந்தருளவேணுமென்கிறார்.

[எங்களித்யாதி] எங்கள் கண்முகப்பே இருக்கவேணும். அது செய்யுமிடத்தில், லோகத்திலுள்ளாரடங்க, திருவடிகளிலுண்டான சேர்த்தியழகுகண்டு திருவடிகளிலே விழுவ தொழுவதாய்க்கொண்டு ஆச்ரயித்து. [தங்களன்பார] தங்கள் ப்ரேமம் மிக்குவர. [தமது சொல்வலத்தால்] சத்யநுரூபமான சொற்களாலேயென்னுதல்; தாந்தாம் சொல்வல்லவளவாலேயென்னுதல்; "யதாஜ்ஞாநந்து வக்ஷ்யாமி புருஷம்தம் ஸநாதநம்" என்னக்கடவதிறே. அதாவது "நாநாபிராயம்புகுவீர், பொன்னாலே பூணுநாலிடுவீர்" என்றாப்போலே சொல்லுகை. வங்கிபுரத்துநம்பி "விஜயஸ்வ" என்ன, ஆண்டான் சொன்ன வார்த்தையை நினைப்பது. [தலைத் தலைச்சிறந்துபூசிப்ப] ஒருவர்க்கொருவர் மேல்விழுந்து மிகவும் ஆச்ரயித்துக்கொண்டாட. [திங்களித்யாதி] சந்த்ரனுக்கு இதஸ்தத: ஸஞ்சரிக்கையாலுண்டான இளைப்பெல்லாம் ஆறும்படியிருக்குமாயிற்று மாடங்களினுடைய வோக்கம்; அதிலே ஸந்நிஹிதனானவனே. [திருவைகுந்தத்துள்ளாய்] அவ்வளவேயன்றிக்கே, திருவைகுந்தத்திலே நின்றருளினவனே. [தேவா] பரமபதத்திற்காட்டில் ஸம்ஸாரத்தில் விசேஷமால் வந்தபுகர். [இங்கண்மாஞாலத் திதனுளுமொருநாளிருந்திடாய்] இந்த மஹாப்ருதிவியிலே, திருப்புளிங்குடியிலேயும் ஒருநாளிருந்தருளவேணும். இருக்குமிடத்தில், [வீற்றிடங்கொண்டு] பரமபதத்திலிருக்குமாபோலே, உன்னுடைய வ்யாவ்ருத்தி தோற்ற இருக்கவேணும். "இதனுளும்" என்கிறதுக்குக் கருத்தென்னென்னில்?—சாய்ந்தருளினவழகு கண்டோமுக்கு, "இவனிருந்தால் எங்ஙனே யிருக்கிறதோ?" என்றும், இப்படியிருக்கிறவன்றான் நின்றால் எங்ஙனேயிருக்கிறதோ?" என்றும், இங்ஙனே சில அபேக்ஷைகள் பிறக்குமிறே இவர்களுக்கு; அது வேறொருபடியிறே நமக்கு. இவையெல்லாம் நரகாவஹமான விஷயங்களிலேயுண்டு; இவ்விஷயத்தில் தெரியாது. செய்ததெல்லாம் பரிதாபமும், அவ்வருகே சில பரிமாற்றங்களை யாசைப்படுகையுமெல்லாம் நமக்கு ப்ராக்ருதவிஷயங்களிலே யுண்டாயிருக்கும். இப்படியிருக்குமோ வென்று அறியுமித்தனை.

**வீற்றிடங்கொண்டு வியன்கொள்மாஞாலத்திதனுளுமிருந்திடாய்* அடியோங்கள்**
**போற்றியோவாதே கண்ணிணைகுளிரப் புதுமலராகத்தைப்பருக***
**சேற்றிளவாளைசெந்நெலூடுகளுஞ் செழும்பணைத்திருப்புளிங்குடியாய்***
**கூற்றமாய் அசுரர்குலமுதலரிந்த கொடுவினைப்படைகள்வல்லானே. (௯)**

௯.—ஒன்பதாம்பாட்டில், இவ்விருப்பில் வீற்றிருப்பது ஸம்ஸாரத்திலே யிருக்கிறதென் என்னில், ஆசையுடைய நாங்கள் நிரந்தரமாகக் கண்டுவாழுகைக்கு என்கிறார். [வீற்றிடங்கொண்டென்று தொடங்கி] - உன்னைக்கொண்டு கார்யமின்றிக்கே செல்லுகிற விஸ்மயநீயமான ஸம்ஸாரத்திலே உன்னுடைய வேண்டற்பாடு தோற்றும்படி ஒருநாளிருந்தருளவேணும். இதில் 'உமக்கு ப்ரயோஜநம் என்னென்னில் ? அநந்யப்ரயோஜநரான நாங்கள் கண்களின் விடாய் கெடும்படி செவ்விப்பூப்போலே யிருக்கிற

திருமேனியை வாழ்த்தி நிரந்தரமாக அநுபவிக்கும்படி. [சேறுஎன்றுதொடக்கி] - செந்நெல்களின் நடுவே சேற்றிலே இளவாளைகள் களித்துத் துள்ளாநின்றுள்ள அழகியநீர்நிலத்தையுடைய திருப்புளிங் குடியிலே ஸந்நிஹிதனானவனே! ம்ருத்யுபோலே அஸுரருடைய குலங்களைப்போக்கவல்லனாய் அதுக்கு உபாயமாய்க் கொடிய ப்ரவ்ருத்திகளையுடைய திவ்யாயுதங்கள் கைவந்திருக்குமவனே! இது பகைவர் தம் முடைய ப்ரதிபந்தகங்களைப் போக்குமபடிக்கு த்ருஷ்டாந்தம்.

ஈ.—ஒன்பதாம்பாட்டில், இவ்விருப்பில் வேறுபாடு ஸம்ஸாரத்தில் இருக்கிறதென்னென்னில்,— ருசியுடைய நாங்கள் கண்டு அநுபவிக்கைக்கென்கிறார். [வீற்றிடங்கொண்டு] - சேஷித்வத்தால்வந்த வேறுபாடு தோற்றும்படி. [வியன்ஞாலஇத்யாதி] - விஸ்மயநீயமான மஹாப்ருதிவியான இதிலேயுமிருக் கிடாய். உன்னைக்கொண்டுகார்யமின்றிக்கே அங்யபரமான ஸம்ஸாரத்திலே உன்னையொழியச் செல் லாமையுடையார்முன்பே யிருக்குமது உனக்கேற்றமோ? இதில் உமக்குப்ரயோஜநமென்னென்னில்,— [அடியோம்] - அநந்யப்ரயோஜநரான நாங்கள். [போற்றி] - அவ்விருப்பு நித்யமாய்ச்செல்லவேணு மென்று மங்களாசாஸநம் பண்ணி. [ஓவாதே] - உச்சிவீடு விடாதே. [கண்ணிணைகுளிர] - கமர்பிளந்த கண்கள் விடாய்கெட்டுக் குளிரும்படி. [புதுமலராகத்தைப்பருக] - செவ்விப்பூப்போலேயிருக்கிற திருமேனியையநுபவிக்கும்படியாக புஷ்பஹாஸஸுகுமாரமானவடிவை "ஸோகாரப்யாம் பிபந்நிவ" என்கிறபடியே நிரந்தரமாக அநுபவிக்கப்பெறுகை. [சேற்றிளவாளை இத்யாதி] - செந்நெலின் நடுவே சேற்றிலே பஞ்சவிம்சதிவார்ஷிகரான முக்தரைப்போலேயிருக்கிற வாளைகள் களித்துத்துள்ளாநிற்பதான அழகிய நீர்நிலத்தையுடைய தேசம். [செழும்பணை] - அழகிய மருதநிலமென்றுமாம். [கூற்றமா யித்யாதி] - ம்ருத்யுபோலே ப்ரதிபக்ஷத்தை நிச்சேஷமாகப் போக்கவல்லனாய், அதுக்குஉறுப்பாகக் கொடிய தொழிலையுடைய திவ்யாயுதங்கள் கைவந்திருக்குமவனே! ப்ரதிபக்ஷத்துக்கு ம்ருத்யுவான திவ்யாயுதமென்னவுமாம். இதுக்குமுன்பு தம்முடைய ப்ரதிபந்தகங்களைப் போக்கும்படிக்கு த்ருஷ்டாந்த மென்னுதல்; உனக்கென்ன அசக்தி உண்டாய் நானிழக்கிறேனென்னுதல்.

ரு—ஒன்பதாம்பாட்டு. 'இவ்விருப்பில் வாசியறியாத ஸம்ஸாரத்திலேயிருக்கிறதென்? என்னில்,—ருசியுடைய நாங்கள் கண்டநுபவிக்க என்கிறார்.

[வீற்றிடங்கொண்டு] சேஷித்வத்தால் வந்த வேறுபாடு தோற்றும்படி. [வியன்ஞால இத்யாதி] விஸ்மயநீயமான மஹாப்ருதிவியான இதிலேயுமிருந்திடாய், உன்னைக்கொண்டு ஒரு கார்யமில்லாத ஸம்ஸாரத்திலே. [இதனுளும் இருந்திடாய்] இந்தத் திருப்புளிங்குடியாகிற திருப்பதியிலேயும் இருந்திடாய். உன்னையொழியச் செல்லாமையுடையார்முன்னே யிருந்தா லென்னுமிது போருமோ? [இதனுளும் இருந்திடாய்] சாய்ந்தருளினபோதிருக்கும் இருப்பை யநுபவிப்பித்தருளிற்று. இனி, இருந்தால் இருக்குமழகையும் அநுபவிப்பித்தருளவேணும் "நமக்கு இவையெல்லாம் இங்கே காணலாமிறே: சாய்ந்தருளின அழகு பெரிய பெருமாள் பக்கலிலே காணலாம்; நின்றருளினவழகு, நம்பெருமாள்பக்கலிலே காணலாம்; இருப்பிலுண் டானவழகு, பெரியபிராட்டியார்பக்கலிலே காணலாம்" என்று பட்டர் அருளிச்செய்வர். நாம் இங்கிருந்து நீர் பெறப்புகுகிற பேறு ஏதென்ன? [அடியோமித்யாதி] அடியோம்-அவ்விருப்பைப் படிவிட, அதுவே ஜீவநமாகவிருக்கிற நாங்கள். [போற்றி] இவ்விருப்பு இங்ஙனே நித்யமாகச் செல்லவேணுமென்று மங்களாசாஸநம் பண்ணி. [ஓவாதே] உச்சிவீடு விடாதே. [கண்ணிணை குளிர] காணப்பெறுகையாலே கமர்பிளந்து கிடக்கிறகண்கள். விடாயெல்லாந்தீர்ந்து குளிரும் படியாக. [புதுமலர் இத்யாதி] செவ்விப்பூப்போலேயிருக்கிற திருமேனியை யநுபவிக்கும்படி யாக. புஷ்பஹாஸஸுகுமாரமானவடிவை, "லோசநாப்யாம் பிபந்நிவ" என்கிறபடியே நிரந்தர மாக அநுபவிக்கப்பெறுகை. [சேற்றிளம் இத்யாதி] அவ்வூரில் பதார்த்தங்களுடைய அபிமத லாபத்தாலே களித்துவர்த்திக்குமாயிற்று. செந்நெலின் நடுவே சேற்றிலே, பஞ்சவிம்சதிவார் ஷிகரான முக்தரைப்போலேயிருக்கிற வாளைகள் களித்துத்துள்ளாநிற்பதான அழகிய நீர் நிலத்தையுடைய. [செழும்பணை] அழகிய மருதநிலமென்றுமாம். [கூற்றமாய்இத்யாதி] ப்ரதி பக்ஷத்துக்கு ம்ருத்யுவான திவ்யாயுதங்களை தரித்துக்கொண்டிருக்கிறவென்னுதல்; அன்றிக்கே, ப்ரதிபக்ஷத்துக்குக் கூற்றமாய்க்கொண்டு அவர்களுடைய குலத்தை முதலரியவரிந்து போகடு மவனும், அதுக்கு உடலாகக் கொடிய தொழில்களையுடைய திவ்யாயுதங்களையுடையனு

யிருக்கிறவன் என்னுதல். இப்போது இது சொல்லுகிறது - இதுக்குமுன்பு, தம்முடைய ப்ரதிபந்தங்களைப் போக்கினபடிக்கு த்ருஷ்டாந்த மென்னுதல்; உனக்கு என்ன குறையுண்டாய் இழக்கிறேன் என்னுதல்.

**கொடுவினைப்படைகள்வல்லையாய் அமரர்க்கிடர்கெட அசுரர்கட்கிடர்செய்.**
**கடுவினைநஞ்சேயென்னுடையமுதே கலிவயல்திருப்புளிங்குடியாய்***
**வடிவிணையில்லாமலர்மகள் மற்றைநிலமகள்பிடிக்கும்மெல்லடியை***
**கொடுவினையேனும்பிடிக்கநீயொருநாள் கூவுதல்வருதல்செய்யாயே. (௰)**

ஈ.—பத்தாம்பாட்டில், மிகவும் போக்யமான உன்திருவடிகளிலே நானும் வந்து அடிமை செய்யும்படி என்னை அங்கே அழைத்துக்கொள்ளுதல், இங்கேவருதல் செய்தருளவேணுமென்கிறார். [கொடுவினைப்படைகள் வல்லையாய்] - உனக்கு சேஷமாய்வைத்தே உன்னோடே ப்ரதிகூலித்த சேதநர் பக்கல், நீரிலே நெருப்பெழுந்தாற்போலே சீறி ஆயுதமெடுக்கவல்லையாய். [அமரர்க்கென்று தொடங்கி] தேவர்களுடைய ஸர்வ துக்கங்களும் போம்படி அஸுரர்க்கு துஸ்ஸஹமான துக்கத்தை விளைக்கும்படியான ப்ரத்யௌஷதமில்லாத நஞ்சாய் எனக்கு நிரதிசயபோக்யனுமாய்த் திருப்புளிங்குடியிலேவந்து ஸந்நிஹிதனுமானவனே ! [வடிவிணையென்று மேலுக்கு] - வடிவழகுக்கு ஒப்பில்லாத பெரிய பிராட்டியாரும் அப்படியிருக்கிற ஸ்ரீபூமிப்பிராட்டியாரும் கூசி ஸ்பர்சிக்க வேண்டும்படி ஸுகுமாரமான திருவடிகளை அதில் போக்யதையை யறிந்துவைத்து இழக்கைக்கீடான பாபத்தைப்பண்ணின நானும் பிடிக்கும்படி.

இ.—பத்தாம்பாட்டில், நிரதிசயபோக்யமான உன்திருவடிகளிலே நானும் வந்து அடிமை செய்யும்படி என்னை யங்கேயழைத்தல் இங்கேவருதல் செய்தருளவேணுமென்கிறார். [கொடுவினைப் படைகள் வல்லையாய்], உனக்கு சேஷமாய்வைத்து ப்ரதிகூலித்தவர்கள்பக்கல் நீரிலே நெருப்பெழுந்தாற் போலே சீறி, ஆயுதமெடுக்கவல்லையாய். "சிலரை அழியச்செய்ய" என்றால் - சக்தனன்றிக்கேயிருக்கை. "யதிவா ராவணஸ் ஸ்வயம்" என்றிறேயிருப்பது. "ந நமேயம்" என்று ப்ராதிகூல்யம் மிகைத்தாலும், "கச்சாநுஜாநாமி" என்று பின்பு கண்ணும் கண்ணநீருமாய் நின்றிறே கொல்லுவது ? [அமரர்க்கிடர் கெட] - அஸுரர்களாலே தேவர்களுக்குஉண்டான துக்கம் தீரும்படி. [அசுரர்க்கிடர் செய்] - அஸுரர்க்கு துக்கத்தை விளைக்கும். [கடுவினை நஞ்சே] - சடக்கென முடிக்கவற்றாய் ப்ரத்யௌஷதமில்லாத நஞ்சானவனே! [என்னுடை அமுதே] - எனக்கு நிரதிசயபோக்யனானவனே! ஸாத்யமான தேவர்கள் அமுதன்று .[கலிவயல் திருப்புளிங்குடியாய்] - ஸ்வர்க்கத்திற் போகவேண்டா; கடலைக் கடைய வேண்டா: திருப்புளிங்குடியிலே ஸந்நிஹிதமாயிற்று இவருடைய அம்ருதம். [கலிவயல்] - ஸம்ருத்தமான வயல். [வடிவிணை இல்லாத] - இவ்வடிவில்வந்தால் ஒப்பில்லை. பகவத்தத்வமும் ஒப்பன்று; "துல்யசீலவயோவ்ருத்தாம்" என்று ஏற்றமாய் நின்றதிறே. [மற்றை நிலமகள்] - அப்படிப்பட்ட நிலமகள். "ஏவம்பூதா"வென்னுமித்தனை. [பிடிக்கும் மெல்லடியை] - அவர்களும் கூசித் தொடவேண்டும்படி ஸுகுமாரமான திருவடிகளை. [கொடுவினையேனும் பிடிக்க] - "அவர்கள் ஸந்நிதியுமுண்டாயிருக்க இழப்பதே!" என்றும் இன்னாப்பாலே சொல்லுகிறார். கண்கள் சிவந்துக்குப் பின்பு நிகர்ஷாநுஸந்தானமில்லை. நிரதிசயபோக்யனும் ஸந்நிஹிதனுமான நீ ஸத்தையை நோக்குகைக்கு ஒருநாள் அங்கே அழைத்தல், இங்கே வருதல் செய்தருளவேணும். வருதல் என்கிற இத்தை முந்துறச் சொல்லாதொழிந்தது, அந்த ஸம்ருத்தியைக் காணவேணுமென்னும் நசையாலே.

ஈடு.—பத்தாம்பாட்டு. நிரதிசயபோக்யமான உன்னுடைய திருவடிகளிலே நானும் வந்து அடிமை செய்யும்படி, என்னை யங்கேயழைத்தல், நீ இங்கேவருதல் செய்யவேணுமென்கிறார்.

[கொடுவினைப்படைகள்வல்லையாய்] நீரிலேநெருப்பெழுந்தாற்போலே, உனக்கு சேஷமாய் வைத்து ப்ரதிகூலித்தவர்கள்பக்கல்சீறி, ஆயுதமெடுக்கவல்லையாய். அவன் மாட்டாதது சிலரையழியச் செய்கையாயிற்று; "யதிவா ராவணஸ் ஸ்வயம்" என்னுமவனிறே. கடலையுள்ள

விஸ்மயநீயமான ஜலத்தையுடைய திருப்பொருநலையுடைத்தான திருவழுதிவளநாட்டையுடைய ஆழ்வார். [காவியல் பாடல்] - மனஸ்ஸஹாரமின்றிக்கே சொன்னதல்ல. [ஆயிரத்துளிவையும் பத்தும் வல்லார்கள்] - விலக்ஷணமான இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லார், ஆச்ரிதஸுலபனுடைய திருவடிகளை நிரந்தரமாக ஹ்ருதயத்திலே அநுபவிக்கப்பெறுவர். "யதிநாசம் ந விந்தேத தாவதாऽஸ்மி க்ருதீ ஸதா" என்று இதுதன்னைப் பேறாகச் சொல்லிற்றிறே. ஆராவமுதில் ஆர்த்தரக்ஷணம் பண்ணு மவன் என்னுடைய ஆர்த்தி தீர்க்கிறிலன் என்றார். இங்கு - பரமபந்துவாய்வைத்து என்னை அங்கீகரித்திலனென்றும், ஏகரூபமாகக் கண்வளர்ந்தருளினால் திருவுடம்பலசாதோ என்றும் இன்னாதாகிறார்.

கூ. —நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார், அவனை நிரந்தரமாக அநுபவிக்கப் பெறுவரென்கிறார்.

[கூவுதல்இத்யாதி] 'குரைகடல்கடைந்தவன் தன்னை கூவுதல்வருதல்செய்திடாய்' என்று ஏற்று இவர்சொல்லிற்று. ஹேதுவொழியுமாம், ஒருமைப்பேயாகவுமாம் காணுமித்தனைபோ வேண்டுவது. [குரைகடலித்யாதி] இவ்வபேக்ஷையில்லாதார்க்கும் உடம்புநோவக் கடல் கடைந்து அம்ருதங்கொடுக்குமவனையாயிற்று இவர் அபேக்ஷித்தது. [மேவிநின்றமர்ந்த] இந்த ஸ்வபாவாநுஸந்தாநத்தாலே பொருந்திக் கால் தரையிலேபாவினராயிற்று. [வியனித்யாதி] விஸ்மயநீயமான நீரையுடைய திருப்பொருநலையுடைய திருவழுதிவளநாட்டுக்கு நிர்வாஹகரான ஆழ்வார். [காவியல்பாடல்] மனஸ்ஸஹகாரமுடையொழியவாயிற்றுச் சொல்லிற்று. [ஓவுதலித்யாதி] ஆச்ரிதஸுலபனானவனுடைய திருவடிகளை நிரந்தரமாக ஹ்ருதயத்திலே அநுபவிக்கப்பெறுவர். இத்தனைபோதும், இவர்தாம் "இவற்றைப்பெறவேணும்" என்னும் அபேக்ஷையோடே, "திருக்கண்களாலே குளிரநோக்கியருளவேணும், திருவடிகளை தலைமேலே வைத்தருளவேணும்; தேவரீர் எழுந்தருளியிருக்குமிருப்பைக்காணவேணும்; சாய்ந்தருளியிருக்கும்படி காணவேணும்; உலாவும்படி காணவேணும்! ஸ்திதம் இருக்கும்படி காணவேணும்" என்று ஆசைப்பட்ட இவர்க்கு அப்போதே கிடையாமையாலே, "இவற்றைப் பெறவேணும்" என்னும் மநோரதந்தானே பேறாய்த் தோற்றிற்று; இத்தையப்யஸித்தவர்களுக்கும் இம்மநோரதம் மாறாதே முடியச்செல்லும் என்கிறார். "யதி நாசம் ந விந்தேத தாவதாऽஸ்மி க்ருதீ ஸதா" என்றபடியே.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## மூன்றுந்திருவாய்மொழி—ஒராயிரம் : ப்ரவேசம்

ஓ—மூன்றும் திருவாய்மொழியில், கீழ்த்திருவாய்மொழியிலே "கூவுதல் வருதல் செய்ய வேணும்" என்று எம்பெருமானை ப்ரார்த்தித்த ஆழ்வார்க்கு, அவனும் "நான் நாராயணனல்லேனோ? நீர் அபேக்ஷித்தபடியே செய்கிறோம்" என்று தன்னுடைய நாராயணத்வத்தைக் காட்டியருள; அந்த நாராயணத்வப்ரகாரத்தை அநுஸந்தித்து "அவனைக் காணவேணும்" என்று ஆசைப்பட்டுக் காணப் பெறுமையாலே பலஹீநராய், "ஸ்ரீநேஹனொருபடி அவனிருந்தவிடத்திலே சென்றாகிலும் அவனுடைய சீலவத்தையின் மிகுதி ... அடிமைசெய்ய விரகில்லை" என்று அவனுடைய ஸௌசீல்யாதிசயத்தைப் பேசிமுடிக்கிறார்.

*உரியனன்றிக்கேயிருக்கையுமிறே ஸ்வரூபம்; அத்தையருளிச் செய்தார் கருமாணிக்கமலையாலே; மேல், நாராயணசப்தார்த்தத்தை யருளிச்செய்தார்—கொண்ட பெண்டிராலே; நாராயணசப்தத்துக்கு அர்த்தம் ஸ்வாமித்வ வாத்ஸல்ய உபாயத்வோபேயத்வ வ்யாபகத்வம் இத்யாதியிறே; மேலே, சதுர்த்யர்த்தத்தை யருளிச்செய்தார் பண்டைநாளாலே; சதுர்த்திக்கு அர்த்தம் கைங்கர்யப்ரார்த்தனையிறே. ப்ரணவார்த்தமும், நமச்சப்தார்த்தமும், வ்யாபகத்வமும், அவ்யாபகத்வமும், அல்லாத வ்யாபகமந்த்ரங்களிலுமுண்டு; அதில், தாம் ஆதரித்தருளித் திருவஷ்டாக்ஷரமென்னுமிடத்தை ஓராயிரத்தாலே யருளிச் செய்கிறார். இது நடுவில் திருவீதிப்பிள்ளை யருளிச்செய்யும்படி.*

**ஓராயிரமாய் உலகேழளிக்கும்***
**பேராயிரங்கொண்டதோர் பீடுடையன்***
**காராயின காளநன்மேனியினன்***
**நாராயணன் நங்கள்பிரானவனே. (1)**

ஒ.—முதற்பாட்டில், "அவன் நாராயணனன்றோ? நம் அபேக்ஷிதஞ்செய்கை நிச்சிதம்" என்று தந்திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறார். [ஓராயிரமென்று தொடங்கி] - "ஐச்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய" இத்யாதி ப்ரகாரத்தாலே ஒரோ திருநாமங்களே நிர்வசநபேதத்தாலே அநேகம்படியாலே எல்லா லோகங்களையும் ரக்ஷிக்கும் திருநாமங்கள் அநேகங்களை உடையனாகையாலே வந்த ஒப்பில்லாத பெருமையை உடையவன். [காராயினவென்று தொடங்கி] - மேகம்போலே கறுத்த திருமேனியை யுடையான். காராயுள்ள கறுத்தழகிய திருமேனியையுடையானென்று ரூபகம். [நாராயணனென்று தொடங்கி] - ப்ரதாநநாமத்தையுடையவனே நமக்கு ரக்ஷகன்.

இ.—முதற்பாட்டில், "அவன் நாராயணனன்றோ? நம்மபேக்ஷிதஞ்செய்கை நிச்சயம்" என்று திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார். [ஓராயிரமாய்] - ஒரோ திருநாமங்களே ஆயிரம் முகத்தாலே ரக்ஷிக்கவற்றாயிருக்கும், "ஐச்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யசஸச்ச்ரிய:" என்று நிர்வசநபேதத்தாலே அநேகம்படி ரக்ஷிக்கவற்றாயிறேயிருப்பது. [உலகு] - ரக்ஷிக்குமிடத்தில் ஒருவொருத்தரையன்றிக்கே லோகமாக ரக்ஷிக்கும். [ஏழு] - அதுதன்னிலும் ஒரு லோகமாத்ரமன்றிக்கே ஸர்வலோகங்களையும் ரக்ஷிக்கும். [அளிக்கும்] - அவன் பாபப்ராசுர்யத்தாலே "க்ஷிபாமி" என்னக்கடவன்; இவை ரக்ஷிக்கையே ஸ்வபாவமாயிருக்கும். [ஆயிரங்கொண்டதோர் பீடுடையன்] - இப்படிப்பட்ட திருநாமங்களை ஆயிரமுடையனாகையாலுண்டான பெருமையையுடையவன்; "தேவோ நாமஸஹஸ்ரவாந்" [காராயின காள நன்மேனியன்] கார்போன்றதென்னுதே, காராயின என்று - ரூபகம். மேகம்போலே கறுத்த திருமேனியையுடையான். [நன்மேனியினன்] - சொன்னது உபமானமன்றென்கை. பெருக்காற்றில் இழிவார் தெப்பங்கொண்டு இழியுமாபோலே ஓர் உபமானம் முன்னாக இழியவேண்டுகையாலே சொன்னித்தனை; உபமானரஹிதமென்கை. [நாராயணன்] - ஆயிரம் திருநாமங்களையுடையவனென்று சொல்லிவைத்து, 'நாராயணன்' - என்று விசேஷிக்கையாலே, இதுவே ஸ்வரூபநிரூபகமென்கை; ஜ்ஞாநசக்த்யாதிகளுக்கு ஆச்ரயமான ஸ்வரூபத்துக்கு ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகள் நிரூபகமாகுமாபோலே. [நங்கள் பிரானவனே] - அவனே நமக்கு ரக்ஷகன். அவதாரணத்தால் தன்பேறாக ரக்ஷிக்குமென்கை. "கூவுதல் வருதல் செய்திடாய்" என்றவிடம் மிகை.

ஈடு.—*முதற்பாட்டு. "அவன் நாராயணனன்றோ? நம் அபேக்ஷிதஞ்செய்கை நிச்சிதம்" என்று திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறார்.*

*[ஓராயிரமாய்] ஒரோரு திருநாமங்களே யாயிரம்முகத்தாலே ரக்ஷிக்கவற்றாயிருக்கும். *ஐச்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யசஸச்ச்ரிய:* என்று நிர்வசநபேதத்தாலே அநேகம்படி ரக்ஷிக்கவற்றாயிறேயிருப்பது. [உலகு] ரக்ஷிக்குமிடத்தில், ஒரோருத்தராகவன்றிக்கேலோக*

இ·—இரண்டாம்பாட்டில், கீழ்ச்சொன்ன நாராயணசப்தத்துக்கு அர்த்த மருளிச்செய்கிறார். அவனே அகல்ஞாலம் படைத்திடந்தான்] - விஸ்த்ருதமான பூமியை ஸ்ருஷ்டித்து, ப்ரளயங்கொண்ட பூமியை மஹாவராஹமாய் எடுத்தவனும் அவனே. அவதாரணத்தாலே, ஸ்ருஷ்ட்யாதிகளில் ஸஹகாரி நைரபேக்ஷ்யம் சொல்லுகிறது. ப்ரளயங்கொள்ளாத பூமியை வயிற்றிலே வைத்து வெளிநாடுகாண வுமிழ்ந்து, அபஹ்ருதமான பூமியை எல்லைநடந்து மீட்டுக்கொண்டான் அவனே. இந்த அவதாரணத்தாலே ஆபத்ஸகத்வாதி ரக்ஷகத்வத்திலும் ஸஹகாரிநைரபேக்ஷ்யஞ் சொல்லுகிறது. [அவனேயவனும் அவனும்அவனும்] - ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களுடைய ஸ்வரூப ஸ்த்திதி ப்ரவ்ருத்திகள் அவனிட்டவழக்கு. "ஸப்ரஹ்ம ஸசிவஸ் ஸேந்த்ர:" "ஸ்ருஷ்டிஸ்த்தித்யந்த" இத்யாதி என்கிற ப்ரமாணப்ரஸித்தியாலே சொல்லுகிறார். [அவனே மற்றெல்லாமும்] - ப்ரதாநரோடு அப்ரதாநரோடு வாசியற ஸகலசேதநாசேதநங்களும் ததீநமே. [அறிந்தனமே] - ப்ரஹ்மாதிகள், "ஈச்வரோஹம்" என்றிருக்கையும் அவர்களே ஆச்ரயிப்பாருமாய்ச் செல்லாநிற்க நீர் 'அவனே' என்கிறது என்கொண்டென்னில் ?—மயர்வறமதிநலமருளப் பெற்றதாலே அறிந்தே னென்கை.

ஈடு—இரண்டாம்பாட்டு, கீழ் ப்ரஸ்துதமான நாராயணசப்தத்துக்கு அர்த்தத்தை யருளிச் செய்கிறார்.

[அவனே அகல்ஞாலம் படைத்திடந்தான்] விஸ்த்ருதமான பூமியையுண்டாக்கி, ப்ரளயங்கொண்ட பூமியை மஹாவராஹமாயெடுத்தானும் அவனே. அவதாரணத்தால் ஸ்ருஷ்ட்யாதிகளில் ஸஹகாரிநைரபேக்ஷ்யஞ் சொல்லுகிறது. [அவனே இத்யாதி] ப்ரளயங்கொள்ளாதபடி பூமியையெடுத்து வயிற்றிலே வைத்து, வெளிநாடுகாணவுமிழ்ந்து, மஹாபலியாலே அபஹ்ருதமாக எல்லைநடந்து மீட்டுக்கொண்டான் அவனே. இந்த அவதாரணத்தால் ஆபத்ஸகத்வாதி ரக்ஷகத்வத்திலும் ஸஹகாரிநைரபேக்ஷ்யஞ் சொல்லுகிறது. [அவனேயித்யாதி] ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகளுடைய ஸ்வரூபஸ்த்திதிப்ரவ்ருத்திகள் அவனிட்டவழக்கு. "ஸ ப்ரஹ்ம ஸ சிவஸ் ஸேந்த்ர:" என்கிற ப்ரஸித்தியைப்பற்றச் சொல்லுகிறார். "ஸ:, ஸ:, ஸ:," என்றே போருகிறார். [அவனே மற்றெல்லாமும்] "ஸோக்ஷர: பரம:ஸ்வராட்" என்கிறபடியே, ப்ரதாநரோடு அப்ரதாநரோடுவாசியற ஸகல சேதநாசேதநங்களும் ததீநமே. [அறிந்தனமே] ப்ரஹ்மாதிகள் "ஈச்வரோஹம்" என்றிருக்கையும், அவர்களே யாச்ரயிப்பாருமாய்ச் செல்லாநிற்க, நீர் 'அவனே' என்கிறது என்கொண்டு என்னில்? மயர்வறமதிநலமருளப் பெற்றதாலே யறிந்தகையாலே. ஆக இரண்டுபாட்டாலும் திருமந்த்ரத்தையும், அதில் அர்த்தத்தையும் அநுஸந்தித்தாராயின்றார்.

அறிந்தனவேத அரும்பொருள் நூல்கள்*
அறிந்தனகொள்க அரும்பொருளாதல்*
அறிந்தனரெல்லாம் அரியைவணங்கி*
அறிந்தனர் நோய்களறுக்கும்மருந்தே. (3)

ஆ·—மூன்றாம்பாட்டில், வேதங்களுக்கும் ருஷிகளுக்கும் அறிய நிலமல்லாத எம்பெருமான் தன்னை எனக்குப் பூர்ணமாக அறிவித்தானென்று ப்ரீதராகிறார். [அறிந்தன வேதமென்று தொடங்கி] - அறிந்தனவாயிருக்கிற துர்ஜ்ஞேயார்த்தப்ரகாசகமான வேதங்கள் ஸர்வேச்வரனை துர்ஜ்ஞேயனென்று அறிந்தன. [அறிந்தனரென்று தொடங்கி] - மற்றறிந்தாராயிருக்கிற ருஷிகளும் ஸர்வாதுரிதபேஷஜமென்று அறிந்தார்கள்.

இ·—மூன்றாம்பாட்டில், வேதங்களும் ருஷிகளும் அறிந்த அளவன்றிக்கே, தன்னை எனக்கே பூர்ணமாக அறிவித்தானென்று ப்ரீதராகிறார். [அறிந்தனவேத அரும்பொருள் நூல்கள்] - துர்ஜ்ஞேயார்த்தத்தை யறிந்தனவாயிருக்கிற வேதங்களாகிற சாஸ்த்ரங்கள் என்னுதல்; அறிந்தனவாயிருக்கிற வேதங்

மன்றிறே சிறிது இடக்கப்போவது. [ஒன்றியிந்யாதி] - பின்னையும் ருசிவாஸனை கிடக்கில், அசித்தத்வத்தோடேபோய்க் கலசி, ஸம்ப்ரயோகாபன்னனீ, அத்தால்வரும் க்லேசம் அநுபவிக்க வேணுமிறே; அதுசெய்யாமை. [உய்யக்கொள்வான் இத்யாதி] - "உயிரளிப்பான்" என்கிறபடியே, ஸர்வரக்ஷணார்த்தமாக அவஸரப்ரதீக்ஷனாய்க்கொண்டு நிற்கிற திருமலை. [நின்னிலத்துள்ளது] - திருமலையை யுடைத்தானபடியாலே ச்லாக்யமான பூமியிலுள்ளது திருமலை, அத்தால் பெற்றதென்? [சென்றி த்யாதி] - அவ்வளவு கால்நடைதந்து போகவல்லார் பாக்யாதிகரிறே; "ந தே மநுஷ்யா தேவாஸ் தே" என்னுமாபோலே, அவனுடைய சீலாதிகுணத்தை யநுஸந்தித்துச் சொல்லுகிறார்- ப்ரேமாந்தர்க்கு அவ்விடத்தோடு இவ்விடத்தோடு வாசியற்றிறே, எட்டாமைக்கு.

தொழுதுமாமலர் நீர்சுடர்தூபங்கொண்டு*
எழுதுமென்னுமிது மிகையாதலின்*
பழுதில்தொல்புகழ் பாம்பணைப்பள்ளியாய்*
தழுவுமாறறியேன் உனதாள்களே. (9)

ஆ.—ஒன்பதாம்பாட்டில், ஏதேனும் ஒருபடி உன்னுடைய திருவடிகளிலே வந்தேனேயாகிலும் "அநுபூத பூர்ணதபாம்ருப்பாம்" என்னும்படியாலே ஸமாச்ரயணோந்முகர்பக்கல் அவர்களுடைய ஆபிமுக்யமாத்ரத்திலே த்ருஷ்டனாந் ஸ்வபாவனான உன்னுடைய சீலத்தையின் மிகுதியாலே அடிமை செய்கை யரிதென்கிறார். [தொழுது மாமலர் என்றுதொடங்கி] - அழகிய புஷ்பாதயுபகரணங்களைக் கொண்டு அடிமைசெய்து உஜ்ஜீவிப்போமென்றால் உன்சீலத்தையாலே இத்தைத்தைக்கு மிகை ஆதலால். [பழுதிலென்று தொடங்கி] - திருவநந்தாழ்வானோடே ஸம்ச்லேஷத்தாலே ஸ்வாராதத்வ ப்ரதையை யுடையவனே! உன்னுடைய திருவடிகளில் அடிமைசெய்யும்விரகு அறிகிறிலேன்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், இப்படி ஸுலபனான உன்திருவடிகளைக் கிட்டப் பெற்றாலும் ஆச்ரயணத்தில் ஆபிமுக்யமாத்ரத்திலே த்ருஷ்டனாம் உன் சீலத்தைவ அநுஸந்தித்து ஒருப்ரவ்ருத்தி பண்ண க்ஷமனாகிறிலேனென்கிறார். [தொழுது இத்யாதி] - "ச்லாக்யமான புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டு அடிமைசெய்து உஜ்ஜீவிப்போம்" என்றால், இது மிகையாம்படியன்றோ உன்னுடைய சீலத்தையிருப்பது? "அர்ப்பத் பூர்ணதபாம்கும்பாத்" என்கிற விஷயமிறே. [ஆதலின்] - இப்படி சீலாதிகனாகையாலே "துராராதன்" என்கிற பழுதின்றிக்கே, ஸ்வாபாவிகமான ஸ்வாராதத்வ ப்ரதையை யுடையையாய், அதுக்குஅடியாக திருவநந்தாழ்வானோடே ஸம்ச்லேஷிக்கிறவனே! உன்திருவடிகளை யணையும்விரகு அறிகிறிலேன். திருவடிகளில் அடிமைசெய்யும்விரகு அறிகிறிலேன். பலனாதியாலே முதலிலே கிட்டுகையரிது. கிட்டினாலும் சீலாதிக்யத்தை அநுஸந்தித்து ஒருப்ரவ்ருத்தி பண்ண க்ஷமனு கிறிலேன். "இப்பாட்டால் அயோக்யதாநுஸந்தாநம் பண்ணுகிறார்" என்பாரும் உண்டு. கண்கள் சிவந்துக்குப் பின்பு அதில்லை. "அவனுடைய உபாயபாவத்தை அநுஸந்தித்து இத்தையால் ஒன்று செய்கை மிகையாயிருக்கிறபடி சொல்லுகிறார்" என்பாருமுண்டு. இவை பக்ஷமன்று.

ஈடு—ஒன்பதாம்பாட்டு. இப்படி ஸுலபனான உன்திருவடிகளிலே கிட்டப்பெற்றாலும், ஆச்ரயணத்தில் ஆபிமுக்யத்திலே ஸந்துஷ்டனாம் உன்சீலவத்தையை யநுஸந்தித்து, ஒரு ப்ரவ்ருத்தி பண்ண க்ஷமனாகிறிலேனென்கிறார். அன்றிக்கே, "இங்ஙனே ஒருமூன்றுபாட்டு தம்முடைய அயோக்யதையைச் சொல்லுகிறார்" என்பாருமுண்டு; அதுஇல்லையிறே கண்கள் சிவந்துக்குப் பின்பு இவர்க்கு. "இத்தலையாலே யொன்றை யத்நித்துப்பெறுகை மிகையாம்படியா யிருக்கிறவனுடைய உபாயபாவத்தைச் சொல்லுகிறார்" என்பாருமுண்டு. இவை யெல்லாமல்ல; "அவன் ஸந்நிதிபிக்ரமத்தில் பரிமாறவொண்ணாதபடி வழிக்கும் அவனுடைய சீலகுணத்தைச் சொல்லுகிறது" என்று நம்முடையவர்கள் நிர்வஹிக்கும்படி.

நில்லாதநுறும் வைத்து ஆசைப்படாநின்றேன் என்றுமாம். [மழைக்கு அன்றென்று தொடங்கி] - பசுக்களும் இடையரும் நோவுபடாதபடி இந்த்ரன் பண்ணின வர்ஷத்துக்கு மலையை எடுத்துப்பரிஹரித்த நின்னுடைய குணத்துக்குப்புறம்பாகாநின்றேன் என்று நோவுபடாநின்றேன்.

இ.—மூன்றாம்பாட்டில், இப்படிக் கூப்பிடச் செய்தேயும் அவன் வாராக்காணாமையாலே ஆர்த்தியே முதலாக ரக்ஷிக்கக்கடவ உன்குணத்துக்குப் புறம்பானேனோ என்கிறார் [அழைக்கின்றவடிநாயேன் இத்யாதி] - அயோக்யனும் கூஷூத்ரனும் பிருந்துவைத்து ஆர்த்தியாலே கூப்பிடாநின்றேன். ருசியாலே தவிரமாட்டார். கிட்டினால் அத்தலைக்கு அவத்யமாம்படியாயிற்று தம்முடைய நிலை. அது தன்னையுடையவனுக்குத் தன் அபிமதத்திலே ருசியைத் தெரிவிப்பது வாலாயமேயாயிற்று; அதுதான் கூழையானால், தெரிவிக்கை அரிதாயிறே; அதுபோலே என்மநஸ்ஸானது நோவுபடாநின்றது. இத்தால், தமக்குநடுகிற க்லேசம் பேச்சுக்கு நிலமன்றென்கை. நில்லாதநுறும் வைத்து ஆசைப்படாநின்றேன் என்றுமாம். [மழைக்கன்று இத்யாதி] - இந்த்ரன்வர்ஷிக்கிற தசையிலே மலையை எடுத்து இடையரையும் பசுக்களையும் ஆர்த்தியே முதலாக ரக்ஷித்தவனே! [பிழைக்கின்ற தருவொன்றுபேசுறுவனே] - "வரையாதே ரக்ஷித்த அந்த மஹாகுணம் எனக்கு உதவாமையாலே பிழைக்கப்புகாநின்றாய் என்று பேசுவனியாநின்றேன் என்று ஆளவந்தார்நிர்வாஹம். "அந்த மஹாகுணத்துக்குப் புறம்பாகிறேனோ என்றஞ்சாநின்றேன்" என்று எம்பெருமானார் அருளிச்செய்வர்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. இப்படிக் கூப்பிடச்செய்தேயும் வரக்காணாமையாலே, ஆர்த்தியை கைம்முதலாக ரக்ஷிக்கக்கடவ உன்குணத்துக்குப் புறம்பானேனோ? என்கிறார்.

[அழைக்கின்றவடிநாயேன் இத்யாதி] அயோக்யனும் க்ஷூத்ரனுமாயிருந்துவைத்து, ஆர்த்தியாலே கூப்பிடாநின்றேன். ருசியாலே தவிரமாட்டார். கிட்டினால் அத்தலைக்கு அவத்யமாம்படியாயிற்றுத் தம்முடைய நிலை. நாம் தன்னையுடையவனுக்குத் தன்னபிமதத்தில் ருசியைத் தெரிவிப்பது வாலாயமேயாயிற்று; அவ்வளவுதான் கூழையானால். தெரிவிக்கையரிதாயிறே; அதுபோலே, என்மநஸ்ஸானது நோவுபடாநின்றது. இத்தால் - தமக்குநடுகிறக்லேசம் பேச்சுக்கு நிலமன்றென்கை. நில்லாதநுறும்வைத்து ஆசைப்படாநின்றேனென்றுமாம். [மழைக்கு இத்யாதி] இந்த்ரன் அசமவர்ஷத்தை வர்ஷிக்கிறவளவிலே, மலையையெடுத்து இடையரையும் பசுக்களையும் ஆர்த்தியே கைம்முதலாக ரக்ஷித்தவனே! [பிழைக்கின்றதருவொன்றுபேசுறுவனே] 'வரையாதே ரக்ஷித்தமஹாகுணம் எனக்கு உதவாமையாலே பிழைக்கப்புகாநின்றாய்' என்று பேசுவனியாநின்றேன்" என்று ஆளவந்தார் அருளிச்செய்யும்படி. அதனை எம்பெருமானார் கேட்டருளி, "இது, பொருளழகிது; ஆனால் இப்போது இவர்க்குநடுகிற தசைக்குச் சேராது; ஆனபின்பு, 'பசுக்களும் இடையரும் வர்ஷத்திலே நோவுபடாதபடி மலையையெடுத்துநிறுத்த இம்மஹாகுணத்துக்கு நான் புறம்பாய்விடுவனோ?' என்று பேதுறுகின்றேன்" என்று.

உறுவதுவென்று உனக்காட்பட்டு *நின்கண்
பெறுவதுவேதென்று பேதையேன் நெஞ்சம்*
மறுகல்செய்யும் வானவர்தானவர்க்கென்றும் *
அறிவதரிய அரியாயவம்மானே. (4)

ஒ.— நாலாம்பாட்டில், தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும், அறியவரியராய்க் காண்கை பாரிக்கின்ற நெஞ்சு கலங்காநின்றது என்கிறார். [உறுவதுவென்று தொடங்கி] - இது பரமப்ராப்யமானதும் என்று அடிமைபுகுந்து, உன்பக்கல் அடிமைசெய்யப் பெற்றேனே என்று மிகவும் முக்தமான என்னுடைய ஹ்ருதயமானது கலங்காநின்றது; தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் என்று சோதித்து அறியவொண்ணாத நரஸிம்ஹமான ஸர்வேச்வரனே!

விஷயீகரித்தாப் போலே என்னை விஷயீகரித்தவன் என்கை. இப்படி விஷயீகரிக்கைக்கு இத்தலையில் என்னநன்மையுண்டென்னில்? - [குன்றுமலித்யாதி] - குணகுணநிரூபணம் பண்ணாதே திருவுலகளந்தருளினாப் போலே நிர்ஹேதுகமாக என்கிறார். தன்பெருமையையும் ஸௌலப்யத்தையும் என்னை அநுபவிப்பித்தான். [அடைந்தடியேன் உய்ந்தவாறே] - சேஷத்வமே ஹேதுவாக உஜ்ஜீவித்தபடியென்? சேஷத்வஜ்ஞாநத்துக்கு இத்தனை ப்ரயோஜநமுண்டோ?

௧௦.—பத்தாம்பாட்டு. இப்படி அவனைப்பெற்று க்ருதார்த்தனானேனென்கிறார்.

[அடியானிவனென்று] மேல் பண்ணப்புகுகிற ஔதார்யம் ப்ராப்தமென்று சொல்லுகைக்காக, அடியானென்று ஒருபேரையிட்டாயிற்று உபகரித்தது. [எனக்காரருள் செய்யும் நெடியானை] கொள்ளுகிறவென்னளவன்றிக்கே, தன்னளவிலே யுபகரித்த ஸர்வேச்வரனை, "அருள்பெறுவார் அடியார்" இறே. புத்ரர்களுக்கு அம்சமேயிறேயுள்ளது; எல்லாவற்றிலும் கூறுண்டாயிருக்குமிறே யடியார்க்கு. பின்னை யசஜங்கப்ரஹ்மராயர், பட்டரை ஸமாச்ரயணம் பண்ணவேணும் என்று, "இருகைமதவாரணம்" என்கிறவனை வரக்காட்டினாராய், "அவனைத் திருவுள்ளத்திலே விஷயீகரித்திருப்பர்" என்னுமக்கைப்பற்ற; அவனும்வந்து சிலவார்த்தை களை விண்ணப்பஞ்செய்து, திருவுள்ளமும் ப்ரஸந்நமாயிருக்கிறவளவிலே "இவனுடைய வைலக்ஷண்யத்தையிருக்கும்படி திருவுள்ளம் பற்றியிருக்கையுண்டே" என்றார்களாய்; "சொல்ல வேணுமோ, கர்ப்பதாஸர்களன்றோ" என்றது தொடக்கமாக இப்பாட்டை யருளிச்செய்தார். [ஆரருள்செய்யும்] பெறுகிற என்னளவிலேயன்றிக்கே, தருகிற தன்னளவிலே தந்தான். தனக்கனவுதானென்னென்னு? [நெடியானை] "ஸர்வேச்வரன்" என்னுமித்தனை. [நிறைபுகழாதி] இதுதான் நான் இன்றிருந்து உபபாதிக்கவேண்டியிருந்ததோ! கட்டிக்கொண்டிருக்கிற கொடியிலே தெரியாதோ? சௌர்யவீர்யாதி குணப்ரதையையுடையனாய் நிரந்தரபகவதநுபவத்தாலே தர்சநீயமான வேஷத்தையுடையனாயிருக்கிற பெரிய திருவடியை த்வஜமாகவுடையவனை. பெரியதிருவடியை விஷயீகரித்தாப்போலே என்னை விஷயீகரித்தவனை. இப்படி விஷயீகரிக்கைக்கு இத்தலையில் என்னநன்மையுண்டென்னில்? [குன்றமதுலகமளந்தஅடியானை] குணகுணநிரூபணம்பண்ணாதே திருவுலகளந்தருளினாப்போலே, நிர்ஹேதுகமாகவென்கிறார். ஓரடியுங்குறையாமே பூமிப்பரப்பை யளந்துகொண்ட திருவடிகளையுடையவனை. தன் பெருமையையும், ஸௌலப்யத்தையும் என்னை யநுபவிப்பித்தான். [அடைந்தடியேன் உய்ந்தவாறே] சேஷத்வமே ஹேதுவாக உஜ்ஜீவித்தபடியென்? சேஷத்வ ஜ்ஞாநத்துக்கு இத்தனை ப்ரயோஜநமுண்டோ?

ஆருமதயானை யடர்த்தவன்தன்னை*
சேரூர்வயல் தென்குருகூர்ச்சடகோபன்*
நூற்றேட்டன்ன ஓராயிரத்துளிப்பத்தும்*
ஏறேதரும் வானவர்தமின்னுயிர்க்கே. (11)

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி தன்னுடைய ரஸ்யதையாலே அமரர்களுடைய ஹ்ருதயத்தை நோவுபடுத்துமென்கிறார். [ஆருமதயானையடர்த்தவன்தன்னை] - குவலயாபீடத்தை முறித்தாப்போலே நம்முடைய துரிதத்தைப் போக்கினவனை. [சேரூர்வயலென்றுமேதுக்கு] - ப்ரதிபக்ஷம் போனவாறே ஸம்ருத்தமான திருநகரியையுடைய ஆழ்வார் பாரதராமாயணாதிகளில் காண்ட பர்வாதிபேதம்போலே தரிப்பார்க்கெளிதாம்படி நூறுநூறாக அருளிச்செய்த ஆயிரந்திருவாய்மொழியிலும், இத்திருவாய்மொழி வானவர்தம் இன் உயிர்க்கு ஏறுனவனைத் தருமென்றுத் சொல்லுவர்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி தன்போக்யதையாலே நித்யஸூரிகளுடைய ஹ்ருதயத்தை நோவுபடுத்துமென்கிறார். [ஆருமித்யாதி] - ஒருநாளும்மாறாத மதத்தையுடைய குவலயாபீடத்தை

8

நிரஸித்தவனை; அத்தை நிரஸித்தாப்போலே என் விரோதியைப் போக்கினவனை. ப்ரதிபக்ஷம் போன வாறே ஸம்ருத்தமான திருநகரியையுடைய ஆழ்வார். [நூறே சொன்னவாயிரம்] - கிழிகிழியாகக் கொடுப் பாரைப்போலே நூறுநூறாக அருளிச்செய்தபடி. பாரதராமாயணாதிகளில் காண்ட பர்வாதிபேதம்போலே தரிப்பார்க்கெளிதாம்படி செய்தாரென்கை. இத்திருவாய்மொழி நித்யஸூரிகள்ஹ்ருதயத்தைப் புண்படுத்து மென்னுதல்; நித்யஸூரிகளுக்கு ஏறான ஸர்வேச்வரனைத் தருமென்னுதல்.

*௩௫.—பதினோராம்பாட்டு. நிகமத்தில், இத்திருவாய்மொழி, தன்போக்யதையாலே நித்யஸூரிகள்ஹ்ருதயத்தை நோவுபடுத்துமென்கிறார்.*

*[ஆருமதயானை யடர்த்தவன்தன்னை] ஒருநாளும் மாறாத மதத்தையுடைய குவலயா பீடத்தை நிரஸித்தவனை. அத்தைநிரஸித்தாப்போலே என்விரோதியைப்போக்கினவனை. [சேறார்வயல்] குவலயாபீடமோதான், திருநகரியில் வயலைப்புழுவது நடுவதாகவொட்டாதே கிடந்தது! [நூறேசொன்னவோராயிரம்] கிழிகிழியாகக்கொடுப்பாரைப்போலே, நூறுநூறாகச் சொன்னபடி. பாரதராமாயணாதிகளில் காண்டபர்வாதிபேதம்போலே, தரிப்பார்க்கு எளிதாம் படி செய்தாரென்கை. இத்திருவாய்மொழி நித்யஸூரிகள்ஹ்ருதயத்தைப் புண்படுத்து மென்னுதல்; நித்யஸூரிகளுக்கு ஏறான ஸர்வேச்வரனைத்தரு மென்னுதல்.*

*ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.*

## ஐந்தாந் திருவாய்மொழி—இன்னுயிர் : ப்ரவேசம்

௭.—அஞ்சாந் திருவாய்மொழியில், கீழ்த்திருவாய்மொழியில் எம்பெருமானை ஸாக்ஷாத்கரித்து ப்ரீதராய், பாஹ்யஸம்ச்லேஷத்திலே ப்ரவ்ருத்தராய், அப்போதே தம் அபேக்ஷிதம் பெறாமையாலே மிகவும் அவஸந்நராய், தமக்கோடுகிற வ்யஸநம் பொறுக்குமளவன்றிக்கே லௌகிக பதார்த்தாநுஸந் தாநத்தாலே ஹ்ருதயத்தை அந்யபரமாக்கித் தரிக்கவேணும் என்று அவற்றையநுஸந்திக்கப்புக, அவை யும் அவனுக்கு ஸ்மாரகமாக அவற்றாலே மிகவும் நோவுபட்ட ஆழ்வார் தம்முடைய தசையை அந்யாப தேசத்தாலே பேசுகிறார் : எம்பெருமானைப் பிரிந்து நோவுபடுகிறாளொரு பிராட்டி, பெருவிடாய் பட் டார்க்குத் தண்ணீர் குடித்ததாறுதே அதிலேமிகவும் அபேக்ஷை பிறக்குமாபோலே பண்டை ஸம்ச்லேஷ மும் மிகவும் த்ருஷ்ணை பிறந்து நோவுபடுகைக்கு உடலாய், அவனைக் காணப்பெறாமையாலே போதுபோ காமே ஒருபடி போதுபோக்குகைக்காகத் தன்னுடைய நிரதிசய போக்யமான உத்யானத்திலேசென்று புக்கு, பரஸ்பர போகப்ரவணமாய் மிதுநமாய்க்கொண்டு வர்த்திக்கிற பக்ஷிகளுடைய வடிவுகளையும் ப்ரவ் ருத்திகளையும் பேச்சுக்களையும் அநுஸந்தித்து, அவை எம்பெருமானோட்டைக் கலவியையும் அவன் தன்னையும் ஸ்மரிப்பிக்க அத்தாலே மிகவும் கலங்கி, "என்னை முடிக்கைக்கு உபாயம் விச்லேஷம்" என்று பார்த்து விச்லேஷந்தான் ஸம்ச்லேஷத்தை யொழியக் கூடாமையாலே அதுக்காக என்னோடே கலந்து பிரிந்தவிடத்திலும் நான் முடியாமையாலே, "நாம் முகங்காட்டாதே நமக்கு ஸ்மாரகமான பதார்த்தங்களைப் போகக்காட்ட அவற்றைக்கண்டு இவள்முடியும்" என்றுபார்த்து இவன் வரக்காட்ட வந்தனவாகக்கொண்டு, "முசல்வேட்டைக்கு அரணைப்பண்ணினாப்போலே என்னை முடிக்கைக்கு இத்தனை பாரிப்புவேணுமோ ?" என்று மிகவும்நொந்து கத்யந்தரமில்லாமையாலே பகவத்குணா நுஸந்தாதாலே தரிக்கிறாள்.

இ—அஞ்சாம் திருவாய்மொழியில், கீழ்த்திருவாய்மொழியிலே அவனை ஸாக்ஷாத்கரித்து ப்ரீதராய் பாஹ்யஸம்ச்லேஷத்திலே ப்ரவ்ருத்தராய் அப்போதே கண்ணாலே காணுதல், அணைத்தல், வார்த்தைசொல்லக் கேட்டல் செய்யப் பெறாமையாலே அவஸந்நராய், "லௌகிகபதார்த்தாநுஸந்தானத்தாலே ஹ்ருதயத்தை அந்யபரமாக்கித் தரிக்கவேணும்" என்று அவற்றை அநுஸந்திக்கப்புக, அவையும் அவனுக்கு ஸ்மாரகமாக, அவற்றாலே நோவுபட்டவர் தம்முடைய தசையை அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறார். "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்றவர் தம்ப்ராணரக்ஷணத்துக்கு ஒரு திர்யக்கின் காலிலே விழுகிறாரிறே. "அடியேன் உய்ந்தவாறே" என்றவர், ஸ்மாரகங்கள் கையிலே நோவுபடும்படியாய் விழுந்ததிறே. கலந்துபிரிந்து நோவுபடுவாளொருபிராட்டி, அவன் வரக்காணாமையாலே லௌகிகபதார்த்த தர்சநத்தாலே போதுபோக்குகைக்காகத் தன்னுடைய உத்யானவனத்திலே புக்கு, போகப்ரவணமாய் மிதுநமாயிருக்கிற பக்ஷிகளுடைய வடிவுகளையும், ப்ரவ்ருத்திகளையும், பேச்சுக்களையுங்கண்டு, "இவை அவனோட்டைக் கலவிக்கும், அவன் வடிவுக்கும், பேச்சுக்கும்ஸ்மாரகமாய் நலிய இவற்றுக்கு நம்மோடு பகை பெரிதன்று; அவன் வரவிட்டவையாகவேணும்; அவன்தான் நம்மை முடிக்கைக்கு உபாயம் விச்லேஷமென்றுபார்த்து, அதுதான் ஸம்ச்லேஷத்தையொழியக் கூடாமையாலே அதுக்காகக்கலந்து பிரிந்தான்; நாம் அவ்வளவிலும் முடியாமையாலே சென்றற்ற ஸமயத்திலே, ஸ்மாரகங்களைமுன்னிட இவள்முடியுமென்று பார்த்து அவன் வரக்காட்ட வந்தன" என்கொண்டு "என்னை முடிக்கைக்கு முதலிலேயோடக்கு அறியப்பன்னிருப்பாரோ இத்தனை பரிப்புவேணுமோ?" என்று சொல்லி கந்தராமின்மையாலே அவன்குணங்களைப் அநுஸந்தித்து தரித்தளாய்த் தலைக்கட்டுகிறது, நம்மைப் பார்த்தால் இழவேயாயிருந்ததேயாகிலும் அவனைப்பார்த்தால் இழக்கவேண்டாதபடியிறே அவன்குணங்களிருப்பது.

ஈடு—"தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள்சொன்னேன்" என்று களித்தவர், தம்முடைய ப்ராணரக்ஷணத்துக்கு திர்யக்குக்களின் காலிலேவிழும்படியாயிற்று. "தேவர்கட்கெல்லாம் கருவாகிய கண்ணனைக் கண்டுகொண்டேனே" என்னும்படி வைசத்யம்பிறந்தபோதே, பாஹ்யஸம்ச்லேஷத்திலே அபேக்ஷைபிறந்தது. இவர்க்கு இன்னம் விடாயைப் பிறப்பித்து முகங்காட்டவேணும்" என்று இவர் அபேக்ஷிதத்தைச் சடக்கெனத் தலைக்கட்டிற்றிலன் ஈச்வரன். நினைத்தபோதே அபேக்ஷிதம் பெறாமையாலே தளர்ந்து, "லௌகிகபதார்த்தாநுஸந்தானத்தாலே ஹ்ருதயத்தை அந்யபரமாக்கித் தரிப்போம்" என்றும், "அவனோடு போலியான பதார்த்தங்களைக்கண்டாகிலும் தரிப்போம்" என்றும், லௌகிகபதார்த்தங்களிலே கண்வைத்தார். அவை ஆச்வாஸஹேதுவன்றிக்கே, ஸ்மாரகமாய் பாதகமாகப்புக்கது. ஏதேனுமொருபதார்த்தம் தோற்றிலும், அவற்றினுடையஸத்பாவம் அவனையொழியவில்லாமையாலே, அவனைக்காட்டிக்கொண்டிறே தோற்றுவது.

லௌகிகபதார்த்தங்கள் அவனுக்கு ஸ்மாரகமாய் நலிய, அவற்றால் நோவுபடுகிறபடியை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். எம்பெருமானோடேகலந்து பிரிந்தாளொருபிராட்டி, தன்னாற்றாமையாலே "அவனோடு போலியான பதார்த்தங்களைக்கண்டாகிலும் தரிப்போம்" என்று, அவ்வாற்றாமை கைகொடுக்க உத்யானத்திலே புறப்பட, அங்குண்டான குயில் மயில் தொடக்கமானவை அவனுடைய பேச்சுக்கும் வடிவுக்கும் ஸ்மாரகமாய்நலிய, "இவைநலிகைக்கு இவற்றோடு நமக்கொருபகையில்லை, இவை நலிகைக்கு ஓரடியுண்டாகவேணும்; அவன் நம்மை 'முடிக்கவேணும்' என்று பார்த்தான்; 'அதுக்கு உபாயம் விச்லேஷம்' என்றுபார்த்து பிரிவு கலவியை யொழியக்கூடாமையாலே கலந்தான், பிரிந்தான், பிரிந்தவிடத்திலும் நாம் முடியாதிருந்தோம், பிரிந்து நோவுபட்டிருக்கிற ஸமயத்திலே நம்மோடுபோலியான பதார்த்தங்களைக்காட்டி முடிப்போம்' என்று பார்த்து வரவிட்டானித்தனை; உங்களுக்கு மிகவு இதுவாயில் இப்பரிப்பெல்லாம் வேணுமோ" என்று அவற்றுக்கு வார்த்தைசொல்லி, "நம்மைப்பார்த்தானிறே இப்படிநோவுபடவேண்டுவது? அவனைப் பார்த்தால் நோவுபட வேண்டாவிறே!" என்று அவன் குணஜ்ஞானத்தாலே, வருந்தி தரித்துத் தலைக்கட்டுகிறதாயிருக்கிறது.

ஈடு.—முதற்பாட்டு. சில குயிற்பேடைகளைக்குறித்து, என்னை முடிக்கைக்கு இத்தனை பாரிப்பு வேணுமோ? என்கிறாள்.

[இன்னுயிர்ச்சேவலும்] நற்சேவலான சேவலும். பஹிச்சரப்ராணனைப் போலே கண் வட்டத்திலே வர்த்தியாநிற்கை. பிரிந்துபடுகொலையடிக்கும் சேவலைப்போலன்றிக்கே, பேடைக்கு தாரகமாயிருக்கும் சேவலும் உண்டாகாதே !. போக்யமுமாய் தாரகமுமாயிருக்கும் சேவலுமுண்டாகாதே! ! [நீரும்] சேவலுக்குஇன்னுயிரான நீரும் [கூவிக்கொண்டு] சேர்த்தியைக்காட்டி நலிகிறதுக்கு மேலே, பேச்சாலும் நலியவேணுமோ ?வம்ச்லே ஷார்த்தமாகப் பரஸ்பரகாமக்ரஹணம் பண்ணிக்கொண்டு. [இங்கு எத்தனை] இங்கு அத்தனைக்கு விஷயமுண்டோ ! இங்குப்பிரிவாலே சென்றற்றது, உங்கள்பாரிப்புக்கு விஷயமுண்டோ? *அதிகம் சோபதே* என்னுமாபோலே நலியாநின்றதாயிற்று ; அன்றிக்கே, [எத்தனையென்னுயிர் நோவமிழற்றேன்மின்] பிரிவிலே தளர்ந்திருக்கிற என்னுயிர்நோவ மிகவும் ப்ரணய கூஜிதத்தைப்பண்ணாதேகொள்ளுங்கோள். "உயிர்நோவ" என்கையாலே-உடம்பு பண்டே சென்றற்றதென்கை. ரமசரம்போலே உயிரிலேபுக்குவ்யாபரிக்கவும் வற்றாயிற்று இத்தவலி. "என்னுயிர்" என்கையாலே இவற்றின்பேச்சுக்கேட்கத்தளிர்க்குமவளில் வ்யாவ்ருத்தி. மிழற்றுகையாவது-பிரம்பாமென்சொல் ; ஸம்ச்லேஷதசையில் சொல்லத்தொடங்கித் தலைக்கட்டாத பேச்சுக்கள். [நோவமிழற்றேன்மின்] இப்பேச்சு இவள்செவிப்படில் முடியுமென்றறிந்து, பேசாதிருக்க வேண்டாவோ ! ஸ்த்ரீவதமென்றறிந்தால் மீளவேண்டாவோ ! [குயிற்பேடைகள்] விஜாதீயர்செய்வதை நீங்களுஞ்செய்யவேணுமோ ? சேவலைக்கொண்டு கார்யங்கொள்ள நினைத்தாலும் பேடையின்காலையிறே பிடிப்பது. [என்னுயிர்க்கண்ணபிரானை] "எங்களை காதுகரைச்சொல்லுமாபோலே சொல்லுகிறதென்?" என்றிவளாகக்கொண்டு : எனக்கு தாரகனான க்ருஷ்ணனை வரக்கூவுகிறிலீகோள். தாரகங்கள், வ்யக்திதோறும் வ்யவஸ்திதங்களாயிறே யிருப்பது. திர்யக்குக்களுக்கு த்ருணம், மநுஷ்யர்களுக்கு அந்நம், தேவர்களுக்கு அம்ருதம், இவளுக்கு க்ருஷ்ணன்; "எல்லாங்கண்ணன்"என்றிறே [கண்ணபிரான்] பரார்த்தமாகத் தன்னை ஒக்கி வைக்குமவன். [நீர்] அவ்யபதிஷ் ரஸமறியும் நீங்கள் வ்யதிரேகத்தில் நோவும்அறியவேண்டாவோ ? [வரக்கூவுகிலீர்] நீங்கள் அவன்முன்னே சென்று த்வநித்திகோளாகில், தானே செல்லாமையைநினைத்து வாரானோ? அதுசெய்கிறிலீகோள். என்னைநலியவேண்டுவன செய்திகோள்இத்தனை. நானும்அவனும் சேருகைக்குவேண்டுவன செய்திலீகோள். அழிக்க வல்லவை சேர்க்கவும்வற்று என்றிருக்கிறாள். இவற்றின்வாயது வாணுனென்றிருக்கிறாள். [என்னுயிர்கூவிக்கொடுப்பார்க்குமித்தனைவேண்டுமோ] என்னையும் அவனையுஞ்சேர்க்கிறிகோளல்லாதபின்பு, இனியென்னை முடிக்கையாயிருக்குமிறே உங்களுக்குக்கருத்து ; அதுக்கு இப்பாரிப்பெல்லாம்வேணுமோ? பண்டே சென்றற்ற என்னுயிரை வாங்கி அவன்கையிலே கொடுக்கையாகில்கருத்து, அதுக்கு இதெல்லாம்வேணுமோ? நீங்கள்சேரவிருக்கையும் கலக்கையும் அந்யோந்யகாமக்ரஹணம் பண்ணுகையும் ப்ரணயகத்கதத்வநியும், இதெல்லாம் வேணுமோ? சொத்தாரைஜீவிப்பிக்கையன்றோஅரிது? முடிக்கையில் பணியுண்டோ ?

இத்தனைவேண்டுவதன்றந்தோ ! அன்றிற்பேடைகாள்*
எத்தனைநீரும் நுஞ்சேவலும் கரைந்தேங்குதிர்*
வித்தகன்கோவிந்தன் மெய்யனல்லனொருவர்க்கும்*
அத்தனையாமினி யென்னுயிர் அவன்கையதே. (2)

ஈடு.—இரண்டாம்பாட்டில், 'உங்கள்சேவலும் நீங்களுமாய்க்கொண்டு ப்ரணயகூஜிதங்களாலே என்னைநலியாதே கொள்ளுங்கோள் !' என்று சிலஅன்றிற்பேடைகளை தயநீயமாக இரக்கிறாள். [அன்றிற்பேடைகாள்] - 'பெண்பிறந்தீரல்லீரோ ? [எத்தனைநீரும் நுஞ்சேவலுங்கரைந்தேங்குதிர்] - நாங்களென்செய்தோம் !" என்ன, மிகவும் கரைந்து ஏங்காநின்றீகோள். [வித்தகன்கோவிந்தன் மெய்ய

மன்றோ ?'' என்ன. [எவன்சொல்லி] - ப்ரணயதசையிலே உள்ளவாய் எனக்கு துஸ்ஸஹமான சில உக்திகளைப்பண்ணி; அவைசொன்னபாசுரம் தன்வாயால் சொல்லமாட்டுகிறிலன். [நீர்குடைந்து] - ஒன்றிலேயொன்று அவகாஹித்து. [ஆடுதிர்] - பரிமாறுநின்றீர்கோள். ஆட்டம் - நடையாட்டம், [புடைகுழவே] - சுற்றிலே ஸஞ்சரியாநின்றீர்கோள்; அடைமதிட்படுத்துவைக்குச் சுற்றிலே விட்டுக்கொண்டிருப்பாரைப்போலே. செவியைப்புதைத்துப் பிழைப்பேனே! கண்ணைப்புதைத்துப் பிழைப்பேனே! [தவஞ்செய்திலா இத்யாதி], என்னைமுடிக்க நினைத்துவந்த உங்களுக்கு, என்ப்ராணனை இங்கேவைத்துத் தருகைக்கீடான பாக்யத்தைப் பண்ணப்பெற்றிலேன்: கடோரமும்போலே உங்களுக்கு உபகரித்து உங்கள் ப்ரியங்காணப்பெறாத பாபகர்மாவானேன். "அவனைப்போலே பிரிவுக்கு இளையாதபடி பாக்யத்தைப்பண்ணப் பெற்றிலேன்'' என்று பிள்ளான்நிர்வாஹம். [உயிரிங்குண்டோ] - "என்னுயிர்போல ஊழற்றிவன்றே அங்கேபோய்த்தே என் ப்ராணன்; என்பக்கலுண்டோ ?'' என்று விளக்கேற்றிக் காட்டுவாரைப்போலே யிருக்கிறது. [எவன்சொல்லிநிற்றும்] - எத்தைச்சொல்லித் தரிப்போம் ? உங்கள் ஒருப்பாடு இதுவான பின்பு, தரிக்கவிரகுண்டோ ? [நும்மேங்குகூக்குரல் கேட்டுமே] - ப்ரணயபரவசமான உங்களுடைய த்வனியைக்கேட்டும். பிரிவாற்றாமைக்கு தரிக்கிலும் உங்கள் த்வநிக்குப் பிழைக்கவல்லேனோ! உங்கள் த்வநி கேட்டாரைமுடிக்குமதன்றோ! உங்கள்செவியைப் புதைத்தோ நீங்கள் கூப்பிடுவது ? "நிஸ்வநம் சக்ரவாகாநாம் நிசம்ய ஸஹசாரிணாம், புண்டரீகவிசாலாக்ஷ கதமேஷா பவிஷ்யதி'',

ஈடு.—மூன்றாம்பாட்டு. அவ்வன்றிற்பேடைகள் தம்மையே, திரியவும், தன்செயலறுதியைச் சொல்லியிரக்கிறாள்.

[அவன்கைபதே எனதாருயிர்] என் ப்ராணன், அவன்கைபதே. மீளுமோதான் ப்ராணன்கள் மாறுபடியன்றோவிருப்பது? உங்களுக்கு இது அப்யுத்பந்நமோ? [அன்றிற் பேடைகாள்] அவ்வியாபலம்அறிவார், பிரிந்துபடுவதும் அறியவேண்டாவோ ? [எவன் சொல்லி] ஏதேனும் சிலவற்றைச் சொல்லி. அவைசொல்லுகிற பாசுரஞ்சொல்லில் தன்வாய் வேம்போலேகாணும். [நீர்குடைந்து] ஒன்றிலேயொன்று அவகாஹித்து. [ஆடுதிர்] பரிமாறுநின்றீர்கோள். [புடைகுழவே] சுற்றிலே ஸஞ்சரியா நின்றீர்கோள். அடைமதிட்படுத்துவார் சுற்றிலே விட்டுக்கொண்டிருக்குமாபோலே. செவியைப் புதைத்துப் பிழைப்பேனோ! கண்ணைப்புதைத்துப் பிழைப்பேனோ! பெருமாளும் பரிகரமும் லங்கையை யழிக்கைக்குச் சூழப்போந்தாப்போலேகாணும் இவளுக்கு இது இருக்கிறது. பாவியேன்! உங்கள்பரிப்புக்கு இங்கு விஷயமுண்டாகப் பெற்றதில்லை; [தவஞ்செய்திலா] உயிரை இங்கேவைத்து உங்களுக்கு உபகரிக்க பாக்யம்பண்ணிற்றிலேன். "அவனைப்போலே பிரிவுக்குச் சிளையாதபடி பாக்யத்தைப் பண்ணப்பெற்றிலேன்'' என்று பிள்ளான்பணிக்கும். [உயிரிங்குண்டோ] வல்லடிக்காரர்க்கு விளக்கேற்றிக்காட்டுமாபோலேகாணும், "இங்குண்டோ!'' என்று காட்டுகிறபடி. [எவந்சொல்லிநிற்றும்] எத்தைச் சொல்லித்தரிப்பது? [நும்இத்யாதி] ப்ரணயபரவசரான உங்களுடைய த்வநியைக்கேட்டும் பிரிவுக்குத் தரித்திருக்கிலும், உங்கள் த்வநிக்குப் பிழைக்கவல்லேனோ! உங்கள் த்வநி, கேட்டாரை முடிக்குமதன்றோ! உங்கள்செவியைப் புதைத்தோ நீங்கள் கூப்பிடுகிறது! "நிஸ்வநம் சக்ரவாகாநாம் நிசம்ய ஸஹசாரிணாம், புண்டரீக விசாலாக்ஷ கதமேஷா பவிஷ்யதி"

கூக்குரல்கேட்டும் நங்கண்ணன்மாயன்வெளிப்படான்
மேற்கிளைகொள்ளேன்மின் நீரும்சேவல்களுங்கோழிகாள்*
வாக்கும்மனமுங்கருமமும் நமக்காங்கதே*
ஆக்கையும்ஆவியும் அந்தரம்நின்றுழலுமே. (4)

ஈ.—நாலாம்பாட்டில், சிலகோழிகளைக் குறித்து நீங்கள் உச்சமாகக்கூவி என்னைநலியாதே கொள்ளுங்கோள் என்கிறாள். [கூக்குரலென்று தொடங்கி] - உங்களுடைய கூக்குரலைக் கேட்டிருக்கவைத்தும்

நினைவாலே சொல்லுகிறள். அங்கேயாகில், இப்பேச்சும் சேஷ்டிதங்களும் கூடினபடியென்னென்னா? [ஆத்மைகபுமாவிருமந்தரம்பின்னுமிருந்துமே] வ்யவஸாயாஸமைபோலே, தேஹமும் ப்ராணனும் கழிந்து நின்று க்லேசப்படுகிறமித்தனை. பிடித்துவிட்ட கொம்புபோலே வாஸனையேயுள்ளது. போவபடவேண்டுவதுண்டு, நலிகைக்கு ஆச்ரயமில்லை.

அந்தரம்நின்றுழல்கின்ற யானுடைப்பூவைகாள்*
நுந்திறத்தேதுமிடையில்லை குழறேன்மினோ*
இந்திரஞாலங்கள்காட்டி இவ்வேழுலகுங்கொண்ட*
நந்திருமார்வன் நம்மாவியுள்ளை நன்கெண்ணினன். (5)

ஒ.—அஞ்சாம்பாட்டில், தன்னினவாயிருந்து நலிகிற பூவைகளைக்குறித்து, "அவன்தான் என்னை முடிக்கைக்கு அழகிதான விரகுபார்த்தான்; உங்களுக்கு இங்கு விஷயமில்லை" என்கிறள். [அந்தர மென்று தொடங்கி] - நலிகைக்கொரு காரணமின்றிக்கே யிருக்கச் செய்தே, என்னை நலிந்துகொண்டு ஸஞ்சரிக்கிற என்னுடையபூவைகாள்! உங்களுடைய பாரிப்புக்கு என்பக்கல் அவகாசமில்லை. குழறாதே கொள்ளுங்கோள்! [இந்திரஞாலமென்று தொடங்கி] - ப்ரணயித்வ ப்ரஸித்தியையுடையனாயிருந்துள்ள எம்பெருமான் பண்டு இந்தலோகத்தைத் தனக்காக்கிக்கொள்ளுகைக்குச் சிலபொய் செய்தாப்போலே என்னோடேகலந்து பரிமாறுகிறானாகத் தோற்றும்படி சில பொய்களைச் சொல்லி விச்லேஷிக்கை என்னை முடிக்கைக்கு உபாய மென்று அவன்தானே நல்லவிரகு பார்த்தான்; என்னை முடிக்கப் பார்த்த பார்வை, அழகிதாகப் பார்த்தான் என்று தன்னிலே நொந்து சொல்லுகிறளென்றுமாம்.

இ.—அஞ்சாம்பாட்டில், தன்னினவாயிருந்து நலிகிற பூவைகளைக்குறித்து அவன்தான் என்னை முடிக்கைக்கு நல்விரகுபார்த்தான்; இனி உங்களுக்கு இங்கு விஷயமில்லை என்கிறள். [அந்தரம் நின்றுழல்கின்ற] உங்களுக்கு இங்குநலிகைக்கு விஷயமின்றிக்கே யிருக்க நடுவேநின்று வ்யர்த்தமே க்லேசப்படுகிறீர்கோள் இத்தனை. [யானுடைப் பூவைகாள்] - என்னுடைய பூவைகாள்! ஸர்வஸாதாரணரா யிருப்பார் செய்யுமத்தை, சிலர்க்கு ஸ்வம்மாயிருப்பார் செய்யக்கடவதோ? ஸ்வதந்த்ரன் செய்யுமத்தைப் பரதந்த்ரரான நீங்களும் செய்யக்கடவதோ? தான் எனக்கு என்னவஸரமுமாகாதே பாதகமாகைக்கு? அவனும் என்னுடையவனாகையிறே நலிந்தது. கலந்தார் செய்யக்கடவத்தை வளர்த்துப் பிறந்தார் செய்யக்கடவதோ? [நுந்திறத்தேது மிடையில்லை] - உங்கள் இடையாட்டத்தில், என்னைநலிகைக்கு ஓர் அவகாசமில்லை, உங்கள் பாரிப்புக்கு என்பக்கல் ஓர் அவகாசமில்லையென்றுமாம். [குழறேன்மினோ] - அக்ஷரவ்யக்தியாகாத பேச்சைக் காட்டி முடியாதே கொள்ளுங்கோள். "உருவினவாள் உறையிலிடுங்கோள்" என்னுமாப்போலே, கெடுவிகாள்! உங்கள்வாயைப் புதையுங்கோளென்கிறள். [இந்திரஞாலங்கள் காட்டி] - கண்டார்க்கு விடவொண்ணாத வடிவையும், சீலத்தையும், சேஷ்டிதத்தையும் காட்டி. 'இவை மெய்யில்லாமையாலே பொய்காண்' என்கிறள். [ஏழுலகுங்கொண்ட] - பிறருடைமை கொள்ளுமிடத்தில் சோதியாதபடி கொள்ளுமவன். [நந்திருமார்வன்] - ப்ரணயித்வத்தால்வந்த ப்ரஸித்தியை எனக்குக்காட்டி. பிராட்டியோடு பழகிற்றும் ப்ரணயியாயன்று; அத்தைக்காட்டிக் கண்டாரை அகப்படுத்திக்கொள்ளுகைக்காக. சில பொய்களைக்காட்டி மஹாபலிபக்கல் நின்றும் பூமியைக் கொண்டாப்போலே, கலந்து பரிமாறுகிறானென்று தோற்றும்படி சிலபொய்களைச் செய்து விச்லேஷிக்கை, என்னை முடிக்கைக்கு உபாய மென்றுமாம். [நம்மாவியுள்ளை நன்கெண்ணினன்] - நம்மை முடிக்கைக்கு நல்விரகு தானேபார்த்தான். உங்களுக்கு இங்கு அவகாசமில்லை, ஸர்வசக்தியானவன் உத்யோகித்த கார்யத்திலே குறைகிடப்பதாய் அதிலே நீங்கள் ஸஹகரிக்கிறீர்கோளோ? நம்மை முடிக்கப் பார்த்தபார்வை அழகிதாகப் பார்த்தான் என்று தன்னிலே நொந்து சொல்லுகிறள் என்றுமாம்.

ஸ்டு.—அஞ்சாம்பாட்டு. தன்னினவாயிருந்துநலிகிற பூவைகளைக் [illegible]த்து, அவன்தான் என்னை முடிக்கைக்கு நல்ல விரகு பார்த்தான்; இனி உங்களுக்கு [illegible]கு விஷயமில்லை என்கிறள்.

இ.—ஏழாம்பாட்டில், அவன்வடிவுக்குப் போலியான மேகமாலையைக் கண்டு உங்கள்வடிவைக் காட்டி என்னை முடியாதேகொள்ளுங்கோள் என்கிறாள். [கூட்டுண்டு நீங்கியவென்று தொடங்கி]-ஏகதத்த்வம்'' என்னும்படி கலந்து பிரிந்தபின்பு அவனுடைய அவயவசோபையிருந்தபடி என்னுதல் ; இவளோடே கலக்கையாலேவந்த சோபையென்னுதல். [கோலத்தாமரைக்கண் செவ்வாய்] - தர்சநீயமான தாமரை போலேயிருக்கிற கண்களையும் சிவந்தவாயையும் உடையவனும். [வாட்டமில் என்கருமாணிக்கம்] - பிரிந்த பின்பும் மறக்கவொண்ணாதபடி ஸ்பர்சமாய் ஜ்வலிக்கிற நீலரத்நம்போலேயிருக்கிற நிறத்தையுடையவனும்; கலந்தபோது வடிவிற்பிறந்த செவ்வி பிரிந்தபின்பும் அப்படியேயிருக்கிறபடியைச் சொல்லிற்றாகவுமாம் ; இத்தலையை வெறுந்தரையாக்கினபின்பு நிறம் இரட்டித்தபடி. ''நைவ தம்சாக் ந மசகாந்'' என்று அவனிருக்க, அரைக்ஷணம் தாழ்த்தானென்று இவ்வார்த்தையைச் சொல்லுகிறாளிறே ! [கண்ணன் மாயன்போல்] - ஆச்சர்யபூதனான க்ருஷ்ணனைப்போலே ; கலந்தபோது காலைக்கையைப் பிடித்துப் பரிமாறி பவ்யனாயிருந்தபடி. [கோட்டிய இத்யாதி] - வளைந்த வில்லோடே கூடி மின்னுநின்றுள்ள மேகஸமூஹங்காள் ! கௌஸ்துபஸ்தாநீயமிறே மின். [காட்டேன்மின் நும் உரு] - ம்ருத்யுஸத்ருசமான உங்கள் வடிவைக் காட்டாதேகொள்ளுங்கோள். அவ்வடிவைக்கொண்டு அகலவிருந்தவனோடு உங்களோடு வாசியற்றிருந்ததி ! ''அதுவென்'' என்னில் : - [என்னுயிர்க்கு அதுகாலனே] - பண்டே விரகத்தின்ற என்னுடையப்ராணனுக்கு ம்ருத்யு. 'குழாங்கள்காள்' என்றுவைத்து, 'அது' என்கிறது காணமாட்டாமையாலே முகம்மாறிச் சொல்லுகிறாள்.

ஈடு.—ஏழாம்பாட்டு. அவன்வடிவுக்குப்போலியான மேகமாலையைக்கண்டு, உங்கள் வடிவைக்காட்டி என்னை முடியாதேகொள்ளுங்கோள் என்கிறாள்.

[கூட்டுண்டு இத்யாதி] ''ஏகதத்த்வம்'' என்னும்படி கலந்து பிரிந்தபின்பு அவனுடைய அவயவசோபையிருந்தபடி யென்னுதல் ; இவளோட்டைக் கலவியாலேவந்த சோபையென்னுதல். [கோலத்தாமரைக்கண்செவ்வாய்] அழகியதாமரைபோலேயிருக்கிற திருக்கண்களையும் சிவந்த அதரத்தையுமுடையனும். [வாட்டம் இத்யாதி] கலந்தபோதைச் செவ்வி, விரஹத்திலும் தலைச்சாவி வெட்டப்போகிறதில்லை காணும்; இத்தலையை வெறுந்தரையாக்கினபின்பு இரட்டித்தபடி. [என்கருமாணிக்கம்] பிரிந்தபின்பும் மறக்கவொண்ணாதபடி ஜ்வலிக்கிற நீலரத்நம்போலேயிருக்கிற திருநிறத்தையுடையனும். ''நைவ தம்சாந் ந மசகாந்'' என்று அவனிருக்க, அரைக்ஷணம் தாழ்த்தானென்று இவ்வார்த்தையைச் சொல்லுகிறாளிறே! [கண்ணன் மாயன் போல்] ஆச்சர்யபூதனான க்ருஷ்ணனைப்போலே ; கலந்தபோது காலைக்கையைப் பிடித்துப் பரிமாறி பவ்யனாயிருந்தபடி. [கோட்டியவில் இத்யாதி] வளைந்தவில்லோடே கூடி மின்னுநின்றுள்ள மேகஸமூஹங்காள்! கௌஸ்துபம் திருமேனிக்கு ப்ரகாசகமானாப்போலே இராநின்றது மின். [காட்டேன்மின் நும் உரு] ம்ருத்யுஸத்ருசமான உங்கள்வடிவைக் காட்டாதேகொள்ளுங்கோள்! அவ்வடிவைக்கொண்டு அகல இருந்தவனோடு உங்களோடு வாசியில்லையாயிருந்ததீ; ''அதுவென்?'' என்னில்,-[என்னுயிர்க்கு அதுகாலனே] விரஹாக்நிக்கு பண்டே தப்பு அற்ற என்ப்ராணனுக்கு அது ம்ருத்யுவாகாநின்றது. 'குழாங்கள்காள் காட்டேன்மின் நும் உரு' என்று வைத்து 'அது' என்கிறது, காணமாட்டாமை, முகத்தை மாறவைத்துச் சொல்லுகிறாள்.

உயிர்க்கதுகாலனென்று உம்மையானிரந்தேற்கு* நீர்
குயிற்பைதல்காள் கண்ணன் நாமமே குழறிக்கொன்றீர்*
தயிர்ப்பழஞ்சோற்றொடு பாலடிசிலும் தந்து*சொல்
பயிற்றியநல்வளமூட்டினீர் பண்புடையீரே. (8)

ஐ.—எட்டாம்பாட்டில், சிலகுயில்களைக்குறித்து, வேண்டாவென்று ப்ரார்த்திக்க மேன்மேல் திருநாமத்தைச்சொல்லி நலிந்திகோள் ; உங்களை வளர்த்த ப்ரயோஜநம் பெற்றேனிறே என்று இன்னாதாகிறாள் [உயிர்க்கென்று தொடங்கி] -'குயிற்பிள்ளைகாள் ! அவனுடைய திருநாமங்களை நீங்கள்

ஈ.—ஒன்பதாம்பாட்டில், மதுபானமத்தமாய்க்கொண்டு பாடுகிறன சிலவண்டுகளையும் தும்பிகளையும் குறித்து உங்களுடைய த்வநிகள் துஸ்ஸஹமாயிருந்தன. நீங்கள் பாடாதேகொள்ளுங்கோள் என்கிறாள். [பண்புடையென்று தொடங்கி] நீர்மையையுடைய வண்டோடுகூடினதும்பிகாள்! பண்மிழற்றாதேகொள்ளுங்கோள். 'பண்புரை' என்று பாடமானபோது, பண்ணைமுரலாநின்றுள்ள வண்டோடு கூடினது. [புண்புரையென்று தொடங்கி] - புண்ணின் விவரத்திலே வேலைக்கொடு குத்தினாற்போலே மிராநின்றது, உங்களுடைய இனியத்வநிகள். [தண்பெருநீரென்று மேலுக்கு] - குளிர்ந்த நீர்வெள்ளத்திலே பெரிய தாமரைப்பூ அலர்ந்தாற்போலேயாய் அவ்வளவன்றிக்கே பெரிய கண்களையுடைய க்ருஷ்ணன் அவ்வழகைக்காட்டி என்னை மாய்த்துப் பிரிந்துபோனான். குளிர்ந்த நீர்வெள்ளத்தையுடைய தடாகம் தாமரைப் பூத்தாற்போலே பெரியகண்களையுடைய க்ருஷ்ணனென்றுமாம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், மதுபானமத்தமாய்க்கொண்டு பாடுகிறன சில வண்டுகளையும் தும்பிகளையுங் குறித்து உங்கள் த்வநிகள் துஸ்ஸஹமாயிருந்தன நீங்கள் பாடாதேகொள்ளுங்கோள் என்கிறாள். [பண்புடை இத்யாதி] - நீர்மையுடைய வண்டோடேகூடின தும்பிகாள்! பண்மிக்க ஆளத்தியையாதே கொள்ளுங்கோள். 'பண்புரை' - என்று பாடமானபோது பண்பான உரையாய் முரலுகையைச் சொல்லுகிறது; பண்ணைமுரலாநின்ற வென்றுமாம். [புண் இத்யாதி] - புண்ணின் விவரத்திலே வேலைக்கொண்டு குத்தினாற்போலே மிராநின்றது உங்கள் இனியத்வநி. கீழில் பதார்த்தங்களெல்லாங்கூடப் புண்படுத்தின, அதிலே ஊவிகிறன இவை. [தண்பெருநீர் இத்யாதி] - குளிர்ந்து பெரியநீரையுடைய பொய்கையிலே தாமரைப்பூ அலர்ந்தாற்போலேயாய் அவ்வளவன்றிக்கே பெரியகண்களையுடைய க்ருஷ்ணன். [நம் மாவியுண்டெழ நண்ணினான்] - அவ்வழகைக்காட்டி என்னை முடித்துப் பிரிந்துபோனான்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. மதுபானமத்தமாய்ப்பாடுகின்ற சிலவண்டுகளையும் தும்பிகளையுங் குறித்து, உங்கள்த்வநி எனக்கு துஸ்ஸஹமாயிருந்தது, நீங்கள் பாடாதே கொள்ளுங்கோள்! என்கிறாள்.

[பண்புடைவண்டொடுதும்பிகாள்] நீர்மையுடைய வண்டோடேகூடின தும்பிகாள்! [பண்மிழற்றேன்மின்] பண்மிக்க ஆளத்திவையாதேகொள்ளுங்கோள். "பண்புரை" என்று பாடமானபோது, பண்பானவுரையாய், முரலுகைகையைச்சொல்லுகிறது; பண்ணைமுரலாநின்ற வென்றுமாம். [புண்புரைவேல்கொடுகுத்தாலொக்கும் நும் இன்குரல்] முன்பே மற்றையவற்றின் த்வநியாலே புண்பட்டிறேயிருக்கிறது; அதிலே வேலைக்கொடு குத்தினாற் போலேயிராநின்றது உங்கள் த்வநி. [தண்பெருநீர்த்யாதி] குளிர்ந்த பெரியநீரையுடைய பொய்கையிலே தாமரைப்பூ அலர்ந்தாற்போலேயாய் அவ்வளவன்றிக்கே பெரிய கண்ணையுடைய க்ருஷ்ணன் [நம் இத்யாதி] அவ்வடிவழகைக்காட்டி என்னை முடித்துப் பிரிந்துபோனான்.

ஏழு நண்ணி நாமும் நம்வான நாடனோடொன்றினோம்*
பழன நன்னாரைக் குழாங்கள்காள் பயின்றென்னினி*
இழைநல்ல வாக்கையும் பையவே புயக்கற்றது*
தழைநல்லவின்பந் தலைப்பெய்து எங்குந் தழைக்கவே. (10)

ஆ.—பத்தாம்பாட்டில், 'திரளிருக்கிற நாரைக்குழாங்கள் தன்னைமுடிக்க மந்த்ரிக்கிறன வாகக்கொண்டு, 'நான் முடிந்தேன்; இனி நீங்கள் திரண்டு ப்ரயோஜநமென்?' என்கிறாள். [எழு நண்ணியென்று தொடங்கி] -இங்கேயிருந்து அவனை புஜிக்கும் ஆசையைத்தவிர்ந்து, அவன்கருத்தின் படியே நானும்முடிந்தேன்; பழனங்களிலேயிருப்பதுஞ்செய்து நீங்கள்கோலினபடியே முடிக்கவல்ல நாரைக்குழாங்கள்காள்! திரண்டு என், இனி? [இழையென்று தொடங்கி] - விலக்ஷணமான சரீரமும் க்ரமேண பசையற்றது. [தழையென்று தொடங்கி] - இப்படித் தளர்ந்து முடியாநிற்கிறவள், எம்பெருமானுடைய விபூதிஸம்ருத்தமாக என்கிறாள்; நான்பட்ட து:க்கம் ஒருவரும் படாதொழிய வேணும் என்று

தன்னுடைய நோவின் மிகுதியாலே சொல்லுகிறானென்றுமாம். நான் போக, லோகமெல்லாமுடைய என் ஆர்த்திகாணுதே பிழைக்கும்மாகாதே! என்றுமாம்.

இ.—பத்தாம்பாட்டில், திரளவிருக்கிற நாரைக்குழாங்கள் தன்னை முடிக்க மந்த்ரிக்கிறனவாகக் கொண்டு, 'நான்முடிந்தேன்' இனி. நீங்கள் திரண்டு ப்ரயோஜநமென்?, என்கிறான். [எழுமென்னுயிர் இத்யாதி] - போக்கிலே பொருப்பட்டு, நாமும் கம்பாநாடனோடே தோன்றினோம். கடலைக் குளப்படியிலே மடுத்தாற்போலே தன்னையிலக்காக்கி இத்தலையை வெறுந்தரையாக்கித் தன்னைக்கொண்டு அகன்றான். நாமும் அயர்வறுமமரர்கள் அதிபதியோடே ஒருமிடறானோம். நித்யஸூரிகளும் அவனுமாயிருந்து நம்மை முடிக்க எண்ணினபடியே நாமும் இசைந்தோம். அவன் முடிக்கநினைக்க, நாம் ஜீவிக்கவெண்ணி இடக்கைப்புரி முறுக்குகை தவிர்ந்து நாமும் முடிகையிலே துணிந்தோம். நித்யஸூரிகளும் ச்சந்தாநுவர்த்திகளாகையாலே அவன் கருத்தே கருத்தாயிருப்பர்களிறே. [பழனநன்னாரைக் குழாங்கள்காள்] - நீர் நிலங்களிலே வர்த்திப்பதாய், தொடங்கினகார்யம் முடிக்கவல்ல ஸாமர்த்த்யத்தையுடைத்தான நாரைக் குழாங்கள்காள்! [பயின்றெனினி] - திரண்டு ப்ரயோஜநமென்? நான் அவன்கருத்தைப் பின்செல்லா நின்றவனன்றோ; உங்கள் மந்த்ரத்துக்கு ப்ரயோஜநமுண்டோ? முதலிகள் திரள்திரளாகவிருந்து பெருமாளையும் பிராட்டியையுஞ் சேர்க்கைக்கு விரகுபார்த்தாப்போலே, இவை திரள்திரளாக விருந்து தன்னையும் அவனையும் பிரிக்கைக்கு விசாரிக்கிறன என்றிருக்கிறான். "அவன் வேண்டுமவரைச் சேர்க்கையும் வேண்டாதாரை முடிக்கையும், திர்யக்குக்கள் பணி" என்றிருக்குமிறே, ராமாவதாரத்தில் வாஸனையாலே. [வானநாடன்] - 'நாரைக்குழாங்கள்காள், என்கையாலே, உபயவிபூதியும் வேணுமோ ஓர் அபலையை முடிக்கைக்கு! [இழைநல்லவாக்கையும்] - ஆபரணத்தாலே அழகிதான சரீரமென்னுதல், ஆபரணம் பூண்டாப்போலேயிருக்கிற விலக்ஷணசரீரமென்னுதல் [பையவே புயக்கற்றது] - க்ரமேண பசையற்றதென்னுதல், க்ரமத்திலே போகத்தொடங்கிற்றென்னுதல். புயக்கறவென்றுபோதலாதல், புயக்கென்று ஆகர்ஷகத்வமாதல். [நுழைநல்ல இத்யாதி] - ஐச்வர்யவிபூதி ஸம்ருத்தமாகவேணும் என்கிறாள். "கல்கித்தான் காத்தளிக்கும்பொழில்"இறே. "தாந்தாம் முடியநினைப்பார் 'நாடுவாழ்க' என்பாரைப்போலே சொல்லுகிறான்" என்று ஆளவந்தார்நிர்வாஹம். "நான்பட்டபாடு நாடுபடாதொழிய வேணும்" என்று எம்பெருமானார். "என்முடிய என்னார்த்திகாணுதே லோகமடையப் பிழைக்கும்" என்று பட்டர்.

ஈடு.—பத்தாம்பாட்டு. திரளவிருக்கிற நாரைக்குழாங்கள் தன்னைமுடிக்கமந்த்ரிக்கிறன வாகக்கொண்டு, 'நான் முடிந்தேன்; இனி, நீங்கள் திரண்டு ப்ரயோஜநமென்?' என்கிறான்.

[எழுமென்னுயிர்] போக்கிலே பொருப்பட்டு. [நாமும் கம்பாநாடனோடே தோன்றினோம்.] கடலைக் குளப்படியிலே மடுத்தாற்போலே தன்னை யிலக்காக்கி இத்தலையை வெறுந்தரையாக்கித் தன்னைக்கொண்டு அகன்றான். நாமும் அயர்வறுமமரர்கள் அதிபதியோடே ஒருமிடறானோம். நித்யஸூரிகளும் அவனுமாகவிருந்து நம்மைமுடிக்க எண்ணினபடியே நாமும் இசைந்தோம். அவன் முடிக்க நினைக்க, நாம் ஜீவிக்கவெண்ணி, இடக்கைப்புரி முறுக்குகை தவிர்ந்து நாமும் முடிகையிலே துணிந்தோம். நித்யஸூரிகளும் ச்சந்தாநுவர்த்திகளாகையாலே, அவன் கருத்தே கருத்தாயிருப்பர்களிறே. [பழனநன்னாரைக் குழாங்கள்காள்] நீர்நிலங்களிலே வர்த்திப்பனவாய்த் தொடங்கின கார்யம் முடிக்கவல்ல ஸாமர்த்த்யத்தையுடைத்தான நாரைக்குழாங்கள்காள்! [பயின்றெனினி] இனி நீங்கள் திரண்டு ப்ரயோஜநமென்? நான் அவன்கருத்தைப் பின் செல்லாதவனன்றோ உங்கள் மந்த்ரத்துக்கு ப்ரயோஜநமுள்ளது? முதலிகள் திரள்திரளாக விருந்து பெருமாளையும் பிராட்டியையுஞ் சேர்க்கைக்கு விரகுபார்த்தாப்போலே இவை திரள்திரளாக விருந்து தன்னையும் அவனையும் பிரிக்கைக்கு விரகு பார்க்கிறன வென்றிருக்கிறான். "அவன் வேண்டுவாரைச் சேர்க்கையும் வேண்டாதாரை முடிக்கையும், திர்யக்குகளுக்குப் பணி" என்றிருக்குமிறே, ராமாவதாரத்தில் வாஸனையாலே. 'வானநாடன் - நாரைக்குழாங்கள்காள்' என்கையாலே, உபயவிபூதியும் வேணுமோ ஓரபலையை முடிக்கைக்கு? [இழைநல்லவாக்கையும்] ஆபரணத்தாலே அழகிதான சரீரமென்னுதல், ஆபரணம் பூண்டாப்போலேயிருக்கிற விலக்ஷணசரீர மென்னுதல். [பையவே புயக்கற்றது] க்ரமேண பசையற்றதென்னுதல், க்ரமத்திலே போகத்தொடங்கிற்றென்னுதல், புயக்கறவென்று - போதலாதல், புயக்கென்று—

பாரித்த என்பக்கலிலே புகுந்து. [உருவமும்] - இவர் முதலிலே "அழுக்குடம்பு" என்றதை விரும்பாநின்றான். இவர் த்யாஜ்யமென்றிருக்கிறத்தை உத்தேச்யமென்றிராநின்றான். இவர்தாமன்றி இவர் அபிமானித்தது அமையாதோ என்றிராநின்றான். [ஆருயிரும்] - அபர்யவஸாந வ்ருத்தியாலே தத்பர்யந்த வைலக்ஷண்யத்திராமையாலே, ஆத்மவஸ்துவையும் விரும்புகிறான் இத்தனை. [உடனேயுண்டான்] - புஜிக்கும் பீடத்தில் வாசி வைத்து புஜித்தானாகாதோ! [உண்டான்] - போக்தா தானேயானான், எனக்கு அவகாசம் வைத்திலன். [திருவளர் இத்யாதி] - தான் போக்தாவாய் புஜித்தமை அவ்வூர்ச்சோலையும் வடிவும் கேட்டுச்சொல்லித்தரும் அழகுவளராநின்றுள்ள சோலை. [கருவளர்மேனி] - கறுப்புவளராநின்றுள்ள வடிவு. "ஸ்மைதகருபம்" என்று சொல்லுமது கண்டிலோமே. [நங்கண்ணன்] - ஆச்ரிதபவ்யனான க்ருஷ்ணன். [கள்வங்களே] - முகப்பில் ஒன்றாய், முடிவில் ஒன்றாயிருக்கும் ப்ரவ்ருத்திகள். அடிமை கொள்வாரைப் போலே புகுந்து தான் வியாம்யனாய்த் தாழநிற்கையும், விரோதியான சரீரத்தைக் கழித்துத் தரவேணுமென்று புகுந்து தேஹாத்மவிவேகம் பண்ணமாட்டாதொழிகையும், போக்யமாய்ப் புகுந்து தானே போக்தாவாகையும், எனக்கு உபகரிக்கிறானாகப் புகுந்து தன்பேறாகத் தலைக்கட்டுகையும், இதுடங்க வடிவில்வேறுபாட்டாலே தோற்றியிருக்கையும். இத்தலையில் ஆத்மாபஹாரத்தைத் தவிர்த்தது தன்னுடைய ஆத்மாபஹாரத்தாலே யாய்த்து.

● ஈடு.—அஞ்சாம்பாட்டு. என்னை அடிமைகொள்வாரைப்போலே புகுந்து, என் சரீரத்தையும் ஆத்மாவையுங்கூட புஜித்தான்; ஒருவன் வ்யாமோஹமிருந்தபடியென்! என்று விஸ்மிதராகிறார்.

[திருவருள்செய்பவன்போல] ஸர்வஸ்வதானம்பண்ணி அடிமைகொள்வாரைப்போலே யாய்த்துப் புகுந்தது. அபராதஸஹராய் தொழுதெழுகைக்கு பெரியவரமதிகமருளுவாரைப்போலே புகுந்தான். 'போல' என்கிறது-என் திறத்தில் செய்ததங்ஙனல்ல; திருவருள் தான்பெற்றானுமிராநின்றான். [என்னுள்புகுந்து] வழுவிலாவடிமைசெய்யப்பாரித்த என்பக்கலிலே புகுந்து. [உருவமும்] முதலிலே "அழுக்குடம்பு" என்றதை விரும்பாநின்றான்: அவன் அங்கீகாரத்துக்கு முன்பு இவர் தேஹத்தையே விரும்பிப்போந்தார்; அவன் இவரை அங்கீகரித்த பின்பு, இவர் தேஹத்தை விரும்பப்புக்கான். இவருக்கு அவனோட்டை ஸஹவாஸம் ஸ்வரூபஜ்ஞானத்துக்கு உடலாயத்து. அவனுக்கு இவரோட்டை ஸம்வாஸம் தேஹாத்மாபிமானத்துக்கு உடலாய்த்து. [உருவமும்] "இவர்தாம்வேணுமோ, இவர் 'என்னது' என்று அபிமானித்ததமையாதோ" என்றிராநின்றான். [ஆருயிரும்] அபர்யவஸாநவ்ருத்தியா ஆத்மாவளவுஞ்செல்லுதல். இதுதான் தத்பர்யந்தமாயல்லதிராமையாலே அவ்வளவுஞ் செல்லுதல். [உடனேயுண்டான்] அதுதன்னிலும் வாசிவைத்துபுஜித்திலன். [உண்டான்] எனக்கு அவகாசம் வையாதே தானே போக்தாவானான். [திருவளர்சோலைத் தென்காட்கரையென்னப்பன்] தானேபோக்தாவாய்புஜித்தமை, அவ்வூரிற்சோலையும் வடிவும் கேட்டுச்சொல்லித்தரும். அழகுவளராநின்றுள்ள சோலை. [கருவளர்மேனி] கறுப்புவளராநின்றுள்ள வடிவு. "ஸ்மைதகருபம்" என்கிறது, இவ்வளவிற் கண்டிலோம். [நங்கண்ணன்] ஆச்ரிதபவ்யனான க்ருஷ்ணன். [கள்வங்கள்] முகப்பில் ஒன்றாய், முடிவில் ஒன்றாயிருக்கும் வ்ருத்திகள்: அடிமைகொள்வாரைப் போலேபுகுந்து தான் வியாம்யனாய்த்தாழநிற்கையும், விரோதியான சரீரத்தைக் கழித்துத்தரவென்று புகுந்து தேஹாத்மவிபாகம் பண்ணமாட்டா தொழிகையும், போக்யமாய்ப்புகுந்து தான் போக்தாவாகையும், என்பேறாகப் புகுருகிறானாகப்புகுந்து தன்பேறாகத் தலைக்கட்டுகையும், இதுடங்க வடிவில்வேறுபாட்டாலே தோற்றியிருக்கையும். இத்தலையில் ஆத்மாபஹாரத்தைத் தவிர்த்தது, தன்னுடைய ஆத்மாபஹாரத்தாலே யாய்த்து.

எங்கண்ணன்கள்வம் எனக்குச்செம்மாய்நிற்கும்*
அங்கண்ணனுண்ட என்னாருயிர்க்கோதிது*
புன்கண்மையெய்திப் புலம்பியிராப்பகல்*
என்கண்ணனென்று அவன்காட்கரையேத்துமே. (6)

ஈ.—ஆறும்பாட்டில், என்னை அடிமைகொள்வாரைப்போலே வந்து மிகவும் நலியும் க்ருஷ்ணனுடைய வஞ்சநங்களை அவனைக் கண்டவாறே மெய்யென்றிருப்பன் என்கிறார். [எங்கண்ணன் கள்வமெனக்குச் செம்மாய் நிற்கும்] - 'அவன் வஞ்சகன் என்று ஒருநாளறிந்தால் பின்னைத் தப்பிருவோ ? என்னில்,—எனக்கு பவ்யரைப்போலேயிருக்கிற க்ருஷ்ணனுடைய வஞ்சநங்கள் எனக்கு மெய்யாயிருக்கும் ; செம்மாய் நிற்கு மென்றது - சேமம்போலே யிருக்குமென்றுமாம். [அங்கண்ணனுண்ட என்று தொடங்கி மேலுக்கு] - அதிசபலனானவன் புஜித்த கோதான இவ்வாத்மா மீளவும் உயிர்ப்பெய்து இராப்பகல் "எனக்கு பவ்யனான க்ருஷ்ணனே" என்று கூப்பிட்டு அவன் எழுந்தருளியிருந்த திருக்காட்கரையை ஏத்தாநின்றது. புன்கண்மையாவது - பேகணிப்பு என்றுஞ் சொல்லுவர்.

இ.—ஆறும்பாட்டில், "அவன் க்ருத்ரிமனென்று அறிந்தால் அதிலேவிழுந்து நெஞ்சாறல் படாதே நீர் அகன்றாலோ ?" என்ன; அவனைக் கண்டவாறே அந்த வஞ்சநங்களை மெய்யென்றிருப்பனென்கிறார். [எங்கண்ணனின் இத்யாதி] - எனக்கு பவ்யரைப்போலே யிருக்கிற க்ருஷ்ணனுடைய வஞ்சநம் எனக்குச் செவ்வையாய்த் தோற்றும்; அவன் கனவிலே மகப்பட்டாலும் மீளமாட்டாதே, அவன்முகத்தே விழித்தவாறே அதெல்லாம் எனக்கு மெய்யாயிருக்கும்: "அவன் நமக்கு பவ்யனன்றோ ? என்பக்கல் களவு பரிமாறுமோ ? அவன் செய்ததெல்லாம் எனக்குமெய்" என்றுமாம். சேமம்போலே யிருக்குமென்றுமாம்; நங்கண்ணன் கள்வங்கள் என்று கீழ்முடிய 'எங்கண்ணன்' என்று தொடங்குவானென் ? என்னில், நாமென்றும் யாமென்றும் பர்யாயமாகையாலே பொருளிசை யந்தாதியாயிருக்கிறது. "எங்கண்ணன் கள்வங்கள்" என்று பாடமாகில் நேரே கிடக்கும். [அங்கண்ணனுண்ட] - அதிசபலனானவன் அநுபவித்த; அதிப்ரவணனை "அங்கண்ணன்" என்னக்கடவதிறே. [என்னாருயிர்க்கோது இது] - கோதான என் ஆத்மாவான இது. ஆத்மாவைக் கோதாம்படியாய்த்துப் பரிமாறிற்று. [புன்கண்மை] - பேகணிப்பு. பொல்லா நோக்கை யுடைத்தாய் என்கை. 'மீளவும் உயிர்ப்பெய்து' என்றும் சொல்லிப் போரும். சந்தமும் சப்தார்த்தமும் சேரும்படியென் ? என்று விசாரித்து, "கோதானவாருயிர் பேகணிக்கும்போது மீளவும் உயிர்ப்பெய்ய வேணுமிறே" என்று பின்னை அவிரோதேந நயித்தருளினார். [எங்கண்ணனென்று-இராப்பகல் புலம்பி] - முன்பு எனக்கு பவ்யனான க்ருஷ்ணனென்று அஹோராத்ர விபாகமின்றிக்கே கூப்பிட்டு, அவன் வர்த்திக்கிற திருக்காட்கரையை ஏத்தாகின்றது: "ராகவஸ்ய நிவேசநே" என்னுமாபோலே.

ஊடு.—ஆறும்பாட்டு, "அவன்க்ருத்ரிம னென்றறிந்தால் அதிலேயிடர்ந்து நெஞ்சாறல் படாதே யகன்றாலோ நீர்?" என்ன; அவனைக் கண்டவறே, அவ்வஞ்சனைகளை மெய்யென்றிருப்பன்" என்கிறார்.

[எங்கண்ணன் கள்வ மெனக்குச்செம்மாய்நிற்கும்] எனக்கு பவ்யரைப்போலேயிருக்கிற க்ருஷ்ணனுடைய வஞ்சநங்கள் எனக்குச் செவ்விதாய்த்தோற்றும். ஒருநாள் அவன் கனவிலே யகப்பட்டால் பின்னை மீளமாட்டேன். அவன் முகத்திலே விழித்தவாறே அவன்செய்யுமவை யடைய மெய்யாயிருக்கும் எனக்கு. "எனக்குச்செம்மாய்நிற்கும்" என்றதை, "எனக்குச் சேமமாயிருக்கும்" என்று ஒருதமிழன் நிர்வஹித்தான். "நங்கண்ணன் கள்வங்கள்" என்று கீழ் முடிய, 'எங்கண்ணன்' என்று தொடங்குவானென்னென்னில்; நாமென்றும்யாமென்றும் பர்யாயமாகையாலே, பொருளிசையந்தாதியாயிருக்கிறது. "எங்கண்ணன் கள்வங்கள்" என்று பாடமாகில் நேரே கிடக்கும். [அங்கண்ணனுண்ட] அதிசபலனானவன் அநுபவித்த. அதிப்ரவணனை "அங்கண்ணன்" என்னக்கடவதிறே. [என்னாருயிர்க்கோதிது] கோதான என்னாத்மாவான இது ஆத்மா கோதாம்படிகாணும் பரிமாறிற்று. [புன்கண்மை] பேகணிப்பு; பொல்லா நோக்கை யுடைத்தாயென்கை. "மீளவுயிர்ப்பெய்து" என்றுயர்த்து, நிர்வஹிப்பது. "இது தான் சப்தத்தோடே சேர்ந்திருக்கிறதில்லை, இந்த சந்தமான அர்த்தத்தோடே சப்தத்தையுஞ் சேர வசிப்பிக்கும்படி எங்ஙனே?" என்று விசாரியாநிற்கச் செய்தே, 'கோதான இவ்வுயிரும் புன்கண்மையெய்தும்போது மீளவும் உயிர்ப்பெய்ததாகவேணுமிறே: அர்த்தஸ்வபாவத்தாலே தன்னடையே வரும்' என்று நான் சொன்னேன். ஜீயர் போரப்ரீதராயருளினார்" என்றருளிச் செய்வர். [எங்கண்ணனென்று-இராப்பகல் புலம்பி] முன்பு எனக்கு பவ்யனான க்ருஷ்ண

னென்று அதேஹாராத்ரவிபாகமின்றிக்கே கூப்பிட்டு, அவன்வர்த்திக்கிற திருக்காட்கரையை ஏத்துகின்றது; *ராகவஸ்ய நிவேசநே* என்னுமாபோலே.

காட்கரையேத்தும் அதனுள்கண்ணுவென்னும்*
வேட்கைநோய்கூர நினைந்துகரைந்துகும்*
ஆட்கொள்வானொத் தென்னுயிருண்டமாயனால்*
கோட்குறைபட்டது என்னுருயிர்கோளுண்டே. (7)

ஒ.—ஏழாம்பாட்டில், எம்பெருமான் என்னை யடிமைகொள்வாரைப்போலே வந்து புகுந்து என்னுயிரைமாள புஜித்துப் பின்னையும் புஜியாதாரைப்போலிருக்கும் என்கிறார் [வேட்கைநோய் கூர]-அபிநிவேசம்மிக. [கோட்குறைபட்டது என்னுருயிர் கோளுண்டே] - நிச்சேஷமாக புஜிக்கப்பட்டே பின்னையும் சிறிது சேஷித்தது. தன் ஸாபேக்ஷணுப் போகையாலே.

இ—ஏழாம்பாட்டில், அடிமைகொள்வாரைப்போலே புகுந்து என்னுயிரை நேராக புஜித்து, பின்னையும் புஜியாதாரைப்போலே யிருக்குமென்கிறார். [காட்கரை இத்யாதி] - அவனிலும் அவனிருந்த ஊரையேத்தும். [அதனுட் கண்ணனென்னும்] பரத்வத்திற்காட்டில் அவ்வூரில் புகுந்தபின்பு உண்டான ஏற்றம். “என்கண்ணன்” என்று காட்கரையேத்தும்; அவ்வூரையேத்தா அவன்தன்னையேத்தும்; இரண்டுக்கும் புறம்புபோகிறதில்லை, [வேட்கைநோய் கூரநினைந்து] - அபிநிவேசம் மிகும்படி அநுஸந்தித்து. [கரைந்துகும்] - சிதிலமாய் ஓரவயவியப்ரதிபத்தி பண்ணவொண்ணுதபடி உகும். [ஆட்கொள்வான் இத்யாதி] - அடிமைகொள்வாரைப்போலே புகுந்து, என்னை வெறுந்தரையாக்கின ஆச்சர்யபூதனாலே. கீழே “திருவருள்” என்று மறைத்துச்சொன்ன வார்த்தையை வெளியிடுகிறார். கிட்டினபோது தாழநின்று மின்மினிபறக்கப் பரிமாறும் ஆச்சர்யம். [என்னுருயிர் கோளுண்டே - கோட்குறைபட்டது] - என்னாத்மாவை நிச்சேஷமாக புஜிக்கச்செய்தேயும் இத்தலையிலே சிறிதுசேஷித்தது அவன் ஸாபேக்ஷணுய்ப் போகையாலே இத்தலையிலே சிறிதுசேஷித்தது என்றிருக்கிறார் இப்போதிருந்துக்லேசப்படக் காண்கையாலே சிறிது தொடங்கிற்று உண்டென்றிருக்கிறார். ஒருஸர்வஜ்ஞன் இல்லாததொன்றிலே இத்தனை வ்யாமோஹம் பண்ணக்கூடாதென்றிருக்கிறார்.

ஈடு.—ஏழாம்பாட்டு. அடிமைகொள்வாரைப்போலே புகுந்து, என்னுயிரை நேராக புஜித்துப் பின்னையும் புஜியாதாரைப்போலே இருக்குமென்கிறார்.

[காட்கரையேத்தும்] அவனிலும் அவன்இருந்த ஊரை ஏத்தும். [அதனுள் கண்ணனென்னும்] பரத்வத்திற்காட்டில் அவ்வூரிற் புகுந்தபின்புஉண்டானஏற்றம். “என்கண்ணன்” என்று, காட்கரையேத்தும்; அவ்வூரையேத்தா, அவனையேத்தும்; இரண்டுக்கும் புறம்பு போகிறதில்லை. [வேட்கைநோய்கூரநினைந்து] அபிநிவேசம் மிகும்படி யநுஸந்தித்து. [கரைந்துகும்] சிதிலமாய் ஓரவயவியென்று ப்ரதிபத்திபண்ணுதபடி யுகும். [ஆட்கொள்வானொத்து என்னுயிருண்டமாயனால்] அடிமைகொள்வாரைப்போலே புகுந்து, என்னை வெறுந்தரையாக்கின ஆச்சர்யபூதனாலே; கீழ் “திருவருள்” என்று மறைத்துச் சொன்னத்தை வெளியிடுகிறார். கிட்டினபோது தாழநின்று மின்மினி பறக்கப் பரிமாறின ஆச்சர்யம். [என்னுருயிர் கோளுண்டே கோட்குறைபட்டது] என் ஆத்மாவை நிச்சேஷமாக புஜிக்கச் செய்தேயும் (இத்தலையிலேசிறிது சேஷித்தது:) அவன் ஸாபேக்ஷணுய்ப் போகையாலே, இத்தலையிலே இன்னம் சிறிது சேஷித்ததென்றிருக்கிறார்; இப்போதிருந்து க்லேசப்படக் காண்கையாலே சிறிது தொங்கிற்றுண்டென் றிருக்கிறார். ஒரு ஸர்வஜ்ஞன் இல்லாத தொன்றிலே இத்தனை வ்யாமோஹம் பண்ணக்கூடா தென்றிருக்கிறார்.

கோளுண்டானன்றிவந்து என்னுயிர்தானுண்டான்*
நாளுநாள்வந்து என்னைமுற்றவுந்தானுண்டான்*
காளநீர்மேகத் தென்காட்கரையென்னப்பற்கு*
ஆளன்றேபட்டது என்னுருயிர்பட்டதே* (8)

ஒ.—எட்டாம்பாட்டில், நாள்தோறும் என்னை புஜியாநின்றாலும் பெறுப்பேறுபெற்றுப்போலே வந்து புஜியாநிற்கிற இவனுடைய குணவத்தையொன்றும்பொறுக்கமாட்டுகிறிலேனென்கிறார். [கோளுண்டானென்றுதொடங்கி] - இதற்குமுன்பு இப்படி இருப்பதொன்று பெற்று புஜித்தறியாதாரைப்போலே என்னுயிரைத் தான் அபிநிவிஷ்டனும் புஜித்தான். நிர்ஹேதுகமாகவந்து என்னை விஷயீகரித்தானென்றுஞ் சொல்லுவர்; என்னால் கொள்ளப்படாதாகும் தான் என்னைபுஜிக்குமென்று கருத்து. [நாளுமென்றுதொடங்கி] - இப்படி நாள்தோறும்வந்து என்னை நிச்சேஷமாக புஜித்தான். [காளநீர் மேகமென்று மேலுக்கு]-நிரதிசயபோக்யனான திருக்காட்கரையப்பனுக்கு நான் அடிமையாவது அத்தனையே யன்றோ! என்னை இங்ஙனேபடுத்த வேணுமோ?

இ.—எட்டாம்பாட்டில், நாள்தோறும் என்னை அநுபவியாநின்றாலும் பெறுப்பேறு பெற்றுப்போலே புஜிக்கிற இவனுடைய குணவத்தை பொறுக்கவொண்கிறதில்லை என்கிறார். [கோளுண்டானன்றி வந்து என்னுயிர்தானுண்டான்] - என்பக்கல் ஒரு உபகாரங்கொண்டானன்றிக்கே, நிர்ஹேதுகமாகவந்து என்னாத்மவஸ்துவை அநுபவித்தான். இதுக்குமுன்பு இப்படியிருப்பதொரு சரக்குப் பெற்றறியாதானும் என்பக்கலிலே அபிநிவிஷ்டனுமானானுமாம். தான் என்னால்கொள்ளப்படாதே என்னை புஜித்தானென்றுமாம். [நாளுநாள் வந்து] - ஒருநாள் அநுபவித்து ஸம்மதன்றேயென்று கைவாங்கியிருக்கையன்றிக்கே, நாள்தோறும் நாள்தோறும் அபூர்வமாக அநுபவியாநின்றான். [என்னைமுற்றவுந் தானுண்டான்] - ஸம்ஸாரத்திலே அணுபரிமாணமான இவ்வஸ்துவை விபுவான தான் விளாக்குலைகொண்டு அநுபவித்தானென்கிற இது தனக்கேற்றமாம்படி கௌரவியாநின்றான். "சிறிய வென்னுருயிர்" என்றது - தான் தம்மைப் பார்த்து; அவனுடைய ஆதரத்தைக்கொண்டு சொல்லுகிறார் இது. [காளநீர் மேகத் தென்காட்கரை என்னப்பற்கு] - கறுத்தநீர்கொண்டெழுந்த மேகம் போலேயிருந்துள்ள வடிவையுடையவனும், வர்ஷிக்கைக்கு அம்மேகம் படிந்த ஸ்தலம் போலேயிருக்கிற திருக்காட்கரையிலேவந்து நின்றருளின என்ஸ்வாமிக்கு வடிவது, ஊரது, தனக்கு என்னகுறையுண்டாய் இப்படி ஈடுபடுகிறான்! [ஆளன்றேபட்டது] - அடிமைபுக்கவத்தனையல்லது ராவணாதிகளைப்போலே எதிரம்பு கோத்தேனோ? [என்னுருயிர்பட்டதே] - ஓராத்மவஸ்து படும்பாடே இது! எதிர்த்தார் உடம்பிழுத்தல் புண் பட்டதுக்கு மருந்திட்டாற்றுதல் செய்யுமாவன்றே பட்டது. குணத்தாலே வரும் நோவு ஸ்வரூபகதமாய்ப் பரிஹாரமில்லையிறே.

ஈடு.—எட்டாம்பாட்டு. நாள்தோறும் என்னையநுபவியாநின்றாலும் பெறுப் பேறு பெற்றுப் போலே புஜிக்கிற இவனுடையகுணவத்தை பொறுக்கவொண்ணுகிறதில்லையென்கிறார்.

[கோளுண்டானன்றிவந் தென்னுயிர்தானுண்டான்] இதுக்குப்பலபடியும் அருளிச்செய்வர். என்பக்கல் ஒரு உபகாரங்கொண்டன்றிக்கே நிர்ஹேதுகமாக என்னாத்மவஸ்துவை யநுபவித்தான்; அதவா, இதுக்குமுன்பு இப்படியிருப்பதொரு சரக்குப்பெற்றறியாதானும் என்பக்கலிலே அபிநிவிஷ்டனானானென்றுமாம்; என்னால் தான்கொள்ளப்படாதிருக்க, தான் என்னைக் கைக்கொண்டானென்னுதல். [நாளுநாள்வந்து] ஒருகால் புஜித்து "இனி இதனாம் புஜித்ததன்றோ?" என்று கைவாங்கியிருந்தானோ? நாள்தோறும்நாள்தோறும் வந்து. அவனுடைய அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதம்இருக்கிறபடி. [என்னைமுற்றவுந் தானுண்டான்] அணுபரிமாணமான இவ்வஸ்துவை விபுவானதான் விளாக்குலைகொண்டு அநுபவித்தானென்கிற இது தனக்கு ஏற்றமாம்படி கௌரவியாநின்றான். "சிறிய வென்னுருயிர்" என்றவது - தம்மைப்பார்த்து; அவனுடைய அநுபவத்தைக்கொண்டு சொல்லுகிறார் இது. [காளநீர்மேகத்தென்காட்கரையென்னப்பற்கு] கறுத்தநீர்கொண்

பெருத்த காளமேகம்போலேயிருக்கிற வடிவையுடையனும், அம்போகர்தான் வர்ஷிக்கும் ஸ்தலத்திலே படிந்தாப்போலே திருக்காட்கரையிலே வந்து ஸந்நிதிபண்ணின நிருபாதிக பந்துவுக்கு. வடிவழகு அது; ஊர் அது; தனக்கு என்ன குறையுண்டாய் இப்படிபடுகிறான்! [யான் நோவுபட்டது!] அடிமையன்றோ புக்கது? சாவணைஇகனைப்போலே எதிரம்புகோத்தேதன்றோ? [என்னுடைய உயிர்பட்டதே] ஓர் ஆத்மவஸ்து படும்பாடே இது! எதிர்த்தார் உடம்பிறத்தல், புண் பட்டதுக்கு மருந்துவைத்தாற்றுதல் செய்யுமத்தனையிறே; இங்கு ஆருயிரிறே நோவுபட்டது; குணத்தால்வரும்நோவு ஸ்வருபகதமாய்ப் பரிஹாரமில்லையிறே.

ஆருயிர்பட்டது எனதுயிர்பட்டது*
பேரிதழ்த்தாமரைக்கண் கனிவாயதுஓர்*
காரெழில்மேகத் தென்காட்கரைகோயில்கொள்*
சீரெழில்நால்தடந்தோள் தெய்வவாரிக்கே. (9)

ஒ.—ஒன்பதாம்பாட்டில், தன்னோடு பரிமாறுவாரையெல்லாரையும் இப்படியே யன்றோ அவன் நலிந்துவதென்னில், — அவனுடைய குணத்துக்குத் தோற்றுப்பட்டன திருநாட்டிலுள்ளார்தான் நானைபட்டது பட்டாரோ? என்கிறாள். [பேரிதழ்த் தாமரையென்று மேலுக்கு] - பெரிய இதழையுடைய தாமரைப்பூப்போலே யிருக்கிற கண்ணையும் சிவந்த வாயையுமுடைத்தாய்க் கறுத்தவெழிலையும் உடையது ஒருமேகம்போலேயாய்த் திருகாட்கரையைக் கோயிலாகக் கொள்வதுஞ்செய்து அழகியவெழிலையுடைத்தான நாலு பெரிய தோளையுமுடைய தெய்வவாரிக்கு. தெய்வவாரியாவது - தெய்வங்களெல்லாம் ஆதாரம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், "நீரேயோ இப்பாடு பட்டீர்? குணநுபவமே யாத்ரையான நித்யஸூரி களும் படும்பாடு இதுவன்றோ?" என்ன, "அவர்கள்தான் நான்பட்டது பட்டார்களோ?" என்கிறாள். [ஆருயிர்பட்டது எனதுயிர்பட்டது] - நான்பட்ட பாட்டை நித்யஸூரிகளிலே சிலர் பட்டாருண்டோ? பகவத்குணங்களுக்கு அபூமியாயிருக்கிற ஸம்ஸாரத்திலே நான் பட்ட பாடு, நித்யவிபூதியிலுள்ளவர்கள் பட்டார்களோ? இங்கு எனதுயிர் பட்டது அங்கு ஆருயிர்பட்டது! என்றருளிச்செய்வர் எம்பெருமானார். "நவோடையான ஸ்த்ரீக்கு அநுபவத்தில் புதுமையாலே ஆர்த்தி மிக்கிருக்குமிறே" என்று நம் பிள்ளைக்கு ஜீயர் அருளிச்செய்தார். [பேரிதழ்த்தாமரைக் கண் கனிவாயதோர்] - தம்மை நோவுபடுத்தினவற்றைச் சொல்லுகிறாள். பெரியவிதழையுடைய தாமரைபோலேயிருக்கிற கண்ணையும் சிவந்தவாயையும் உடையனுமாய்க் கறுத்தவெழிலை யுடைத்தான மேகம்போலே வடிவையுடையனுமாய்த் திருக்காட்கரையைக் கோயிலாக உடையனும். [சீரெழில் நால்தடந்தோள்] - வீரச்ரீயையும் எழிலையுமுடைத்தாய், கல்பகதரு பணைத்தாப்போலே நாலாய்ச் சுற்றுடைத்தான தோள்களையுடைய. [தெய்வவாரிக்கு] - தெய்வங்கள் படுங் கடலுக்கு, தெய்வங்களுக்கு உத்பாதகனுக்கு. ஸ்வதந்த்ரர்க்கு உத்பாதகனானவனிவர், பரதந்த்ரனுயிருக்கிற என்னையழிக்கிறான்! வடிவழகையும், அவ்வூரில் இருப்பையுங் காட்டிப்பார்த்து இவரையழித்தது.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. 'நீரேயோ இப்படிப்பட்டீர்! குணநுபவமே யாத்ரையான நித்யஸூரிகளும் படும்பாடு இதுவன்றோ?' என்ன, 'அவர்கள்தான் நான் பட்டது பட்டார்களோ? என்கிறார்.

[ஆருயிர்பட்டது எனதுயிர்பட்டது] நான்பட்டபாட்டை நித்யஸூரிகளிலே தான் பட்டாருண்டோ? பகவத் குணங்களுக்கு அபூமியாயிருக்கிற ஸம்ஸாரத்திலே நான்பட்டபாட்டை நித்யவிபூதியிலே உள்ளவர்கள்தான் பட்டார்களோ? என்கிறார். 'இங்கு எனதுயிர்பட்டது அங்கு ஆருயிர்பட்டது?' என்று எம்பெருமானார். 'எல்லாரும் குணநுபவமாகிற் பண்ணுவது இவர்க்கு இவ்வாகி கூடினபடி யென்? என்று நான் கேட்க, நவோடையான ஸ்த்ரீக்கு பர்த்தாவினுடைய கரஸ்பர்சம் பட்டவாறே வேர்ப்பது விடுவதாமாபோலே, இவர் அநுபவத்தில் புதியராகையாலே வருகிறதுக்காணும்' என்று ஜீயர் அருளிச்செய்தார். உயிரையழித்த

பரித்ருகாலத்துக்கு முன்பே பரித்து. ஆசார்யவிஷயீகாரத்துக்குப்பின்பிறே இவருடைய பரிப்பு; ஸம்பந்தத்துக்குத் திரஸ்காரஹேதுவில்லாமையாலே, அவனுடையபரிப்பு ஸத்தாப்ரயுக்தமிறே. [தூவனென்னை] விபுவாய் ஸ்வதந்த்ரனான தான், அணுபரிமாணனும்பரதந்த்ரனுமானவென்னை. [முற்றப்பருகினான்] தன்குணசேஷ்டிதங்களைக்காட்டி என்னை நிரவசேஷமாகப்பருகினான்; "வசஸா ஸாந்த்வயித்வைநம் லோசநாப்யாம் பிபந்நிவ" என்கிறபடியே; இத்தலையைமுடித்துப் பரிமாறினானென்றபடி. உண்டபடி சொன்னார் கீழ்; உண்டவனுக்குத் தண்ணீரும் அபேக்ஷிதமிறே; ஆகையாலே, தண்ணீர் குடித்தபடி சொல்லுகிறார். அவனுடைய உண்ணுஞ்சோறு பருகுநீருமிருக்கிறபடியிறே யிது. [காரொக்குங்காட்கரையப்பன்] பரமோதாரனும் ஸந்நிஹிதனுமானவன். [கடியனே] போகதசையில் விரைந்திருக்கும். இரண்டு தலையாய்ப் பரிமாறப்புக்கால் எதிர்த்தலைக்கு இடம் வையான்.

கடியனாய்க் கஞ்சனைக்கொன்றபிரான் தன்னை*
கொடிமதிள்தென்குருகூர்ச் சடகோபன்சொல்*
வடிவமையாயிரத்திப்பத்தினால் சன்மம்
முடிவெய்தி* நாசங்கண்டீர்களெங்கானலே. (11)

ஒ.—நிகமத்தில், ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி வல்லார்க்கு ஜந்மம்முடிந்து அதுக்கடியான ஸம்ஸாரமும் நசிக்கும் என்கிறார். [கடியனாய்க் கஞ்சனைக் கொன்ற பிரான்தன்னை]-கண்பாராதே கம்ஸனைக் கொன்ற மஹோபகாரகனை. [கொடிமதிள் தென் குருகூர் சடகோபன்சொல் வடிவமையாயிரத்து இப்பத்தினால்] - ஸம்ருத்தமான திருநகரியையுடைய ஆழ்வாருடைய சொல்லான நல்லபடியையுடைய ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி கற்றதே ஹேதுவாக, துக்கரூபமான ஸம்ஸாரகாந்தாரம் நசிக்கும்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி அப்யஸித்தார்க்கு ஜந்மம் முடிந்து அதுக்கடியான ஸம்ஸாரமும் நசிக்குமென்கிறார். [கடியனாய்க் கஞ்சனைக்கொன்ற] - கம்ஸன் தான் நினைத்த நினைவை அவன்தன்னோடே போம்படி பண்ணினான். [கடியனாய்] - தன்பக்கலின்றிக்கே வந்தேறியென்கை. [பிரான்தன்னை] - முன்பு உபகாரகனானவன் கிடீர் நம்மையழித்தான். உகந்தாரை யழிக்கையிறே பாதகமாவது; விரோதிகளையழிக்குமிது உபகாரமிறே! [கொடிமதிள் தென்குருகூர்] கம்ஸவிஜயத்துக்குக் கொடிகட்டிற்றுத் திருநகரியாய்த்து, ஸ்வாமி விஜயத்துக்கு உரிய அடியாரிருந்த விடத்தேயிறே கொடி கட்டுவது. [வடிவமையாயிரம்] - ஸமுதாயசோபையை யுடைத்தாயிருக்கை. கட்டடங்கவழகிதாயிருக்கை. விஜயமுண்டானவாறே ப்ரசஸ்திமாலைகளுஞ் செல்லாநிற்குமிறே. [சன்மம் முடிவெய்தி] - ஜந்மபரம்பரைகளுக்கு அவஸாநத்தை யடைந்து. [நாசங்கண்டீர்கள் எங்கானலே] - ஜந்மத்துக்கடியான ஸம்ஸாரமும் நசிக்கும். [கானல்] - ம்ருகத்ருஷ்ணிகை. இன்னம் பிறக்க விராதே, பகவத்குணாநுபவம் ஸாத்மிக்கும் தேசத்திலே புகுவர்கள்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழியப்யஸிப்பார்க்கு, ஜந்மம் முடிந்து அதுக்கடியான ஸம்ஸாரமும் நசிக்குமென்கிறார்.

[கடியனாய்க்கஞ்சனைக் கொன்றபிரான்தன்னை] கம்ஸன் தான் நினைத்த நினைவை அவன் தன்னோடேபோம்படி பண்ணினான். [கடியனாய்] தன்பக்கலின்றிக்கே வந்தேறியென்கை "கொண்ட சீற்றம்" என்னக்கடவதிறே. [பிரான்தன்னை] முன்பு உபகாரகனானவன் கிடீர் நம்மையழித்தான்! உகந்தாரையழிக்கையிறே பாதகமாவது; விரோதிகளையழிக்குமது உபகாரமிறே. [கொடிமதிள்தென்குருகூர்] கம்ஸவிஜயத்துக்குக் கொடிகட்டிற்றுத் திருநகரியாய்த்து; ஸ்வாமிவிஜயத்துக்கு, உரியவடியாரிருந்தவிடத்தேயிறே கொடிகட்டுவது. [வடிவமையாயிரம்] ஸமுதாயசோபையையுடைத்தாயிருக்கை. கட்டடங்க அழகிதாயிருக்கை. விஜயமுண்டானவாறே ப்ரசஸ்திமாலைகளுஞ் செல்லாநிற்குமிறே. [சன்மம்முடிவெய்தி] ஜந்மபரம்பரைக்கு

அவஸாநத்தை லபித்து. [நாசங்கள் கூர்கன் எங்கானலே] ஐக்மத்துக்கு அடியான ஸம்ஸாரமும் நசிக்கும், கானல்-ம்ருகத்ருஷ்ணிகை. இன்னமிங்கே பிறக்கவிராதே, பகவத்குணாநுஸந்தாநம் ஸாத்மிக்கும் தேசத்திலே புகுவர்கள்.

—◦◦◦—

## ஏழாந்திருவாய்மொழி—எங்கானல் : ப்ரவேசம்

ஓ.—ஏழாந்திருவாய்மொழியில், இப்படி அப்ராப்திகர்ப்ப ஸ்மரணத்தாலே மிகவும் பீதரானவர்க்கு இப்போது பகவத்ஸாக்ஷாத்கார மில்லாமையாலே, ஸ்மரணத்தால்வந்த ப்ரீதியும் மாறி அப்ராப்தியே தலையெடுத்து, அத்யந்தம் அவஸந்நரான ஆழ்வார், தம்முடைய தசையை ஒருபிராட்டியுடைய தூதவாக்யத்தாலே எம்பெருமானுக்கு அறிவிக்கிறார். எம்பெருமானுடைய அழகிலே ஈடுபட்டு அவனோடே ஸம்ச்லேஷித்தாள் ஒருபிராட்டி அவன்வரவு காணாதே அவனல்லது செல்லாத ப்ரக்ருதியாகையாலே தன்னுடைய ஆற்றாமையாலே க்ருஹத்திலிருந்தும் உத்யாநப்ரதேசத்திலே சென்று, அங்கேயிருக்கிற ஜலபக்ஷிகளைக்குறித்து நிரதிசயபோக்யமான வடிவையுடையனும் க்ருபாம்புதியானவன், தான் தனக்கு ஸ்நேஹிகளானாரோட்டைப் பரிமாற்றத்தாலே என்தசையை உணராதே மறந்திருந்தானத்தனை. ஆனால், தன்னழகைக் கண்டு பிரிந்தார் தரிப்பரோ என்று அவனுக்கு அறிவிக்கவேணுமென்று அவற்றை ஸவிநயமாக இரக்கிறாள்.

இ.—ஏழாந்திருவாய்மொழியில், அப்ராப்திகர்ப்பகுணஸ்மரணத்தாலே மிகவும் பீதரானவர், பாக்யஹாநியாலே அப்ராப்த்யம்சமே தலையெடுத்து அவனைப்பெறில் ஜீவித்தல், பெறுவிடில் முடிதலாம்படியான தம்முடைய தசையை அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறார். இயற்கையிலே புணர்ந்துபிரிந்தாள் ஒருபிராட்டி, அவன் அழகிலே ஈடுபட்டு அவனைக்கையாய்த் தன்னாற்றாமை கைகொடுக்க உத்யானத்திலே சென்று அங்கிருக்கிற பக்ஷிகளைக்குறித்து "பின்னானார் வணங்கும் சோதி திருமூழிக்களம்" என்கிறபடியே தூதுபோவார்க்கு அருமைப்பட்டு அறிவிக்கவேண்டாதபடி திருமூழிக்களத்திலே வந்துநின்றருளினான். தனக்கு நல்லாரை விடமாட்டாதவனாகையாலே நம்தசையை அறியாதிருந்தானத்தனை. க்ருபாம்புதியாகையாலே நம்தசையை அறிவிக்க வரும்; தன்னழகைக்கண்டு பிரிந்தார் தரிப்பரோ ? என்று அறிவிக்கவேணுமென்று, அவற்றை ஸவிநயமாக இரக்கிற ஒருபிராட்டிபேச்சாலே தம்தசையை அருளிச்செய்கிறார். அஞ்சிறையமடநாரையில் "இத்தலையில் அபராதத்தாலே வாராதொழிந்தானத்தனை" என்று அவனுடைய அபராதஸஹத்வம் பற்றாசாகத் தூதுவிட்டார்; வைகல் பூங்கழிவாயில் "வல்லது கண்டால் காலதாமம் வருகையாலே மறந்திருக்கானித்தனை, நம்ஆர்த்தியை யறிவித்தால் தன்னினிமையிலே நெஞ்சுவைப்பானொருவனல்லன்" என்று அதுபற்றாசாகத் தூதுவிட்டார்; பொன்னுலகாளீரோவில் "ஐச்வர்யப்ரப்பாலே மறந்திருந்தானத்தனை, ஆச்ரிதரோடு ஏகரஸனென்று அறிவிக்கவே வரும்" என்று ஸங்கல்பம் பற்றாசாகத் தூதுவிட்டார்; இதில் தனக்கு நல்லாரை விடமாட்டாமையாலே வாராதிருந்தானுமத்தனை, தன்வடிவழகை, குணங்களை, ஆனபின்பு பிரிந்தார்க்கு ஜீவித்திருக்கப்போமோ" என்று அவ்வடிவழகும் குணங்களும் பற்றாசாகத் தூது விடுகிறது.

ஈடு.—இதில் அப்ராப்திகர்ப்பகுணஸ்மரணத்தாலே மிகவும் ப்ரீதரானவர், பாக்யஹாநியாலே அப்ராப்த்யம்சமே தலையெடுத்து, அவனைப்பெறிற்றரித்தல், பெறுவிடில் முடிதலாம்படியான தம்முடைய தசையை அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறார்.

இயற்கையிலே புணர்ந்து பிரிந்தாளொரு பிராட்டி, அவன்வடிவழகிலே ஈடுபட்டு அவனைக்கையாய், தன் ஆற்றாமை கைகொடுக்கத் தன் உத்யாநத்திலே சென்று, அங்கிருக்கிற பக்ஷிகளைக்குறித்து, "பின்னானார்வணங்குஞ்சோதி திருமூழிக்களம்" என்கிறபடியே தூது

திலே பரமபதத்திற்பண்ணும் வ்யாமோஹத்தைப் பண்ணி வர்த்திப்பதுஞ்செய்து, துளி முழுதும் மதுவை உடைத்தான திருக்குழலையும் விலக்ஷணமான ஒளியையுமுடையவருமாய்க்கொண்டு திருமூழிக்களத்திலே வர்த்தித்தருளுகிறவனுக்கு என்னுடைய தூதவாக்யத்தைச் சொல்லுங்கோள்.

இ.—அஞ்சாம்பாட்டில், நீயே பயசங்கையைப் பிறப்பித்தாய், திருமேனியொளியகற்றி என்று ஆனபின்பு, எங்கள் வார்த்தையை அங்கீகரிக்குமோ? என்னில், - பரமபதத்திற்பண்ணும் ஆதரத்தை என்பக்கலிலே பண்ணினவன் அங்கீகரியா தொழியான்; ஆனபின்பு, எனக்காக ஒருவார்த்தை விண்ணப்பஞ் செய்யவேணும்! என்கிறாள். [தெளிவிசும்பு கடிதோடி] - நிர்மலமாய் நிராலம்பநமான ஆகாசத்திலே பூமியிலே ஸஞ்சரிப்பாரைப்போலே கடுநடையிலே ஸஞ்சரித்து, இவற்றின் த்வரை யெல்லாம் தன்கார்யத்துக்கு உடலென்றிருக்கிறாள். [தீவளைத்து மின்னிலகும்] - கொள்ளிவட்டம்போலே மின்னிலங்காநிற்கிற; தன்வடிவில் இருட்சிக்குக் கைவிளக்குக்கொண்டு திரிவாரைப்போலேயாய்த்து மின்னிக்கொண்டு ஸஞ்சரிக்கிறபடி. [ஒளிமுகில்காள்] - பரபாகத்தாலே அழகிதானவடிவையுடைய முகில்காள்! [திருமூழிக்களத்துறையும் ஒண்சுடர்க்கு] - திருமூழிக்களத்திலே நித்யவாஸம் பண்ணுகையாலே புகர்மிக்கிருந்தவர்க்கு, அவன்வடிவுக்குப் போலியாயிற்றே உங்கள்வடிவிருப்பது. [தெளிவிசும்பு இத்யாதி] - "பரமபதம் தேசமாயிருக்க அத்தைக் காற்கடைக்கொண்டு என் நெஞ்சிலே நித்யவாஸம் பண்ணுகிறவன்" என்று சிற்றுட்கொண்டான் பணிக்கும். "பரமபதத்திற் பண்ணும் வ்யாமோஹத்தை என்னெஞ்சிலே பண்ணி வர்த்தியாநின்றான்" என்று எம்பெருமானார். [தீவினையேன்] - நெஞ்சிலே ப்ரகாசியாநிற்க, காணவொண்ணாதபடி பாபத்தைப் பண்ணினேன். [துளிவார்கட் குழலார்க்கு] - துளி யொழுகும் மதுவையுடைத்தான திருக்குழலையுடையவர்க்கு; வல்லார் பூமுடித்தால் பூதோற்றக்கடவதன்றியே, மதுவொழுகக் காணுமித்தனையிறே. [என்தூதுரைத்தல் செப்புமினே] - தலைமிற்பூச் சருகா யிருக்கிற என்னுடைய தூதவாக்யத்தை அவர்க்குச் சொல்லுங்கோள். அபிநிவிஷ்டராய்த் தாமே வரக்கடவராகச் சொல்லிவைத்து, தூதுவிடவிருக்கிறபடியை அறிவியுங்கோள்.

ரு.—அஞ்சாம்பாட்டு. "எங்கள் வார்த்தையை அவன் அங்கீகரிக்குமோ?" என்றிருக்கவாக 'பரமபதத்திற்பண்ணின ஆதரத்தை என்பக்கலிலே பண்ணினவன் அங்கீகரியா தொழியான்; ஆனபின்பு, எனக்காக ஒருவார்த்தை விண்ணப்பஞ்செய்யவேணும்' என்கிறாள்.

[தெளிவிசும்புகடிதோடி] நிர்மலமாய் நிராலம்பனமான ஆகாசத்திலே, பூமியிலே ஸஞ்சரித்தாப்போலே கடுநடையிலே ஸஞ்சரித்து. இவற்றின் த்வரையெல்லாம் தன் கார்யத்துக்கு உடலென்றிருக்கிறாள். [தீவளைத்துமின்னிலகும்] கொள்ளிவட்டம்போலே மின்னிலங்காநிற்கிற. தன்வடிவில் இருட்சிக்குக் கைவிளக்குக்கொண்டு திரிவாரைப் போலேயாய்த்து மின்னிக்கொண்டு ஸஞ்சரிக்கிறபடி. [ஒளிமுகில்காள்] பரபாகத்தாலே அழகிதான வடிவையுடைய முகில்காள்! [திருமூழிக்களத்துறையுமொண்சுடர்க்கு] திருமூழிக்களத்திலே நித்யவாஸம்பண்ணுகையாலே புகர் மிக்கிருக்கிறவர்க்கு, அவன்வடிவுக்குப் போலியாயிற்றே உங்கள் வடிவிருப்பது. [தெளிவிசும்பித்யாதி] பரமபதத்திற்பண்ணும் வ்யாமோஹத்தை என் நெஞ்சிலே பண்ணி வர்த்தியாநின்றான். [தீவினையேன்] நெஞ்சிலே ப்ரகாசியாநிற்க, காணவொண்ணாதபடி பாபத்தைப் பண்ணினேன். இதுக்கு சிற்றுட்கொண்டான், "அகார்யது பதத்தியாக அங்காடி பாரித்து, தனக்குப் பரமபதம் கலவிருக்கையாயிருக்க, அத்தைக் காற்கடைக்கொண்டு ஸந்நிஹிதரைப்போலேயிருக்க என்னெஞ்சிலே ப்ரகாசியாநின்றான்" என்று. இதுதான் இத்திருவாய்மொழிக்குச் சொன்ன வாக்யார்த்தத்தோடு சேராது; ஓரோர் அவஸரங்களிலே சொல்லிப்போம் வார்த்தையிறே. [துளிவார்கட்குழலார்க்கு] துளியொழுகும் மதுவையுடைத்தான திருக்குழலையுடையவர்க்கு; வல்லார் பூமுடித்தால் பூத்தோற்றக்கடவதன்றிக்கே மதுவொழுகக் காணுமத்தனையிறே. [என் தூதுரைத்தல் செப்புமினே] தலையிற் பூச்சருகாயிருக்கிற என் தூதவாக்யத்தை யவர்க்குச் சொல்லுங்கோள். அபிநிவிஷ்டராய்த் தாமே வருவாராகச்சொல்லிவைத்து, இப்போது தூதுவிடவிருக்கிறபடியை யறிவியுங்கோள்.

தூதுரைத்தல்செப்புமின்கள் தூமொழிவாய்வண்டினங்காள்!*
போதிரைத்துமதுநுகரும் பொழில்மூழிக்களத்துறையும்*
மாதரைத்தம்மார்பகத்தே வைத்தார்க்குஎன்வாய்மாற்றம்*
தூதுரைத்தல்செப்புதிரேல் சுடர்வளையுங்கலையுமே. (6)

ஒ.—ஆறும்பாட்டில், எம்பெருமானுக்கு என்னுடையாட்டம் விண்ணப்பம் செய்யுமிடத்து உங்கள் வார்த்தை விலைசெல்லும்படி பிராட்டிஸந்நிதியிலே வைத்துச் சொல்லுங்கோள்! என்று சில வண்டுகளைக் குறித்துச் சொல்லுகிறாள். [தூமொழிவாய் வண்டினங்காள்] - வருவோமல்லோம் என்றிருக்கிலும் உங்கள் பேச்சாலே அவனுக்கும் வரவேண்டும்படியான இனியபேச்சையுடைய வண்டினங்காள்! [போதிரைத்து மதுநுகரும்பொழில்] - பூக்களிலே இரைத்துக்கொண்டு மதுபானம் பண்ணும்பொழில் - [என் வாய்மாற்றமென்று தொடங்கி] - என் பாசுரமான தூதவாக்யத்தைச் சொல்லுவதிகோளாகில், என்னுடைய அழகிய வளையும் கலையும் சிதிலமானபடியைச் சொல்லுங்கோள்.

இ.—ஆறும்பாட்டில், சிலவண்டுகளைக்குறித்து, உங்கள்வார்த்தை விலை செல்லும்படி பிராட்டி ஸந்நிதியிலே சொல்லுங்கோள் என்கிறாள். [தூதுரைத்தல் செப்புமின்கள்] - என்னுடைய தூதவாக்யத்தை அறிவிக்க அமையும், நீங்கள் கொண்டுவரவேண்டா. [தூமொழிவாய் வண்டினங்காள்] - இனிய பேச்சையுடைய வண்டுகாள்! அவன் அநாதரிக்கிலும் உங்கள்பேச்சினிமையாலே வரவேண்டும்படியிறே உங்கள்பேச்சிருப்பது. மஹாராஜர்க்கும் பெருமாளுக்கும், "ஏகம் து:க்கம் ஸுகஞ்ச நௌ" என்று விஜாதீயமான இரண்டுதலையும் பொருந்தும்படி திருவடி வார்த்தைசொன்னாப்போலே. "அத ஸம்ஸ்கார ஸம்பந்ந:". [போதிரைத்து மதுநுகரும்பொழில்] - பூக்களிலே இரைத்துக்கொண்டு மதுபானம் பண்ணும்பொழில் என்னுதல். போதிலே - காலத்திலேயென்னுதல். எதிரிகளோடு அம்பேறவும் வேண்டா. மீட்சியிலேயாகவும் வேண்டா, ததிமுகாதிகள் காத்திருப்பாருமில்லை. மதுபானம்பண்ணுகிறவர்களுடனேகூட மதுபானம்பண்ண அமையும். [மாதரைத் தம்மார்பகத்தேவைத்தார்க்கு] - நீங்கள் சொல்லுமத்தனையே வேண்டுவது. உங்கள்வார்த்தை கொண்டாடிக்கேட்பிக்கும் புருஷகாரமும் உண்டென்கை. [என்வாய்மாற்றம் இத்யாதி] - என்பாசுரமான தூதவாக்யத்தைச் சொல்லப் பார்த்திகோளாகில், என்னுடைய அழகியவளையும் கலையும் சிதிலமானபடியைச் சொல்லுங்கோள்; செப்புவதிகோளாகில் அதுதானே யெனக்குச் சுடர்வளையும் கலையும். அறிவிக்குமதுவே குறை; வரவு தப்பாதென்கை.

ஈடு.—ஆறும்பாட்டு. சிலவண்டுகளைக்குறித்து, 'உங்கள்வார்த்தை விலை செல்லும்படி பிராட்டிஸந்நிதியிலே சொல்லுங்கோள் என் தூதவாக்யத்தை' என்கிறாள்.

[தூதுரைத்தல் செப்புமின்கள்] என் தூதவாக்யத்தை யறிவிக்கவமையும்; கொண்டு வரவேண்டா. [தூமொழிவாய்வண்டினங்கள்] இனியபேச்சையுடைய வண்டுகாள்! அவன் அநாதரிக்கிலும் உங்கள்பேச்சினிமையாலே வரவேண்டும்படியிறே பேச்சிருப்பது. பெருமாளும் இளையபெருமாளும் கையும் வில்லுமாய் வருகிறபடியைக் கண்டு, "இவர்கள் காலிவரவிட வருகிறார்களோ?" என்று அஞ்சி மஹாராஜர் ஈதுக்கு மூன்று பேராலும் அவருகேபோட, நின்றிவர்க்கு "ஏகம் து:க்கம் ஸுகஞ்ச நௌ" என்று விஜாதீயமான இரண்டுதலையும்பொருந்தும்படியாக "அத ஸம்ஸ்கார ஸம்பந்ந:" என்கிறபடியே வார்த்தை சொன்னாவிறே. [போதிரைத்துமதுநுகரும்பொழில்] பூக்களிலே இரைத்துக்கொண்டு மதுபானம் பண்ணும் பொழிலென்னுதல்; போதிலே - காலத்திலேயென்னுதல். உங்களுக்கு மீட்சியிலேயாகவும் வேண்டா. ததிமுகாதிகள் காப்பாருமில்லை; முன்பு மதுபானம்பண்ணுகிறவர்களோடே மதுபானம்பண்ண வமையும். [மாதரைத் தம்மார்பகத்தேவைத்தார்க்கு] நீங்கள் சொல்லுமத்தனையே வேண்டுவது. உங்கள்வார்த்தைகேட்டிருக்கவும், கேட்டுக் கொண்டாடுகைக்கும் புருஷகாரமுண்

ஈடு.—எட்டாம் பாட்டு. கிலவான்றுகளையும் தும்பிகளையும் குறித்து. 'அங்குற்றைக்கு பயப்படவேண்டாதபடி ஸுரக்ஷிதமான தேசத்திலே யிருக்கப் பெற்றோம்; இனி என் ஆர்த்தியை யறிவியுங்கோள்' என்கிறாள்.

[எனக்கொன்று பணியீர்கள்.] நீங்கள் ஒருவார்த்தை சொல்லாவிடில் முடியும் தசை யாயன்றோ என் தசையிருக்கிறது. [இரும்பொழில்வாழ் வரிவண்டே] பரந்தசோலையிட மெங்கும் புக்கு இரைதேடி. [மனக்கின்பம்படமேயும்] மனஸ்ஸிலே இனிமை பிறக்கும்படி யன்றோ நீங்கள் கலக்கிறபடி.. விரஹத்தால் வரும் க்லேசம் ப்ரஸவியாதபடியாகக் கலவாநின்று தாய்த்து - பிரிவிலும் வற்றாத ஆனந்த முண்டாம்படி கலவாநின்றதாய்த்து. [கனக்கொளி திண்மதிள்] கனத்துத் திண்ணிதான மதிள் சுற்றும் சூழ்ந்திருந்துள்ள திருமூழிக்களத்திலே நித்யவாஸம் பண்ணுகிறவர்க்கு. அத்தலையில் ஸௌந்தர்யத்தை யநுஸந்தித்தால், ஈசைத தேட்டமயிறே யிருப்பது. அவனோடே கிட்டிக்கலக்கப்பெறுமையாலே வருவதும் ஓராற்றாமை யுண்டு; அவனுக்கு எங்கே என்னதிங்கு வருகிறதென்றும் ஓராற்றாமையுண்டு; அதிலே ஒன்று நிறப்பெற்றது முக்தருமன்னம். [புனக்கொள்காயாமேனிப் பூந்துழாய் முடியார்க்கே] தன்னிலத்திற் காயாவின் நிறம்போலேயாய்த்து நிறமிருப்பது. அவ்வடிவழகுக்குமேல் ஒப்பனை யழகையும் உடையவர்க்கு. வடிவழகு அது, ஒப்பனையழகு அது; அவ்வடிவழகையும் ஒப்பனையழகையும் அநுபவித்துப்பிரிந்த வெனக்கு ஒருவார்த்தை சொல்லுங்கோள்.

பூந்துழாய் முடியார்க்குப் பொன்னாழிக்கையாருக்கு*
ஏந்துநீரிளங்குருகே! திருமூழிக்களத்தாருக்கு*
ஏந்துபூண்முலைபயந்து என்னிணைமலர்க்கண்ணீர்ததும்ப*
தாம்தம்மைக்கொண்டகல்தல் தகவன்றென்றுரையீரே. (9)

ஆறா.—ஒன்பதாம்பாட்டில், நினைத்தது செய்துமுடிக்க வல்லதொரு குருகைக் குறித்து நிரதிசய போக்யரான தாம் போம்போது தம்மைவைத்துப் போகவேண்டாவோ என்று விண்ணப்பஞ்செய் என்கிறாள். [ஏந்துநீரென்று தொடங்கி] - தரையிலே நடக்குமாபோலே நீரிலே நடக்கவல்ல இளங் குருகே! [ஏந்துபூண்முலை பயந்தென்று மேலுக்கு] - தரிக்கப்பட்டிருந்துள்ள ஆபரணங்களையுடைய முலை விவர்ணமாய், இணைமலர்போலேயிருக்கிற கண் நீர்மல்கும்படி நிரதிசயபோக்யரான தாம் போம்போது தம்மைக்கொண்டு போகை, தம்முடைய க்ருபைக்குப் போராதென்று, ப்ரணயகதையை விட்டுத் தன்னுடைய ஆர்த்தியாலே சொல்லுகிறாள்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டில், ஒருகுருகைக்குறித்து 'நிரதிசயபோக்யரான தாம் போம்போது தம்மை வைத்துப் போகவேண்டாவோ? என்று விண்ணப்பஞ்செய்யுங்கோள்' என்கிறாள். [பூந்துழாய் முடியார்க்கு] - திருமுடிக்குஒப்பனையான வளையமிருக்கிறபடி. [பொன்னாழிக்கையாருக்கு] - திருமுடிக்கு வளையம்போலேயாய்த்துத் திருக்கைக்குத் திருவாழி. [ஏந்துநீரிளங்குருகே] - தரையிலே நடப்பாரை போலே நீரிலே நடக்கவல்ல இளங்குருகே! உன்கமலாமர்த்யத்தாலுண்டான ப்பலம் என் பெற வேண்டாவோ? நடுவே நீர் இடைச்சுவராகிலும் தேங்கவேண்டாவிறே உனக்கு. [திருமூழிக்களத்தாருக்கு] - வளையம்போலேயும் ஆபரணம்போலேயும், அவ்வூரிலுள்ளேயும் அழகுக்குடலாயிருக்கிறன். அவை விக்ரஹத்துக்கு ஆபரணமாகுப்போலே சீலம் ஸ்வரூபத்துக்கு ஆபரணமிறே. அழகும் குணமும் ஒரு தலைத்த விஷயமிறே. [ஏந்து பூண்முலை பயந்து] - ஆபரணங்களை தரிக்கக்கடவமுலை வைவர்ண்யத்தை தரித்து. ஆபரணங்கள் ஸம்ச்லேஷார்த்தமாகக் கழற்றுமவை; இது ஸம்ச்லேஷத்தாலல்லது கழலாதிறே. வ்யதிரேகத்தில் இப்படியிராதபோது பும்ஸ்த்வவ்யாவ்ருத்தி கிடையாதிறே; ஆசையும் ஸ்த்ரீத்வமுமிறே இருக்கடி. ஆபரணம் அழகுக்கு நிறங்கொடுக்குமாபோலேயிறே, ஸ்த்ரீத்வத்துக்கும் ஆசைக்கும் வைவர்ண்யம். [என்னிணை மலர்க்கண்] - இணைமலர்போலேயிருக்கிற என்கண். தம் அநுபவத்து இலக்காக உடைத்தான கண், அவன்சொல்லும்படி அழிந்திருக்கையாலே சொல்லுகிறாள்.

போக்கி, அல்லாதபோது தன் கண்ணினழகைத் தான் சொல்லுகிறு ளல்லளிறே. [நீர்ததும்ப] - ஆனந்தாச்ருவுக்கு இட்டுப்பிறந்த கண் சோகாச்ருவுக் கிலக்காம்படி. [தாம்] - கீழ்ச்சொன்ன அழகையும் சீலத்தையும் உடைய தாம். [தம்மைக்கொண்டகல்தல்] - தமக்கு அகல வேண்டிலுல், "இவ்வடிவைப் பிரிந்தார் பிழையார்" என்று தம்மைவைத்தன்றோ போவது; தம்மைக் கண்ணடிப்புறத்திலே கண்டறி யீரே. தம்மைப்பிரிந்ததசைக்கு உதவுகைக்கன்றோ தம்மைக்கண்டது. "இமாமவஸ்த்தா மபஸ்ரோ நேஹபச்யாமி ராகவம்". [தகவன்றென்றுரையீரே] - மென்மையும் ப்ரணயித்வமும் போனாலும் தலை குடிபோகவேணுமோ ? விர்த்தயர் செய்யுமதைச் செய்தாரென்று சொல்லுங்கோள்! ஸ்த்ரீவத மென்றால் அஞ்சாதார் செய்யுமதைச் செய்தாரென்று சொல்லுங்கோள் ! என்கிறள்.

கூ.—ஒன்பதாம்பாட்டு. ஒருகுருகைக் குறித்து, "ப்ரதிகூலபோக்யரான தாம் போம் போது தம்மைக்கொண்டுபோகை தம்முடைய தகவுக்குப் போருமோவென்று விண்ணப்பஞ் செய்" என்கிறள்.

[பூந்துழாய்முடியார்க்கு] திருமுடிக்கொப்பனையான வனமாலையிருக்கும்படி. [பொன்னாழிக் கையாருக்கு] திருக்கைக்கு வனமாலையிருக்கிறபடி. [எந்நீரிளங்குருகே] மிக்கபுனலிலே தரை யிலே நடப்பாரைப்போலே நடக்கவல்ல இளங்குருகே! உன்சாமர்த்தியத்தாலுண்டான ப்பலம் நான் பெறவிறே புகுகிறது. நடுவே நீர் இடைச்சுவரானாலும் தேங்கவேண்டாவிறே உனக்கு. [திருமேனிக்களத்தாருக்கு] வனமாலைபோலேயும் ஆபரணம் போலேயும் அவ்வூரில் சீலமும் அழகுக்கு உடலாயிருக்கிறபடி. அவை விக்ரஹத்துக்கு ஆபரணமானாப்போலே, சீலம் ஸ்வரூபத்துக்கு ஆபரணமிறே. அழகும் குணங்களும் ஒருதலைத்த விஷயமிறே. [எந்நா பூண்முலையார்க்கு] ஆபரணங்களை தரிக்கக்கடவ முலை வைவர்ண்யத்தை தரித்து. ஆபர ணங்கள் ஸம்ச்லேஷார்த்தமாகக் கழற்றுமவை ; இது ஸம்ச்லேஷத்தாலல்லது கழலாதிறே. விப்ரயோகத்தில் இப்படியிருக்கையிறே ஸ்த்ரீத்வமாவது; இங்ஙனிராதவன்று பும்ஸ்த்வாத் வ்யாவ்ருத்தி கூடாதிறே. [என்னிணைமலர்க்கண் நீர் ததும்ப] இணைமலர்போலேயிருக்கிற என்கண், தம்மழகையே இலக்காகவுடைய கண், சோகாச்ருவுக்குஇலக்காம்படி, அவன் சொல்லும்படி அதிக்கிருக்கையாலே சொல்லுகிறுளித்தனைபோக்கி அல்லாதபோது தன் கண்ணை இப்படிச் சொல்லக்கூடாதிறே. [ததும்ப] ஆனந்தாச்ருவுக்கு அர்ஹமான கண் சோகாச்ருவாலே விஸிறும்படி. [தாம்] பூந்துழாய்முடியார், பொன்னாழிக்கையார், திருமேனிக் களத்தார் என்றுவைத்து, 'தாம்' என்கிறுளிறே. "பூந்துழாய்முடியார்க்குப் பொன்னாழிக்கை யாருக்கு" என்கையாலே வடிவழகைச் சொல்லிற்று; "திருமேனிக்களத்தாருக்கு" என்கை யாலே குணஞ்சொல்லிற்று; இப்படிப்பட்ட வடிவழகையும் குணங்களையுமுடைய தாம். [தம்மைக்கொண்டகல்தல்] தமக்கு அகலவேண்டிலுல் "இவ்வடிவைப் பிரிந்தார் பிழைப்பார்" என்று அத்தைவைத்தன்றோ போவது. தம்மைக் கண்ணடிப்புறத்திலே கண்டறியீரே. தம்மைப் பிரிந்த தசைக்கு உதவுகைக்கன்றோ தம்மைக்கண்டது: "இமாமவஸ்த்தாமபஸ்ரோ நேஹபச்யாமி ராகவம்" என்கிறபடியே ஆற்றாமையெல்லாம் சொல்லுவிக்குமிறே. எனக்கு ஆற்றாமையுண்டானவாறில் கிட்டி நின்று முகங்காட்டி சேர்க்கையாலே தடவி சேர்க்குமைக் கன்றோ தம்மைப்பெற்றது. தம்மைப்பிரிந்து நோவுபடுகிற இற்றைக்குமேற்பட ஆற்றாமை யில்லையிறே எனக்கு. இவ்வளவில் நான் பெருமாளைக் காண்கிறிலேன் என்றாளிறே. அதவா, [தாம் தம்மைக்கொண்டகல்தல்] தாம் என்னைக்கொண்டு அகலுமதொழிய தம்மைக்கொண்ட கலக்கடவரோ? தம்மைக்கொண்டகலவேண்டிலுல் தமக்கு சேஷமானத்தைப்போகட்டுப் பிறர்க்கு சேஷமானத்தையோ கொடுபோவது? "பக்தாநாம்" என்கிறே அவனுடம்பு இருப்பது. "தனக்கேயாக எனைக்கொள்ளவேணும்" என்கிறே இத்தலையிருப்பது. [தகவன்றென்றுரை யீரே] ப்ரணயித்வமும் மென்மையுமெல்லாம் கிடக்கச்செய்தே, இது விர்த்தயர் செய்யும்செய லென்று சொல்லுங்கோள். ஸ்த்ரீவதத்துக்கு அஞ்சாதார் செய்யுமவற்றைச் செய்தீரென்று சொல்லுங்கோள்.

தென்றுரையீர்கள்] பொரீ புறந்தடவி அத்தலைப்பேணியுண்டதமையும்; இனிஅவர்படியை நேராகச் சொல்லிப் போருங்கோள். அப்படி முன்பு பேணினுளோ இவனென்னில்; "என தலை வண்ணார் தகவுகள் என்று திருத்தாயார் சொல்லிற்றுப் போருமல், "தகவுடையவனே" என்று கெடுவாய்! ஆகரத்தில் தகவு மறுக்குமோ?" என்றுனிறே; அத்தைச்சொல்லுகிறுன்.

ஒழிவின்றித்திருமூழிக்களத்துறையும் ஒண்சுடரை*
ஒழிவில்லாவணிமழலைக் கிளிமொழியாள் அலற்றியசொல்*
வழுவில்லாவண்குருகூர்ச் சடகோபன்வாய்ந்துரைத்த*
அழிவில்லா ஆயிரத்துஇப்பத்தும் நோயறுக்குமே. (11)

ஆ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி, தன்னை அப்யஸித்தார்க்கு எம்பெருமானைப் பிரிகைக் கீடான ஸம்ஸாரதுக்கத்தை அறுக்கும் என்கிறார். [ஒழிவின்றியென்று மேலுக்கு]-திருமூழிக்களத்தில் போக்யதையாலே நிரந்தரவாஸம்பண்ணி அங்கே நிரதிசயதீப்தியுக்தருனவனை. [ஒழிவில்லா என்று தொடங்கி] - எம்பெருமானுக்குத் திருமூழிக்களத்தைப் பிரிந்து தரிக்க ஸம்பாவனையுண்டேயாகிலும் அவனைப்பிரிவில் தரியாத தன்மையை யுடையளாய் அழகியதாய் முக்தமான கிளியின் பேச்சுப்போலே யிருக்கிற பேச்சை யுடையளான பிராட்டி தன் ஆற்றுமையாலே ப்ரலாபித்த பாசுரத்தில் ஒன்றும் குறை யாதபடியிருக்கிற ஆழ்வார் நோவுபட்டு உரைத்த.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழிஅப்யஸித்தார்க்கு, பிரிவுக்கடியான ஸம்ஸாரதுரிதத்தை இதுதானே அறுத்துக்கொடுக்கும் என்கிறுர். [ஒழிவின்றித் திருமூழிக்களத்துறையும்] - ஒருநாளும் விடநினையாதே அவ்வூரிலே நித்யவாஸம் பண்ணுமிறவர்க்கு. [ஒண்சுடர்] - "பின்னுனார் வணங்குஞ் சோதி" என்கிறபடியே அவ்வூரில்நிலையால் வந்த புகரிருக்கிறபடி. அவ்வூரில்போக்யதையால் வந்த புகர். பிற்பாடர்க்கு முகங்கொடுக்கும் நீர்மையால்வந்த புகர். [ஒழிவில்லா] - அவன் அவ்வூரை யொழியில் தரிக்கமாட்டாதாப்போலே அவனை யொழிய தரிக்கமாட்டாதவள் என்கை. [அணிமழலைக்கிளிமொழி யாள்] - அழகியதாய் முக்தமான கிளியின் பேச்சுப்போலே யிருக்கிற பேச்சை உடையவள். [அலற்றிய சொல்] - தன் ஆற்றுமையாலே அக்ரமமாகச் சொன்ன பாசுரத்தை. [வழுவில்லா வண்குருகூர்ச் சடகோபன்] - அப்பிராட்டிபடியில் ஒன்றும் குறைவின்றிக்கேயிருக்கிற ஆழ்வார். [வாய்ந்துரைத்த] - கிட்டி உரைத்த. பாவபந்தத்தாலே நோவுபட்டுரைத்த [அழிவில்லாவாயிரத்துஇப்பத்து] - கேட்டார்கள் நெஞ்சை ஒருநாளும் விடாதேவர்த்திக்கிற இப்பத்து. இப்பாசுரத்தைக் கேட்டார்க்கு ஸமகாலத்திற்போலே ஸர்வகாலமும் ரஸிப்பிக்கும்படியாய்த்து இருப்பது. [நோயறுக்குமே] - பகவத்விச்லேஷமாகிற நோய் அறுக்கும். கலந்து பிரிந்து திர்யக்குக்களின் காலிலே விழுந்து க்லேசிக்கவேண்டா, விச்லேஷகந்த மில்லாத தேசத்திலே புகப்பெறுவர்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸித்தார்க்கு, பிரிவுக்கடியான ஸம்ஸாரதுரிதத்தை இதுதானே யறுத்துக்கொடுக்கும் என்கிறுர்.

[ஒழிவின்றித் திருமூழிக்களத்துறையும்] ஒருநாளும் விடநினையாதே அவ்வூரில் நித்யவாஸம்பண்ணுமவனை. [ஒண்சுடர்] "பின்னுனார் வணங்குஞ்சோதி" என்கிறபடியே, அவ்வூரில் நிலையால்வந்த புகரிருக்கிறபடி;—அவ்வூரில் போக்யதையால் வந்த புகர்; பிற்பாடர்க்கு முகங் கொடுக்கும் நீர்மையால் வந்த புகர். [ஒழிவில்லா] அவன் அவ்வூரையொழியில் தரிக்க மாட்டாதாப்போலே, அவளையொழியில் தரிக்கமாட்டாதவளென்கை; *"ந ச ஸீதா த்வயா ஹீநா" என்னுமவளிறே. [அணிமழலைக்கிளிமொழியாள்] அழகிய முக்தமான, கிளியின் பேச்சுப் போலேயிருக்கிற பேச்சையுடையவள். [அலற்றியசொல்] தன்னாற்றுமையாலே அக்ரமமாகச் சொன்ன பாசுரத்தை. [வழுவில்லா வண்குருகூர்ச்சடகோபன்] பிராட்டிபடியிலொன்றும் குறைவற்றிருக்கிற ஆழ்வார். [வாய்ந்துரைத்த] கிட்டியுரைத்த; பாவபந்தத்தாலே சொன்ன

வென்றபடி. [அழிவில்லாவாயிரத்துஇப்பத்து] கேட்டவர்கள்னெஞ்சை ஒருகாலும் விடாதே வர்த்திக்கிற இப்பத்து. இப்பாசுரத்தைக் கேட்டார்க்கு, ஸம்ஸாரத்திற்போலே ஸர்வகாலமும் ரஸம்பிறக்கும்படியாய்த்து இருப்பது. [ஸோபமுக்குமே] பகவத்விச்லேஷமாகிற வேரை யறுக்கும்; கலந்துபிரிந்து திர்யக்குக்களின் காலிலேவிழுந்து க்லேசிக்க வேண்டா; விச்லேஷ மில்லாத தேசத்திலே புகப்பெறுவர்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

---

## எட்டாந்திருவாய்மொழி—அறுக்கும்வினை : ப்ரவேசம்

---

ஒ.—எட்டாந்திருவாய்மொழியில், இப்படி தம்முடைய ஆர்த்தியை அறிவிக்கச்செய்தேயும் நம் பெருமாள் அப்போதே வாராமையாலே மிகவும் அவஸந்நரான ஆழ்வார் தூதப்ரேஷணத்தாலும் மந:ப்ரஸாதங்களாலும் அவனுடைய குணநுஸந்தானத்தாலும் 'அவன்வந்து நம்மை விஷயீகரித்துத் திருநாவாயிலே கொண்டுபோகை நிச்சிதம்' என்றத்யவஸித்து, வினைகளிலேவந்து திருவடி தன்னைத் திருவடிதொழுது போனபின்பு பிராட்டி "பெருமானைக்காண்பது எப்போதோ?" என்று பதறினாப் போலே திருநாவாயிலே புகவேணுமென்று பதறி, 'அங்கே புகவல்லேனே?' என்றும், 'புகும்நாள் என்று?' என்றும், 'அங்கேபுக்கு என்கண்ணாரக்கண்டு அடிமைசெய்யவல்லேனோ?' என்றும் தொடங்கி அநேக மநோரதங்களைப் பண்ணுகிறார். போகவிட்ட தூதர் வரப்பற்றாமை "நாம் அவனிருந்த விடத்தே போவோம்" என்று மநோரதிக்கிறாரென்றுமாம்.

இ.—எட்டாந்திருவாய்மொழியில், இப்படி தம் ஆர்த்தியை அறிவிக்கச் செய்தேயும் அப்போதே வாராமையாலே அவஸந்நரானவர் தூதப்ரேஷணத்தாலும் அவன்குணநுஸந்தானத்தாலும் வந்த மந:ப்ரஸாதத்தாலும் "அவன்வந்து நம்மை விஷயீகரித்து, அபிமத தேசமான திருநாவாயிலே கொண்டு போகை நிச்சயம்" என்று அத்யவஸித்து, க்ரமத்தாலே கொண்டுபோகப் பற்றாமையாலேபதறி, "அங்கே புகவல்லேனே, புகும் நாளென்றோ? அங்கேபுக்கு என்கண்ணாரக் கண்டு அடிமைசெய்யவல்லேனோ" என்று இப்படி அநேக மநோரதங்களைப் பண்ணுகிறார். திருவடிசென்று பிராட்டியைத் திருவடிதொழுது மீண்டபின்பு பெருமானைக்கிட்டுந்தனையும் பிராட்டிக்குச்சென்ற மநோரதம்போலே இவர்க்குச் செல்லுகிறது. "உபாயோபேயங்கள் ஈச்வரனே" என்று அத்யவஸித்தார்க்கு, ப்ராப்யருசியில் கனத்தாலும் விளம்பஹேதுவில்லாமையாலே, ப்ராப்யஸித்தியளவும் மநோரதம் செல்லாநிற்குமிறே. அதவா, போக விட்ட தூது வரப்பற்றாமை "நாம் அவனிருந்தவிடத்தே போவோம்" என்று மநோரதிக்கிறார். ப்ராப்ய ஸித்தியிலுண்டான த்வரையாலே, பெரியமுதலியார் எப்போதும் இத்திருவாய்மொழியை அநுஸந்தித் தருளுவரென்று 'பெரியமுதலியார் திருவாய்மொழி' என்றுபேர்த்து இதைச் சொல்லுவது.

ஈடு.—திருவடிசென்று பிராட்டியைத் திருவடிதொழுது மீண்டவாநந்தரம் பெருமானைக் கிட்டுவதற்கு முன்பு பிராட்டிக்குப்பிறந்த மநோரதம்போலே, இவர்விட்ட தூதர் அத்தலைப்பட்டு அவனைக்கொண்டுவருவதற்கு முன்னே நடுவு இவர்க்குப்பிறந்த மநோரதத்தைச் சொல்லுகிறது. இப்படி தம்முடைய ஆர்த்தியை அறிவிக்கச்செய்தேயும் அப்போதே வாராமையாலே அவஸந்நரானவர், தூதப்ரேஷணத்தாலும் அவன் குணநுஸந்தாநத்தாலும் மந:ப்ரஸாதத்தாலும் "அவன் வந்து நம்மை விஷயீகரித்து அபிமதஸ்தலமான திருநாவாயிலே கொடுபோகை நிச்சிதம்" என்று அத்யவஸித்து, க்ரமத்தால் போகப்பற்றாமையாலே பதறி, "அங்கேபுக வல்லேனே? புகும்

நான் என்றோ? "அங்கேபுக்கு என் கண்ணாரக்கண்டு அடிமைசெய்யவல்லேனே!" என்று இப்படி அநேகமநோரதங்களைப் பண்ணுகிறார். "உபாயோபேயங்களிரண்டும் ஈச்வரனே" என்று அத்யவஸித்தார்க்கு, ப்ராப்யருசி கனத்திருக்கையால் விளம்பம்பொறுக்க வல்லமையில்லாமையாலே, ப்ராப்யஸித்தியளவும் மநோரதம் செல்லாநிற்குமிறே. இம்மநோரதந்தான் இவனுக்குத் தவிராததுமாய், அதுதான் இனியதுமாய், இவனுடைய ஸ்வரூபத்தோடு சேர்ந்திருப்பதுமொன்றிறே. பெரியமுதலியார், ப்ராப்யஸித்தியில் த்வரையாலே எப்போதும் இத்திருவாய்மொழியை யநுஸந்தியாநிற்பர்; ஆகையாலே, இத்தை "பெரியமுதலியார் திருவாய்மொழி" என்றாய்த்துச் சொல்லுவது. அதவா, "சிட்டர்கள் தாழ்த்தார்களென்று தாமே அவன் வர்த்திக்கிற தேசத்தேறப்போக வொருப்படுகிறார்" என்பாருமுண்டு.

அறுக்கும்வினையாயின ஆகத்தவனை*
நிறுத்தும்மனத்தொன்றிய சிந்தையினார்க்கு*
வெறித்தண்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்*
குறுக்கும்வகையுண்டுகொலோ? கொடியேற்கே. (1)

ஆ.—முதற்பாட்டில், எனக்குத் திருநாவாய் குறுகுகைக்கு உபாயமுண்டோ? என்கிறார். [அறுக்குமென்று தொடங்கி] - அவனை ஹ்ருதயத்திலே நிறுத்தவேணுமென்னும் அத்யவஸாயத்திலே ஒருப்பட்ட மநோரதத்தை யுடையார்க்கு ஸகலது:க்கங்களையும் போக்கும். [வெறி] - பரிமளம். [கொடியேற்கு] - அங்குப் புகப்பெறாதே நோவுபடுகைக்கீடான பாபத்தைப்பண்ணின எனக்கு.

இ.—முதற்பாட்டில், எனக்குத் திருநாவாய் குறுகுகைக்கு உபாயமுண்டோ? என்கிறார். [அறுக்கும் வினையாயின] - வினையென்று பேர்பெற்றவற்றை அடங்கலும் போக்கும்; ருசிவிரோதி, உபாயவிரோதி, ப்ராப்திவிரோதி, சரீரத்தளவில் பர்யவஸிக்கவொட்டாதே ப்ராரப்தமாய் வருமவை, அவற்றையடைய ஒருகாலே போக்கும்; க்ரமத்தாலே போக்கவேண்டுவது தானேபோக்கிக்கொள்ளுமன்றிறே; அவன் போக்குமன்று "ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே" "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்கிறபடியேயாகக் கடவதிறே. இப்படிச் செய்வது ஆர்க்கென்னில்? [ஆகத்தவனை நிறுத்தும்மனத்தொன்றிய சிந்தையினார்க்கு] - அவனை ஹ்ருதயத்திலே நிறுத்தவேணுமென்னும் அத்யவஸாயத்திலே ஒருமைப்பட்ட மநோரதத்தை யுடையவர்க்கு. [வெறி இத்யாதி] - வினையை வர்த்திப்பிக்கிலும் புக்குக்கொடுமிக்க வேண்டும்படியாய்த்து தேசமிருப்பது. பரிமளத்தையுடைத்தாய் ச்ரமஹரமாய் நித்யவஸந்தமான சோலைகளாலே சூழப்பட்ட திருநாவாய். [குறுக்கும்வகையுண்டுகொலோ] - குறுகப்பண்ணும்விரகு ஏதோ வென்னுதல்; குறுகும்விரகு ஏதோவென்னுதல்; குறுக்குமென்று அத்தேசபாஷை. அந்த பாஷையாலே அருளிச்செய்வதே! என்று வித்தராயருளினார் எம்பெருமானார். [கொடியேற்கே] - ஆசாலேசமுடையார்க்கும் புகலாம் தேசமாயிருக்க, புகப்பெறாதே நோவுபடுகைக்கடியான பாபத்தைப்பண்ணின எனக்கு. 'கொடியேற்கு - ஆகத்தவனை நிறுத்தும் மனத்தொன்றிய சிந்தையினார்க்கு - வினையாயின - அறுக்கும் - திருநாவாய் குறுக்கும்வகை, உண்டுகொலோ?'

ஈடு.—முதற்பாட்டு. எனக்குத் திருநாவாய் குறுகுகைக்கு உபாயமுண்டோ? என்கிறார்.

[அறுக்கும் வினையாயின] வினையென்று பேர் பெற்றவை அடங்கலும் போக்கும்! — ருசிவிரோதி, உபாயவிரோதி, ப்ராப்யத்தை ப்ராபிக்குமிடத்தில் வரும் விரோதிகள், வர்த்தமான தேஹாந்தத்தளவிலே பர்யவஸிக்கையன்றிக்கே ப்ராரப்தசேஷமாய் நின்று அவ்வருகேயும் போம்படி விளம்பிக்கக் கடவவை: இன்னமின்னவைகள்தோறும் உண்டாயிருக்குமிறே விரோதிகள். புறப்புடையவை மூட்டுக்கழற்றுமாபோலே க்ரமத்தாலே போக்கவேண்டுவது தான் போக்குமன்றிறே; பகவத்ப்ரஸாதத்தாலே போமன்று ஒருக்காலேபோமிறே! *மேருமந்தரமாத்ரோபி*

அருகேயிருக்க இறக்கவோ? என்கிறார். [வடிவேல் தடங்கண் மடப்பின்னைமணாளன்] கூரிய வேல்போலே ஒராளும் ஒருநோக்கும் நேராய் போகத்தானவல்லாத போக்யதையை யுடைத்தான கண்ணையுடையளாய், ஆத்மகுணோபேதையான நப்பின்னைப்பிராட்டியுடைய செவ்வி புஜிக்கைக்கு இட்டுப்பிறந்தவனுமாய்த்து. [நெடியான்] இப்படிப்பட்ட மஹிஷீபரிஜநாதிகளால் எல்லைகாணவொண்ணாதவன். [உறையித்யாதி] அவனுக்கும் அவன்விபூதிக்கும் குறைவற வர்த்திக்கலாம்படி இடமுடைத்தான சோலைகளாலே சூழப்பட்ட திருநாவாயை. [அடியேன்] வனவாஸத்துக்குப் பெருமாளும்பிராட்டியுமாய்க்கலக்குமிடத்தில் பண்ணினபடியே எல்லா வடிமைகளும் செய்கைக்கு இளையபெருமாள் நேர்பட்டாப்போலேயாய்த்து, இங்குத்தைக்கு அடிமைசெய்கைக்கு இவர் நேர்பட்டபடியும். இளையபெருமாளைப்போலே அடிமைசெய்வித்துக் கொள்ளுகிற விஷயத்தில் குறையில்லையாய்த்துஇவர்க்கு. ஸ்ரீஜனகராஜன் திருமகளொருத்தியுமிறே அங்கு. [அணுகப்பெறுநாளெவைகொலோ] அத்தேசத்தை நான் கிட்டப் பெறுங்காலமேதோ?

எவைகொல் அணுகப்பெறுநாள் என்றெப்போதும்*
கவையில்மனமின்றிக் கண்ணநீர்கள் கலுழ்வன்*
நவையில்திருநாரணன்சேர் திருநாவாய்*
அவையுள்புகலாவது ஓர்நாள் அறியேனே. (3)

ஜீ.—மூன்றாம்பாட்டில், 'திருநாவாய்த்திருவோலக்கத்திலே புகும் நாள் என்று?' என்று அறிகிறிலேனென்று அவஸந்நராகிறார். [எவைகொல் என்று தொடங்கி] - அணுகப்பெறுநாள் எவையோவென்று ஸர்வகாலமும் மற்றொன்றறியாதே ஒருமைப்பட்டுக் கண்ணீர் பாயாநிற்பன். [நவையில் திருநாரணன்] - துர்லபத்வாதிதோஷம் தட்டாதபடி பிராட்டியோடேகூடி ஆச்ரிதஸுலபனானவன்.

இ.—மூன்றாம்பாட்டில், 'திருநாவாயில்திருவோலக்கத்திலேபுகும்காலமென்று?' என்று அறிகிறிலேன் என்கிறார். [எவைகொலித்யாதி] - நான் வந்து கிட்டப்பெறும் நாளெவை? என்று. [எப்போதும்]- ஒருகால்இத்தைச்சொல்லி அல்லாதபோது அப்பரதை பண்ணுகிறேனோ? [கவையில் மனமின்றி] - அதுதன்னிலும் இதுவும் முகாந்தரமுமாய்ச் செல்லுகிறதோ? இருதலைத்த நெஞ்சின்றியே. [கண்ணீர்கள் கலுழ்வன்] - கண்ணீர்கள் வெள்ளமிட விருப்பன். [நவையில் திருநாரணன்] - துர்லபத்வாதிதோஷமின்றிக்கேயிருக்கிற ஸ்ரீமானான நாராயணன். ஸௌலப்யத்துக்குறைற்றுன பிராட்டியோடேகூடத் திருநாவாயிலேவந்து ஸுலபனானவன். [திருநாவாயவையுள் புகலாவதோர் நாளறியேனே] - திருநாவாயிலே பேரோலக்கமாகவிருக்க அத்திரளிலேசென்று கூடப்பெறும்நாளென்றென்று அறிகிறிலேன். அவை - ஸபை, நவை - குற்றம். ''அடியார்கள்குழாங்களை - உடன்கூடுவதென்று கொலோ'' என்றிருக்குமவராகையாலே, அந்நாளை யாசைப்படுகிறார்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. 'திருநாவாயில் திருவோலக்கத்திலே புகும்நாள் என்று?' என்றறிகிறிலேனென்கிறார்.

[எவைகொலித்யாதி] நான் வந்து கிட்டப்பெறும்நாள் எவை என்று. [எப்போதும்] ஒருகால் இத்தைச்சொல்லி அல்லாதபோது அப்பரதைப்பண்ணுகிறேனோ? [கவையில்மனமின்றி] அதுதன்னிலும் இதுவும் முகாந்தரமுமாய்ச் செல்லுகிறதோ? இருதலைத்த நெஞ்சின்றிக்கே. [கண்ணீர்கள்கலுழ்வன்] கண்ணீர்கள் வெள்ளமிடவிருப்பன். [நவையில்திருநாரணன்] துர்லபத்வாதிதோஷமின்றிக்கே யிருக்கிற ஸ்ரீமானான நாராயணன். ஸௌலப்யத்துக்குறைற்றுள பிராட்டியோடேகூடத் திருநாவாயிலே வந்து ஸுலபனானவன். 'திருநாவாயிலே பேரோலக்கமாக விருக்க, ''அடியார்கள் குழாங்களை - உடன் கூடுவதென்றுகொலோ!'' என்று ஆசைப்பட்ட நான் அத்திரளிலே சென்று கூடப்பெறும் நாள் என்று?' என்றறிகிறிலேன், அவை - ஸபை. நவை - குற்றம்.

நாளேலறியேன் எனக்குள்ளன* நானும்
மீளாவடிமைப்பணி செய்யப்புகுந்தேன்*
நீளார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்*
வாளேய்தடங்கண் மடப்பின்னைமணாளா! (4)

ஒ.—நாலாம்பாட்டில், எல்லாவடிமையும் கொள்ளுகைக்கோகை திருச்சோலையையுடைய திருநாவாயிலே நப்பின்னைப்பிராட்டியோடே கூட எழுந்தருளியிருக்கிற உனக்கு ஆத்மாந்ததாஸ்யம் பண்ணும்படி விஷயீக்ருதனான நான் திருவடிகளில் அடிமையிலே அதிகரிக்கும்நாள் என்றென்று அறிகிலேனென்று பதறுகிறார். [வாளேய்தடங்கண்] - வாள்போலேயாய்ப் பெருத்திருந்துள்ள கண்.

இ.—நாலாம்பாட்டில், ஆத்மாந்ததாஸ்யம் பண்ணும்படி விஷயீக்ருதனான நான் நப்பின்னைப் பிராட்டியோடே கூட விருக்கிற இருப்பிலே அடிமை செய்யப்பெறும் நாள் என்றென்றறிகிறிலேன் என்கிறார். [நாளேலறியேனெனக்குள்ளன] - பெறக்கடவ நாள் என்றென்று அறிகிறிலேன் என்னுதல். பிரிந்திருக்கக் கடவ நாளெத்தனையென்று அறிகிறிலேன் என்னுதல். பேறுவித்தமானபின்பு பதறுகிறதென் சொல்லீர்? - [நானும் மீளாவடிமைப்பணிசெய்யப் புகுந்தேன்] - நித்யஸூரிகள்பண்ணும் ஆத்மாந்ததாஸ்யத்திலே யன்றோ நானும் அதிகரித்தது. ஒருப்ரயோஜநத்தைக்கொள்ளக் கிட்டினவனுமாயிருக்கிறேனோ? தாஸ்ய பரிமளத்தில் கவடறியாதவனுமாயிருக்கிறேனோ ? [நீளார்மலர்ச் சோலைகள்] - ஓங்கிப்பரப்பு மாறப் பூத்தசோலைகளையுடைத்தான தேசம்; அடிமைசெய்கைக்குப் புஷ்பாத்யுபகரணங்களால் குறைவற்ற தேசமென்னுதல். நப்பின்னைப் பிராட்டியும்தானுமாகப் புஷ்பபசயம் பண்ணலாம் தேசமென்னுதல். [வாளேய்தடங்கண்] - ஒளியை யுடைத்தான பரந்த கண்ணென்னுதல், வாள்போலே கண்டாரை அறுக்க வல்ல பரந்த கண்ணென்னுதல்; அவனை அநந்யார்ஹனும்படியாக்கவல்ல கண்ணழகையுடையவள் என்கை. [மடப்பின்னை மணாளா] - அழகேயன்றிக்கே ஆத்மகுணங்களாலும் துவக்க வல்லவருக்கு வல்லபனானவனே! தேசாந்தரம்போன ப்ரஜை வீட்டை அணித்தானவாறே தாய்மாரைப் பலகாலும் நினைக்குமா போலே ப்ராப்யதேசம் அணித்தானவாறே திரளவும் தனித்தனியும் பிராட்டிமாரை அநுஸந்திக்கிறார்.

ஈடு.—நாலாம்பாட்டு. 'ஆத்மாந்ததாஸ்யம் பண்ணும்படி விஷயீக்ருதனான நான், நப்பின்னைப் பிராட்டியோடேகூடவிருக்கிற விருப்பிலே யடிமைசெய்யப் பெறும் நாள் என்று? என்று அறிகிறிலேன்' என்கிறார்.

*[நாளேலறியேனெனக்குள்ளன] பெறக்கடவ நாள் என்றென்றறிகிறிலேன் என்னுதல்; நான் பிரிந்திருக்கக்கடவ நாளெத்தனையென்றென்றறிகிறிலேனென்னுதல். பேறு வித்தமான பின்பு பதறுகிறதென்? என்னில் - [நானும் மீளாவடிமைப்பணி செய்யப்புகுந்தேன்] நித்யஸூரிகள்பண்ணும் ஆத்மாந்ததாஸ்யத்திலேயன்றோ நானும் அதிகரித்தது? ஒருப்ரயோஜநத்தைக்கொள்ளக் கிட்டினவனுமாயிருக்கிறேனோ? தாஸ்யபரிமளத்திற் கவடறியாதவனுமாயிருக்கிறேனோ? [நீளார்மலர்ச்சோலைகள்] ஓங்கிப்பரப்புமாறப்பூத்த சோலைகளையுடைத்தான தேசம். அடிமைசெய்கைக்குப் புஷ்பாத்யுபகரணங்களால் குறைவற்றதேசம் என்னுதல். நப்பின்னைப்பிராட்டியும் தானுமாகப்புஷ்பாபசயம்பண்ணலாம் தேசமென்னுதல். [வாளேய்தடங்கண்] ஒளியையுடைத்தான பரந்த கண் என்னுதல்; வாள்போலே கண்டாரை அறுக்க வல்ல பரந்த கண் என்னுதல்; அவனை அநந்யார்ஹமாக்கவல்ல கண்ணழகையுடையவளென்கை. [மடப்பின்னைமணாளா] அழகேயன்றிக்கே ஆத்மகுணங்களாலும் துவக்கவல்லவளுக்கு வல்லபனானவனே! தேசாந்தரம்போனப்ரஜை ஊர் அணித்தானவாறே தாய்மாரைப் பலகால் நினைக்குமாபோலே, ப்ராப்யதேசம் அணித்தானவாறே திரளவும் தனித்தனியும் பிராட்டிமாரை அநுஸந்திக்கிறார்.*

மணாளன் மலர்மங்கைக்கும்மண் மடந்தைக்கும்*
கண்ணாள னுலகத்துயிர் தேவர்கட்கெல்லாம்*
விண்ணாளன்விரும்பியுறைந்திருநாவாய்*
கண்ணாரக்களிக்கின்றதிங்கென்றுகொல்கண்டே. (5)

ஓ.—அஞ்சாம்பாட்டில், திருநாவாயை என் கண்ணின்விடாய் தீரக் கண்டு க்ருதார்த்தனாவ தென்றோ? என்கிறார். [கண்ணாளன் உலகத்துயிர் தேவர்கட்கெல்லாம் விண்ணாளன் விரும்பியுறையும் திருநாவாய்] -லோகத்திலுண்டான தேவமனுஷ்யாதிகளுக்கு நிர்வாஹகனும், ஸ்ரீவைகுண்டநாதனுமாயிருந்தவன் அத்யாதரம் பண்ணிக்கொண்டு வர்த்தித்தருளுகிற திருநாவாயை. [இங்கு] - ப்ரக்ருதி யோடே.

இ.— அஞ்சாம்பாட்டில், திருநாவாயை என் கண்ணின்விடாய்தீரக்கண்டு உகப்பதென்றோ? என்கிறார். [மணாளன் இத்யாதி] - பிராட்டிக்கும், ஸ்ரீபூமிப்பிராட்டிக்கும் வல்லபன், புருஷகாரமாவாரும் பொறைக்குடலாவாரும் உண்டாயிருக்க இழக்கக்கடவேனோ? [கண்ணாளன் இத்யாதி] - லோகத்தில் மனுஷ்யர்களென்ன, தேவர்களென்ன, எல்லார்க்கும் நிர்வாஹகனுமவன். அவர்கள்பக்கலுள்ள ரக்ஷையைப்பற்ற நோக்குகிறபடி. [விண்ணாளன்] - பிராட்டிமாரும் தானும் தனக்குத் தகுதியான பரமபதத்திலே திவ்ய பர்யங்கத்திலே யிருந்து நித்யஸூரிகளை நிர்வஹிக்கிறவன். [விரும்பியுறையும் திருநாவாய்] - உபய விபூதிநாதன் பெரும்பேறாக ஆதரித்து வர்த்திக்கிற தேசம். அவன் விரும்புகிற தேசமல்லது ப்ராப்ய மில்லையிறே. [கண்ணார] - காண்கையிலே விடாய்ப்பட்ட கண்கள் வயிறு நிறைய. [களிக்கின்றது இங்கு என்றுகொல்] - "அஹமங்கம்" என்று ஒரு தேச விசேஷத்திலே களிக்கையொழிய, இங்கே களிக்கப்பெறுவதென்றோ? [கண்டே] - "காண்கை நிச்சிதம்" என்னும் விச்வாஸத்தால் களிக்கை யன்றிக்கே, கண்டே களிப்பது என்றோ?

ஈடு.—அஞ்சாம்பாட்டு. திருநாவாயைக் கண்ணின் விடாய்தீரக்கண்டு அநுபவிப்பதென் றென்கிறார்.

[மணாளனித்யாதி] பெரியபிராட்டியார்க்கும் ஸ்ரீ பூமிப்பிராட்டியார்க்கும் வல்லபனானவன். புருஷகாரமாவாரும் பொறைக்குடலாவாரு முண்டாயிருக்க இழக்கவேணுமோ? [கண்ணாளனித்யாதி] லோகத்தில் மநுஷ்யர்களென்ன, தேவர்களென்ன, எல்லார்க்கும் நிர்வாஹகனானவன், அவர்கள்பக்கல் ரக்ஷையைப்பற்ற நோக்குகிறபடி. [விண்ணாளன்] பரிக்ரஹத்தாலிருக்கிறபடி; பிராட்டிமாருந்தானும் தனக்குத்தகுதியான ப்ரமபதத்தில் திவ்யபர்யங்கத்திலேயிருந்து நித்யஸூரிகளை நிர்வஹிக்கிறவன். [விரும்பியுறையும்திருநாவாய்] உபயவிபூதிநாதன் பெரும்பேறாக ஆதரித்து வர்த்திக்கிறதேசம். அவன் விரும்புகிறதேசமல்லது ப்ராப்யமில்லையிறே. [கண்ணார] காண்கையிலே விடாய்ப்பட்டகண், ஆர - வயிறுநிறைய. [களிக்கின்றதுஇங்கு என்றுகொல்] "அஹமன்னமஹமன்னம்" என்று ஒரு தேசவிசேஷத்தே களிக்கையொழிய, இங்கே களிக்கப்பெறுவது என்றோ? [கண்டே] "காண்கை நிச்சிதம்" என்னும் விச்வாஸத்தால் களிக்கையன்றிக்கே, கண்டே களிப்பதென்றோ?

கண்டேகளிக்கின்றது இங்கென்றுகொல்கண்கள்*
தொண்டேயுனக்காயொழிந்தேன் துரிசின்றி*
வண்டார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்*
கொண்டேயுறைகின்ற எங்கோவலர்கோவே. (6)

ஓ.—ஆறாம்பாட்டில், திருநாவாயில் எம்பெருமானைக் குறித்து, கண்கள் உன்னைக்கண்டு களிப்ப தென்றோ? என்கிறார். [தொண்டே உனக்காய் ஒழிந்தேன் துரிசின்றி] - அந்யபரனாகை கெட்டு உனக்கே

என்று ரக்ஷகனை இந்த்ரனுக்குக் கொடுக்கைக்காக அவன்பக்கலினின்றும் விபூதியை வாங்கினுனுய்த்து. ஆச்ரிதருடைய அபேக்ஷிதஸித்திக்குத் தன்னையழியமாறும் ஸ்வபாவனென்கை. [தேவாசுரஞ் செற்றவனே] - தேவாஸுரஸங்க்ராமத்திலேபரஸ்பரவதமேயைச் சென்றவாறே, அநுகூலரான தேவர்களுக்காக அஸுரர்களை யழியச்செய்தவனே! மஹாபலிபக்கல் குணலேசத்தாலே தன்னையழியமாறினான், அங்கு அவ்வனுமொன்றில்லாமையாலே அவர்களை யழியச்செய்தபடி. [திருமாலே] - ஆச்ரிதரை ரக்ஷிக்கைக்கும் தத்ப்ரதிகூலரை நிரஸிக்கைக்கும் அடி ச்ரிய:பதியாகையாலே; தான் உகவாதார்பக்கல் ஐச்வர்யத்தைமாற்றி உகப்பார்க்குக் கொடுக்கைக்கு அடி ச்ரிய:பதியாகையாலே. [நாவாயுறைகின்ற] - ரக்ஷகனாமவன் தூரஸ்த்தனாகையன்றியே ஆச்ரிதரக்ஷணார்த்தமாகத் திருநாவாயிலே நித்யவாஸம் பண்ணுகிறவனே! [நாரணநம்பி] - அதுக்குஉறுப்பாக ஆச்ரிதவத்ஸலனாய் "அவர்களுக்குஉறுப்பாகப் பெற்றோம்" என்று அத்தாலே பூர்ணனானவனே! ஆச்ரிதரக்ஷணத்தை நினைத்து ஸர்வாந்தர்யாமியானவன் என்னுமாம். [ஆவாவடியானிவனென்றருளாயே] - "அநந்யகதியான இவன் ஐயோ நோவுபடுவதே" என்று க்ருபைபண்ணியருளவேணும்; "லோகநாதம் தேவதேவேச நார்ச்சநாதேள ஸ்துதௌசை, ஸாமர்த்த்யவான் க்ருபாமாத்ரமநோவ்ருத்தி: ப்ரஸீத மே". இவன் நமக்கு அஸாதாரணனென்று, ஸம்பந்தத்தைப் பார்த்து க்ருபைபண்ணியருளவேணும் என்றுமாம்.

ஈடு.—ஏழாம்பாட்டு. ஆச்ரிதார்த்தமாகத் திருநாவாயிலே நித்யவாஸம் பண்ணுகிற தேவர், அநந்யகதியென்று என்பக்கலிலே க்ருபைபண்ணியருளவேணுமென்கிறார்.

[கோவாகியமாவலியை நிலங்கொண்டாய்] ஸர்வேச்வரன் இந்த்ரனை த்ரைலோக்யாதிபதியாக்கிவைத்தான்; அவனைத்தள்ளி அந்தப்பதத்தைத் தானெறட்டுக்கொண்டு "தானே அரசு" என்றிருந்தானாய்த்து. நீ கொடுக்கக் கொள்கையன்றிக்கே, அதுமெல்லாம் தானேயாமகன் என்றபிமானித்திருந்தானாய்த்து; "வெறும்புறத்திலே, தன்னதல்லாதத்தை 'தன்னது', என்றெறட்டுக்கொண்டிருக்கக்கடவ - அவன்கையிலே இவ்விஷயமுங்கிடக்குமாகில் நாடுகுடிக்கிடவாது" என்று பார்த்தருளி, இந்த்ரனதான விபூதியை அவன்பக்கலில்நின்றும் வாங்கினான். [தேவாசரஞ்செற்றவனே] - தேவாஸுரஸங்க்ராமத்திலே அவர்கள் படுவது இவர்கள் படுவதாய் இங்ஙனே புநவச் செல்லப்புக்கவாறே, ஒருதலையையழித்து தேவஜாதிக்குக் குடியிருப்பும் பண்ணிக்கொடுத்தானாய்த்து. [திருமாலே] ஆச்ரிதரக்ஷணத்துக்கும் தத்ப்ரதிகூல நிரஸநத்துக்கும் அடி ச்ரிய:பதியாகை. [நாவாயுறைகின்ற] இப்படி ரக்ஷிக்குமிடத்தில் அடுத்தணித்தாக முகந்தோற்றத் திருநாவாயிலே நித்யவாஸம் பண்ணுகிற. [என்நாரணநம்பி] ஆச்ரிதவர்க்கத்தினுடைய ரக்ஷணத்திலேநோக்காக ஸர்வாந்தர்யாமியானவன். [நாரணநம்பீ] அதுக்கு உறுப்பாக ஆச்ரிதவத்ஸலனாய், அவர்களுக்கு உறுப்பாகப் பெற்றோமென்றத்தாலே பரிபூர்ணனானவனே! [ஆவா இத்யாதி] *க்ருபாமாத்ரமநோவ்ருத்தி:* என்கிறபடியே, 'ஐயோ, இவன் அநந்யகதி; இவனுக்கு வேறொரு புகலில்லை' என்று என்பக்கலிலே க்ருபைபண்ணியருளவேணும். [அடியான்] அவன் அருளுகைக்கும் இவன் அருள்கொள்ளுகைக்கும் ஸம்பந்தஞ்சொல்லுகிறது.

அருளாதொழிவாய் அருள்செய்து* அடியேனைப்
பொருளாக்கி உன்பொன்னடிக்கீழ்ப்புகவைப்பாய்*
மருளேயின்றி உன்னைஎன்னெஞ்சத்திருத்தும்*
தெருளேதரு தென்திருநாவாயென்தேவே! (8)

ஒ.—எட்டாம்பாட்டில், அபிலஷித்தபடி பெருமையாலே திருவுள்ளம் கலங்கின ஆழ்வார் "அருளிலுமருள், தவிரிலும்தவிர, இப்போது கலங்காதே உன்னை அநுஸந்திக்கவல்லேனும்படி பண்ணியருள்வேணும்" என்றார்த்திக்கிறார். [அருளாதொழிவாயென்று தொடங்கி] - க்ருபைபண்ணுதொழியிலும்ழி, க்ருபைபண்ணி நிரதிசயபோகயமான திருவடிக்கீழே என்னை வைத்துக்கொள்ளிலும்

னோர். [மருளோ என்று மேலுக்கு]-தென்திருநாவாய் என்தேவே! அஜ்ஞாநகந்தமில்லாதபடி உன்னை என்நெஞ்சிலே இருத்தும்தெளிவைத் தரவேணும்.

இ.—எட்டாம்பாட்டில், அப்படியே அபேக்ஷிதம் பெறுமையாலே, "அருளவுமாம், தவிரவுமாம்; அஜ்ஞாநகந்தமில்லாதபடி உன்னை என்னெஞ்சிலே இருத்தும்படி தெளிவைத் தரவேணும்" என்கிறார். [அருளாதொழிவாய்] - இவன் செய்தபடி செய்கிறானென்று க்ருபைபண்ணாதேயிருக்கிலும்இரு; என் துர்க்கதியைக்கண்டு க்ருபைபண்ணி நிரதிசயபோக்யமான உன் திருவடிகளின்கீழே அநந்யார்ஹமான என்னை வைத்துக்கொள்ளிலும் கொள். [மருள் இத்யாதி] - மயர்வறமதிநலமருளினபடியே அஜ்ஞாநகந்தமில்லாதபடி உன்னை எப்போதும் என்மநஸ்ஸிலே வைத்துக்கொள்ளும்படி, "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" என்கிற தெளிவைத் தரவேணும். [தென்திருநாவாயென்தேவே] - "திருநாவாயிலே நின்றருளின நீயே ஆச்ரயணீயன்" என்னுமிடத்தை எனக்கறிவித்தவனே!

ஈடு.—எட்டாம்பாட்டு. அப்போதே யபேக்ஷிதம் பெறுமையாலே, "அருளவுமாம், தவிரவுமாம்; அஜ்ஞாநகந்தமில்லாதபடி உன்னை என்னெஞ்சிலே யிருத்தும்படி தெளிவைத் தரவேணும்" என்கிறார்.

[அருளாதொழிவாய்] என்பக்கல் க்ருபைபண்ணாதே இவன் பட்டது படுகிறான் என்றிருக்கிலும் இரு. [அருள்செய்து] அன்றிக்கே, என் துர்க்கதியைக்கண்டு க்ருபைபண்ணி. [அடியேனை யித்யாதி] அலைத்கல்பனாயிருக்கிற என்னை "ஸந்தேஹம்" என்கிறபடியே ஒருவஸ்துவாம்படி பண்ணி, நிரதிசயபோக்யமான உன் திருவடிகளின் கீழே வைத்துக்கொள்ளிலும் கொள். பொருவாருரை வைத்துக்கொள்ளும் ஸ்தானம் பொன்னடிக்கீழ்ப்போலே காணும். [மருளேயின்றியித்யாதி] அடியில் மயர்வறமதிநலமருளினாப்படியே, அஜ்ஞாநகந்தமில்லாதபடி உன்னை என் மநஸ்ஸிலே எப்போதும் வைத்துக்கொள்ளும்படி, "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே" என்கிற தெளிவைத் தரவேணும்; [தென்திருநாவாயென்தேவே - தெருளேதரு] என்று க்ரியை; அன்றிக்கே, "மருளேயின்றி யுன்னை என்னெஞ்சத்திருத்தும் தெருளேதரு தென்திருநாவாய்என்தேவே! அருளாதொழிவாய், அருள்செய்து அடியேனைப் பொருவாக்கி யுன்பொன்னடிக்கீழ்ப்புகவைப்பாய்; திருவுள்ளமானபடிசெய்" என்றும் பின்னான் பணிப்பது.

தேவர்முனிவர்க்கு என்றுங்காண்டற்கரியன்*
மூவர்முதல்வன் ஒருமூவுலகாளி*
தேவன்விரும்பியுறையுந் திருநாவாய்*
யாவரணுகப்பெறுவார் இனியந்தோ? (9)

ஒ.—ஒன்பதாம்பாட்டில், "ந தே மநுஷ்யா தேவாஸ்தே" என்றுசக்ரவர்த்தி சொன்னபோலே "திருநாவாய் காணப்பெறாதே நான் முடியாநின்றேன். இனிவேறு திருநாவாய் அநுபவிக்கும் பாக்யவான்களாரோ" என்கிறார். [தேவரென்று தொடங்கி] ப்ரஹ்மாதிகளுக்கும் ஸநகாதிகளுக்கும் துர்ஜ்ஞேயனும் ப்ரஹ்மாதிகளுக்கும் காரணபூதனுமான ஸர்வேச்வரனும் அத்யந்த விலக்ஷணனுமானவன் அத்யாதரத்தைப் பண்ணிக்கொண்டு நிரந்தரமாக வர்த்திக்கிற திருநாவாயை.

இ.—ஒன்பதாம்பாட்டில், தாம் இப்படிச் சொன்ன வநந்தரம் அவன்பக்கல் ஒருவாசி காணாமையாலே, "ந தே மநுஷ்யா தேவாஸ்தே" என்று சக்ரவர்த்தி சொன்னபோலே "திருநாவாய் காணப்பெறாமல் முடியாநின்றேன்; வேறு அவ்வூரை அநுபவிக்கும் பாக்யவான்களாரோ?" என்கிறார். [தேவரித்யாதி] - "ஸ்வயத்நத்தாலே காண்போம்" என்னும் ப்ரஹ்மாதிகளுக்கும் ஸநகாதிகளுக்கும் காணவரியனாயிருக்கும். [மூவர்முதல்வன்] - ப்ரஹ்மருத்ராதிகள் நடுவே வந்தவதரித்து அவர்களுக்கு நிர்வாஹகனானவன் என்னுதல்; ப்ரஹ்மருத்ராதிகளுக்கு நிர்வாஹகன் என்னுதல். [ஒரு மூவுலகாளி] - மேலும்கீழும் நடுவுமான ஸர்வலோகத்துக்கும் அத்விதீயனான நிர்வாஹகன். [தேவன்] - ஸர்வாதிக

ஜாதீயன். [விரும்பியுறையும் திருநாவாய்] - இப்படி ஸர்வேச்வரனுமிருக்க, ஒரு குடியிருப்பில்லாதாரைப்போலே, "ஆச்ரிதரக்ஷணத்துக்குப் பாங்கான விடம்" என்று அத்யாதரம் பண்ணிவர்த்திக்கிற தேசத்தை. [யாவரணுகப்பெறுவாரினி] - நான் முடியாநின்றேன், இனி, இப்பேறு பெற இருக்கிறாரோ! "ந தே மநுஷ்யா:" என்கிறபடியே மனுஷ்யர்க்குக் கூட்டல்லர். [அந்தோ] - உடைமையான எனக்கு உள்ளது உடையவனுக்கின்றிக்கே ஒழிவதே!

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. இப்படிச் சொன்னவிடத்திலும் ஒருவிசேஷகடாக்ஷம் பண்ணாமையாலே, "நான் இவ்வரசைபோடே முடியாநின்றேன்; என்னபிமதம் பெறப்புகுகிற பாக்யாதிகர் ஆரோ?" என்கிறார்.

[தேவர்முனிவர்க்கு என்றும்காண்டற்கரியன்] ப்ரஹ்மாதிகளுக்கும் ஸநகாதிகளுக்கும் ஸ்வயத்நத்தாலே என்றுமொக்கக் காணவரியனாயுள்ளவன். [மூவர்முதல்வன்] ப்ரஹ்மருத்ரர்கள்நடுவே வந்து அவதரித்து, அவர்களுக்கு நிர்வாஹகனென்னுதல். ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களுக்கு நிர்வாஹகனென்னுதல். [ஒரு மூவுலகாளி] இந்த்ரமுகத்தாலே நின்று த்ரைலோக்யத்தையும் ரக்ஷிக்கும்படியைச் சொல்லுதல்; அன்றிக்கே, கீழும் மேலும் நடுவுமான ஸர்வலோகத்துக்கும் அத்விதீய நாயகன் என்னுதல். [தேவன்] ஸர்வவிஸஜாதீயன். [விரும்பியுறையும் திருநாவாய்] இப்படி ஸர்வநிர்வாஹகனானவன், தனக்கென்ன ஒருகுடியிருப்பு இல்லாதானொருவன் குடியிருப்புப் பெற்றாப்போலே, ஆச்ரிதரக்ஷணத்துக்குப் பாங்கான தேசம் என்று அத்யாதரம் பண்ணி வர்த்திக்கும் தேசத்தை. [யாவரணுகப் பெறுவார்இனி] நான் முடியப்புகாநின்றேன்; இவிப் பெறவிருக்கிறார் ஆரோ! "ந தே மநுஷ்யா:" என்கிறபடியே, அவர்கள் மநுஷ்யர்களுக்குக் கூட்டல்லர். 'இனி' - என்கிற பதத்தாலே - நான் முடிந்தேன் என்கிறது வ்யஞ்ஜிக்கிறது. 'அந்தோ' என்கிறபதத்தாலே - எனக்குள்ளது, அவனுக்கு உண்டாகப்பெறு தொழிவதே. "ந தே மநுஷ்யா:" அவர்கள் செத்துப்பிறக்கிறவர்களுக்குக் கூட்டல்லர்கள். "தேவா:" அவர்கள் நித்யாநுபவம்பண்ணுகிறவர்களுக்குக் கூட்டாயிருந்தனர். "ய இத்யாதி" பதினாலாண்டும் ஒருபடி தப்பிக்கிடந்து அவர் மீண்டுவந்தால் அவ்வொப்பித்த முகத்தைக் காணப்பெறும் பாக்யாதிகர் ஆரோ? இங்கே, காதாசித்காநுபவம் பண்ணுமவர்கள், நித்யாநுபவம் பண்ணுமவர்களிலும் சீரியரே; 'விண்ணுளாரிலும்சீரியரே." "வர்ஷே பஞ்சதசே புந:" பதினாலாண்டும்கழித்துப் பதினையாம்ஆண்டைக்கு இருப்பாரிதே காணப்பெறுவார்? காலம் முடிந்ததென்றிருக்கிறானித்து சக்ரவர்த்தி.

அந்தோ! அணுகப்பெறுநாள் என்றுஎப்போதும்*
சிந்தைகலங்கித் திருமாலென்றழைப்பன்*
கொந்தார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்*
வந்தேயுறைகின்ற எம்மாமணிவண்ணா. (10)

ஓ.—பத்தாம்பாட்டில் உன்னை ஆசைப்பட்டுப் பெறுநொழிந்தாலும் விடமாட்டாதே சிந்தை கலங்கித் திருமாலே என்றழைப்பன்! என்கிறார். [அந்தோவென்று தொடங்கி]-ஐயோ! அணுகப்பெறும் நாள் என்றோ? என்று ஸர்வகாலமும் ஹ்ருதயம் கலங்கி ச்ரிய:பதியே! என்று கூப்பிடாநிற்பன். [கொந்தார் மலரென்று மேலுக்கு] - நிரதிசயபோக்யமான திருச்சோலைகளாலே சூழப்பட்ட திருநாவாயிலே ஆச்ரிதர்க்கு ஸுலபனும்வந்து வர்த்தித்தருளுவதுஞ்செய்து அதிசலாக்யமான அழகையுடையவனே!

ஈ.—பத்தாம்பாட்டில், உன்னைப்பெறுதொழிந்தாலும் விடமாட்டாதே மநஸ்ஸுகலங்கிக் கூப்பிடாநிற்பன் என்கிறார். [அந்தோ இத்யாதி] - சொல்லத்தொடங்கினது தலைக்கட்டமாட்டாத பலஹாநியாலே

அந்தோ !. என்கிறார். "அணுகப்பெறுநாள் எவை" என்னவேண்டியிருக்க அதுமாட்டாதொழிகிறாரிறே. ஒருகால்சொல்லி பலஹானியாலே விடுகையன்றிக்கே, ஸர்வகாலமும் ஹ்ருதயம் கலங்கி மாதா பிதாக்களைச்சொல்லிக் கூப்பிடுமாபோலே திருமாலென்றழையாநிற்பன். "பிதா மாதா ச மாதவ:". [கொந்தாரித்யாதி] - கொத்துமிக்க மலரையுடைத்தான சோலைகளாலே சூழப்பட்டிருந்துள்ள திருநாவாயிலே. நித்ய வஸந்தமான சோலைகளை உடைத்தாகையாலே நிரதிசயபோக்யமான தேசமென்கை. [வந்தேயித்யாதி] - ஒருதேசத்திலேசென்றே காணக்கடவதான வடிவைக்கொண்டு ஆச்ரிதார்த்தமாகவந்து நித்யவாஸம் பண்ணுகிறவனே! அவ்வடிவை எனக்குக் காட்டாதவன்று, உன்வரவு அஸத்ஸமமன்றோ வென்கை.

௧0.—பத்தாம்பாட்டு. உன்னைக் காணப்பெறுமை நெஞ்சழிந்து கூப்பிடாநின்றேன் என்கிறார்.

[அந்தோஅணுகப்பெறுநாள் என்றெப்போதும்] சொல்லத்தொடங்கினது தலைக்கட்ட மாட்டாத பலஹானியாலே, அந்தோ! என்கிறார். "அணுகப்பெறுநாள் எவைகொல்" என்னவிறே நினைப்பது. [எப்போதும்] ஒருகால் சொல்லப்புக்கு இளைத்தால் விடுகையன்றிக்கே, ஸர்வகாலமும். [சிந்தைகலங்கியித்யாதி] ஹ்ருதயம்கலங்கி; மாதாபிதாக்களைப்பேரைச்சொல்லி ஆர்த்தனான ப்ரஜை கூப்பிடுமாபோலே திருமால் என்றழைப்பன். [கொந்தார்இத்யாதி] கொத்து மிக்க மலரையுடைத்தான சோலையாலே சூழப்பட்ட திருநாவாயிலே. நித்யவஸந்தமான சோலைகளை யுடைத்தாகையாலே நிரதிசயபோக்யமான தேசமென்கை. [வந்தேயுறைகின்ற] ஒரு தேசவிசேஷத்திலே சென்று காணக்கடவதான வடிவைக்கொண்டு ஆச்ரிதார்த்தமாக வந்து நித்யவாஸம் பண்ணுகிறவனே! அவ்வடிவு எனக்குக் காட்டாதவன்று உன்வரவு அஸத்ஸமமென்கை.

வண்ணம்மணிமாட நல்நாவாயுள்ளானை*
திண்ணம்மதிள் தென்குருகூர்ச்சடகோபன்*
பண்ணார்தமிழ் ஆயிரத்திப்பத்தும்வல்லார்*
மண்ணாண்டு மணங்கமழ்வர் மல்லிகையே. (11)

௧௧.—நிगமத்தில், இத்திருவாய்மொழிகற்றார் பெறும்பேற்றை யருளிச்செய்கிறார். [வண்ணம் மணிமாடமென்று தொடங்கி]. நாநாவர்ணங்களான ரத்நங்களாலே செய்யப்பட்ட மாடங்களையுடைத்தாய் நிரதிசயபோக்யமான திருநாவாயிலே நின்றருளினவனை. [திண்ணம்மதிளென்று மேலுக்கு] - திண்ணிதான மதிளையுடைத்தான திருநகரியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த பண் ஆர்ந்த தமிழான ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி வல்லார்கள், ஐஹிகாமுஷ்மிக ஸகல போகங்களையும் புஜிக்கப்பெறுவர்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார் ஐஹிகாமுஷ்மிக போகங்களையும் புஜிக்கப்பெறுவரென்கிறார். [வண்ணம் இத்யாதி] - நாநாவர்ணங்களான ரத்நங்களாலே செய்யப்பட்ட மாடங்களையுடைத்தாய் நிரதிசயபோக்யமான திருநாவாயிலே நின்றருளினவனை. [திண்ணம்மதிளித்யாதி] - திண்ணிதானமதிளையுடைத்தான திருநகரியையுடைய ஆழ்வாரருளிச்செய்த; திருநாவாய்க்கு ஈடாக திருநகரியிலேபோலே, ஆழ்வார்பரியவே அவ்வூர்க்கு ரக்ஷையென்னுதல். ஈச்வரனுக்குநாம் ஆழ்வாராகையாலே நாம்கிடந்தவிடத்திலேயிறே மதிளிடுவதென்னுதல். [பண்ணார்தமிழ்] - பண்மிகுந்த தமிழ். [மண்ணாண்டு] - இஹலோகத்திலே ஐச்வர்யஸ்ரீயால் ஸம்பந்நராய். [மணங்கமழ்வர் மல்லிகையே] -மல்லிகை மணங்கமழ்வர் "ஸர்வகந்த:" என்கிற விஷயத்தோடே ஸாம்யாபன்னராவர். மல்லிகை மணமென்று - ஸர்வகந்தத்துக்கும் உபலக்ஷணம்.

௰௧.—நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார், ஐஹிகாமுஷ்மிகஸகலபோகங்களையும் புஜிக்கப் பெறுவர் என்கிறார்.

[வண்ணம்மணிமாடநன்னாவாயுள்ளானை] நாநாவர்ணங்களான ரத்நங்களாலே செய்யப்பட்ட மாடங்களையுடைத்தாய், நிரதிசயபோக்யமான திருநாவாயிலே நின்றருளினவனை. [திண்ணம் இத்யாதி] திண்ணிதான மதிளையுடைத்தான திருநகரியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த. திருநாவாய்க்கு ரக்ஷை திருநகரியில் மதிள்போலே காணும். ஆழ்வார்பரிவே அப்பரிவுதானே அவ்வூருக்கு ரக்ஷையென்னுதல்; ஈச்வரனுக்கு தநம் ஆழ்வாராகையாலே தநம் கிடந்தவிடத்தேயிறே மதிளிடுவதென்னுதல். [பண்ணார்தமிழ்] பண்மிகுத்த தமிழ். [மண்ணாண்டு] இஹலோகத்திலே வைஷ்ணவஸ்ரீயால் ஸம்பந்நராய், [மணங்கமழ்வர் மல்லிகையே] மல்லிகைமணங் கமழ்வர். இது உபலக்ஷணமாய், "ஸர்வகந்த:" என்கிற விஷயத்தோடு ஸாம்யாபத்தியைப் பெறுவர். இவருடைய மனோரதம் அவர்கள்பேற்றுக்கு உடலாம்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

## ஒன்பதாந்திருவாய்மொழி—மல்லிகைப்ரவேசம்

ஒ.—ஒன்பதாம் திருவாய்மொழியில், அறுக்கும் வினையில் "எம்பெருமானைக் காணவேணும்" என்று மநோரதித்து மிகவும் பதறி அப்போதே காணப்பெறாதே வ்யஸநத்தாலே மிகவும் நோவுபட்ட ஆழ்வார், தம்முடைய தசையை அந்யாபதேசத்தாலே பேசுகிறார், திருவாய்ப்பாடியிற் பெண்பிள்ளைகள் க்ருஷ்ணனோடே கலந்து அவன் பசுமேய்க்கப் போகையாலே பகலெல்லாம் அவன்வரவு பார்த்திருக்க விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞரோடு வாசியின்றிக்கே எல்லாரையும் போகப்ராவண்யத்தாலே சபலராக்காநின்றுள்ள ஸந்த்யையவர, க்ருஷ்ணனும் வாராதொழிந்தானென்று நிச்சிதமாயிருக்க, ஒரு க்ஷணம் காணப்பெறாமையாலே அநேககாலம் விச்லேஷித்தாற் படும் வ்யஸநத்தைப்பட்டாளிறே: அதுக்குமேலே மல்லிகையின் பரிமளத்தையுடைய தென்றல் தொடக்கமான ஸந்த்யாகாலத்தில் பதார்த்தங்களும் அக்காலத்திலுண்டான குழலோசைகளும் அவற்றோடே ஸம்பந்தமான க்ருஷ்ணனுடைய குணசேஷ்டிதாதிகளும் துஸ்ஸஹமான நிலாவும் ஸமுத்ரகோஷம் தொடக்கமான பதார்த்தங்களெல்லாம் தனித்தனியும் திரளவும் நலிய மிகவும் நோவுபட்டு, கேட்டார்க்குத் தரிப்பரிதாம்படி ஆர்த்திமிகுதியாலே கூப்பிட்ட பாசுரத்தை ஒருத்தி சொல்லுகிறாள், ஸந்த்யையாவது - எம்பெருமான் தம்மை விஷயீகரிப்பதுக்குமுன்பு உண்டான அல்பகாலம்; அக்காலத்தில் பாதகபதார்த்தங்களாகிறன - தம்மை விஷயீகரிக்கைக்கு உதவுகின்ற எம்பெருமானுடைய சங்கசார்ங்காதி கோஷங்களும், பெரிய திருவடியுடைய திருச்சிறகொலியும் அவன்வரவுக்கு ஸூசகமான மந:ப்ரஸாதாதிகளான நிமித்தங்களும், இவை பாதகமாகைக்குக் காரணம் - இவை அவன்வரவுக்கு ஸூசகமாயிருக்கச்செய்தே அப்போதே அவனைக் காணாமை.

இ.—ஒன்பதாம் திருவாய்மொழியில், கீழ் அறுக்கும் வினையிலே, "அவனைக் காணவேணும்" என்று மநோரதித்து மிகவும் பதறி, அப்போதே காணப்பெறாத வ்யஸநத்தாலே மிகவும் நோவுபட்டவர், தம்முடைய தசையை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். திருவாய்ப்பாடியில் க்ருஷ்ணஸம்ச்லேஷம் பண்ணின பெண்கள் பகலெல்லாம் பசுமேய்க்கப் போகையாலே வரவுபார்த்திருக்க, விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞரோடு வாசியற எல்லாரையும் போகப்ரவணராக்கும் ஸந்த்யையவர, க்ருஷ்ணன்வரவு நிச்சய

மாயிருக்கச்செய்தே முற்கொழுந்திற் காணப்பெறாமையாலே அநேககாலம் பிரிந்தார்படும் வ்யஸனத்தைப் பட, அதுக்குமேலே ஸந்த்யாகாலத்திற் பதார்த்தங்களான மல்லிகையின் பரிமளத்தை யுடைத்தான தென்றல் குழலோசை ஸமுத்ரகோஷம் முதலான பதார்த்தங்களானவை தனித்தனியும் திரளவும் நலிய மிகவும் நோவு பட்டுக் கேட்டார்க்குத் தரிப்பரிதாம்படி கூப்பிட்ட கூப்பீட்டை ஒருத்தி சொல்லுகிறளான பாசுரத்தாலே தம் தசையை அருளிச்செய்கிறார். "திருவாய்ப்பாடியிற் பெண்களெல்லாம் ஒரு ராத்ரியில் க்ருஷ்ண விரஹத்தாற் பட்ட நோவை, இவரொருவருமே படுகிறார்" என்று ஆளவந்தார் அருளிச்செய்வர். "முன்பே ஆற்றாமையாலே தற்பு அற்றிருக்கிறவராகையாலே, அத்தனை பாடல் கொடுக்கைக்கு ஆச்ரயமில்லை; ஒருஸந்த்யையில் அவர்கள்பட்ட நோவைப்படுகிறார்" என்று அருளிச்செய்வர் எம்பெருமானார். ஸந்த்யையாகிறது - ஜ்ஞானம்பிறந்த பின்பு ப்ராப்யபூமியில் கிட்டப்பெறாதே நோவுபடுகிற நடுவிற் காலம். "தஸ்ய தாவதேவ சிரம், யாவந்நவிமோக்ஷ்யே" என்கைக்கடவதிறே அக்காலத்தில் பாதகபதார்த்தங்களாகிறன - பகவல்லாப ஸூசகங்களான பதார்த்தங்கள். [மல்லிகை கமழ்தென்றல்] - இவை பாதகமாகைக்குக் காரணம் பகவல்லாப ஸூசகமாயிருக்கச்செய்தே அப்போதே லபிக்கப்பெறாமை.

ஊடு.—"படை வீட்டிலிருந்தால் மாமனார்மாமியாருக்குக் கூசிப் பெருமாளுடன் நினைத்தபடி பரிமாறப்போகாது" என்று காட்டிலே ஏகாந்தமாக அநுபவிப்பதாக மநோரதித்துப்போந்த பிராட்டியை, *காந்தாரமத்யே விஜநே விஸ்ருஷ்டா பாலேவ கந்யா விலலாப ஸீதா* என்கிறபடியே கூப்பிடப்பண்ணினாப்போலே, அத்திருநகரியிலே புக்கு அநுபவிப்பதாக மநோரதித்த இவர்க்கு, பாதகவர்க்கத்துக்கு அஞ்சிக் கூப்பிடும்படியாய் விளைந்தது.

பெற்றி, ஒருநாள் நம்பிதிருவரங்கநாராயணதாஸர் என்பாரொருவர் என்பக்கலிலே திருவாய்மொழிகேட்டு அங்கே சென்றாராய், "இன்று பிள்ளைபாடு விநோதமென்?" என்று கேட்டவாறே, "அதுக்கும் வினை சாற்றினோம்" என்றாராய் "நாளை மல்லிகை கமழ் தென்றலும் மாலைப்பூசலும் என்னும்" என்று பணித்தாராம். "ப்ராப்யவஸ்துவைப் பெறும்படியை மநோரதித்தார் கீழில் திருவாய்மொழியிலே; மநோரதமாத்ரம் பெறக்காணாமையாலே, திருவாய்ப்பாடியிலுள்ளார் க்ருஷ்ணனைப்பிரிந்து ஒரு ராத்ரி பட்ட வ்யஸநத்தை இவரொருத்தரும் படுகிறார்" என்று ஆளவந்தார் அருளிச்செய்யும்படி. 'என்று திருமாலையாண்டான் பணிக்க அத்தை எம்பெருமானார் கேட்டருளி, "முன்பே ஆற்றாமையாலே தற்பு அற்றிருக்கிறவராகையாலே அத்தனை பாடல்கொடுக்கைக்கு வேண்டும் ஆச்ரயம் போராது; ஆனபின்பு, அவனைப் பிரிந்து ஒருஸந்த்யையிற்பட்ட நோவைப்படுகிறார்" என்றருளிச்செய்வர். இதுதன்னிற்செய்ததாகிறதென்? என்னில், ஜ்ஞானம் பிறந்த பின்பு விரோதியான ஸம்ஸாரத்தினின்றும் கால்வாங்கவும் மாட்டாதே, ப்ராப்ய பூமியில் மநோரதத்தாலும், பாதகவர்க்கத்துக்கு சரலாம்படி பதஞ்செய்ததாய்த்து. பொய்ந்நின்ற ஞானத்தில், "பகவத் விஷயத்தில் ஜ்ஞானம் பிறந்தபோதே, விரோதியான ஸம்ஸாரத்தில் ஸம்பந்தத்தை யறுத்துத் தந்தருளவேணும்" என்று அபேக்ஷிக்கச்செய்தேயும், "இவரைக்கொண்டு சில ப்ரபந்தங்கள் தலைக்கட்டவேணும்" என்றிருக்கையாலே, அப்போதே அப்படிச் செய்திலன்; அந்த விரோதியில் அருசி இவ்வளவும் வர நின்றபடி சொல்லுகிறதிறே. இங்குத்தான் செய்கிறவிது வேதாந்தங்களிற் போகிற கட்டளையில் என்னுவதென்னில்? - *தஸ்ய தாவதேவ சிரம்* என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறதிறே, *தஸ்ய தாவதேவசிரம், யாவந்நவிமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே* இதே. அநந்தரம். முடியானேயில் தம்முடைய கரணங்களுக்கு உண்டான வைதில்யத்தைச் சொன்னார்; இதில் - அந்த கரணங்களோடே கூட அவற்றுக்கும் ஆச்ரயமான ஆத்மவஸ்துதான் ஒன்றாக அழிகிறபடியைச் சொல்லுகிறது. ஜ்ஞாநேந்த்ரியங்களோடு கர்மேந்த்ரியங்களோடு வாசியற ஒன்றாக அழிகிறபடியைச் சொல்லுகிறது. ராமாவதாரத்தில் பதினாலாண்டுபோலே யாய்த்து, திருவாய்ப்பாடியிற் பெண்களுக்கு க்ருஷ்ணவிரஹத்தால் ஒரு ஸந்த்யை. குணவிஷயத்தைப் பிரிகையாலே அங்குப்பதினாலாண்டாய்க் கழியவுங்கூடுமிறே; இங்கு இவன் சீர்மையிலே கையடியுண்டிருக்கையாலே, ஒருபகல் அநேக கல்பமாய்த் தோற்றுமிறே. குணங்கள்தாம் காற்கட்டுகிறது குணமாயல்லவிறே; அவ்வாச்ரயத்திலே ஏடந்தலையாயிறே. இங்கு தாமி அதுவேயாய், அதுக்குமேலே நிம்பமாலுஞல் பாடாற்றப் போகாதிறே.

நாட்டார் போக்யதாபுத்தி பண்ணியிருக்கிற சப்தாதிவிஷயங்களடையத் தமக்கு பாதகமாக, ப்ராப்யவஸ்துவைப் பெறாதே, நடுவே ஆண்புலியான ஸ்ரீபீஷ்மர் அர்ஜுனன்கையில் அம்புகளாலே உடம்பு ஏவுண்டு கிடந்து அடித்தாற்போலே, கிடந்து அடிக்கிறார். திருவாய்ப்பாடியிலுள்ளார், க்ருஷ்ணன் "பசுமேய்க்க" என்று புறப்பட்டால், அவன் வருமளவும் அவர்கள் படும்பாடு சொல்லுகிறது. அதாவது—ப்ராஹ்மணர்க்கு ஸந்த்யாவந்தனம்போலேயிறே இடையர்க்குப் பசுமேய்க்கை ஜாத்யுசிததர்மம்; ஆகையாலே தவிரவொண்ணாதிருக்குமிறே. இப்படியாலே அவனைப் பசுக்களின்பின்னே புறப்படவிட்டு, அவன் வரும்ஸமயத்தைப் பார்த்திருக்குமத்தனையாய்த்து. ஆக அவன் பசுமேய்க்கப்போனால் பகல்பொழுதை வருந்தி ஒருபடியாற்றினால், அவன்வருங்காலமான ஸந்த்யையும்வந்து முகங்காட்டிப் பசுக்களின் முற்கொழுந்து வந்து தலைவைக்கச்செய்தே அவன்தன்னை வரக்காணவிட்டால் ஆற்றப்போகாதிறே. அதாவது அவன்தான் முற்கொழுந்திலேவாராதே பிற்கொழுந்திலேயாய்த்து, நடுவுபடும் அலமாப்புக் காண்கைக்காக. அவன் வரக்கடவ காலமான ஸந்த்யையும் வந்தது; கூடவரும் பசுக்களும் வந்தன; அவன்தான் வரக்காணவிட்டதாகிற, அக்காலத்தில், மல்லிகையின் பரிமளம், நல்ல குறிஞ்சியிசை தொடக்கமான அநுகூலபதார்த்தங்கள், தென்றல், நிலா, கடலோசை, அன்றில், குழலோசை முதலானவை பாதகமாகத் தொடங்கிற்று. குழலோசையும் அவ்வழியே அவனுடைய குணங்களை ஸ்மரிப்பித்து நோவுபடுகைக்கு உடலாயிருக்குமிறே. அப்படியிருக்கிற பாதக பதார்த்தங்களெல்லாம், முன்பு தனித்தனியே பருஷபாஷணங்களைப்பண்ணி நலிந்த ஏகாக்ஷி ஏககர்ணியுள்ளிட்ட ராக்ஷஸிகள் பின்பு அவ்வளவில் நில்லாதே எல்லாருமொக்க மேல்விழுந்து அதுக்குமேலே நிலைகுலைக்கப்பண்ண நினைத்தாப்போலே, பாதகவர்க்கமடைய, தனித்தனியும் திரளவும் மேல்விழுந்து நலிய; அவற்றாலே நலிவுபட்டவர்களெல்லாரும் கூப்பிட்ட கூப்பீட்டை இவரொருத்தருமே கூப்பிடுகிறார்.

மல்லிகைகமழ்தென்றலீருமாலோ! வண்குறிஞ்சியிசைதவழுமாலோ!*
செல்கதிர்மாலையும்மயக்குமாலோ! செக்கர்நன்மேகங்கள்சிதைக்குமாலோ!*
அல்லியந்தாமரைக்கண்ணனெம்மான் ஆயர்களேறரியேறெம்மாயோன்*
புல்லியமுலைகளுந்தோள்களுங்கொண்டு புகலிடமறிகிலம்தமியமாலோ. (1)

ஈ.—முதற்பாட்டில், ஸந்த்யாகாலத்தில் தென்றல் தொடக்கமான பதார்த்தங்கள் தனித்தனியே தமக்கு பாதகமாகிறபடியை அருளிச்செய்கிறார். [மல்லிகையென்று தொடங்கி] - வெறும்புறத்திலே பொறுக்கவொண்ணாத தென்றலானது நஞ்சூட்டினாப்போலே மல்லிகையின் பரிமளத்தோடே கூடவந்து ஈராநின்றது. அழகிய குறிஞ்சியோடேகூடின இசையானது துன்பாநின்றது; அஸ்தமியாநின்றுள்ள ஆதித்யனையுடைய ஸந்த்யையும் வந்து மோஹிப்பியாநின்றது; சிவந்து அழகிய மேகங்கள் ச்சேதித்துப் பொகடாநின்றன. 'ஆல்' என்றும், 'ஓ' என்றும் மிகவும் நோவுபட்டமைக்குத் தனித்தனி லிங்கங்கள். [அல்லியந்தாமரைக்கண்ணனென்று மேலுக்கு] - இடைப்பிள்ளைகளைத் தன்னுடைய ஸௌந்தர்யாதிகளாலே தோற்பித்தாப்போலே தன்திருக்கண்களில் அழகைக்காட்டி என்னை அடிமைகொண்டு என்னோடே அத்யாச்சர்யமாம்படி பரிமாறி அத்தாலே மேனாணித்திருந்தவனாலே புல்கப்பட்ட முலைகளையும் தோள்களையும் கொண்டு தென்றல் முதலான பதார்த்தங்கள் நலியாதபடி புகுசைக்கிடம் காண்கிறிலோம்; இத்தசையில் இதுக்கு ரக்ஷகரானவனும் வாராதே தனிமைப்படாநின்றோம்.

இ.—முதற்பாட்டில், ஸந்த்யாகாலத்தில் தென்றல்தொடக்கமான பதார்த்தங்கள் தனித்தனியே தனக்கு பாதகமாகிறபடியைச் சொல்லுகிறாள். [மல்லிகை கமழ்தென்றல்] - இவள் ஆர்கேட்கக் கூப்பிடுகிறாள்! வெறும்புறத்திலே நலியவற்றான தென்றல் மல்லிகையினுடைய பரிமளத்தை ஏறட்டுக்கொண்டு வாராநின்றது. வதபரிகரமான பத்ரத்திலே நஞ்சு ஊட்டினாப்போலேயாய்த்து தென்றல் பரிமளத்தைக்கொண்டு வருகிறபடி. க்ராணேந்த்ரியமுகத்தாலும் நலியாநின்றது. கண்ணுக்கு விஷயமாகிறக்கவொண்ணாதபடி இராப்படை பேறுவாரைப்போலே உடம்பிலேபடக் காண்கிறவித்தனை. இத்

புறத்திலேயொளிபவற்றின தென்றல், அதுக்குமேலே மல்லிகையின் பரிமளத்தை ஏறட்டுக்கொண்டு வாராநின்றது. வதபரிகரமான பத்ரத்திலே நஞ்சு ஊட்டினாப்போலே யாய்த்து, தென்றல் பரிமளத்தைக்கொண்டுவருகிறபடி. அவன் கூடவிருந்தபோது அநுகூலமான பதார்த்தங்களுடைய இப்போது பாதகமாயிருக்கிறபடியிறே. ***யாநிஸ்ம ரமணீயாநி தயா ஸஹ பவந்தி மே, தாந்யேவாரமணீயாநி ஜீவதோ மே தயா விநா* *ஏஷ புஷ்பவஹோ வாயு: ஸுகஸ்பர்சோ ஹிமாவஹ:, தாம் விசிந்தய* :காந்தாம் பாவகப்ரதிமோ மம* ஸதா ஸுக மநும் மந்யே யம் புரா ஸஹ ஸீதயா. மாருதஸ விநாஸீதாம் சோகஸஞ்ஜநநோ மம* *தம் லக்ஷ்மண ஹேவந்தே பம்பாபவநமாருதம்** என்று கூப்பிடுவானவனிறே; (இருவராயிருப்பார் காற்றைத் தேடிப் படுக்கைபடாநிற்க,) "இக்காலமிவ்வூர் புலிப்பியல்வெல்லாம் தவிர்ந்தெரிவீசும்" என்னுமாபோலே இவரொருவர்க்குமேயாய்த்து பாதகமாகிறது. [மல்லிகைகமழ் தென்றல்] க்ராணேந்த்ரியத்துக்கும் பாதகமாய், ஸ்பர்சேந்த்ரியத்தையும் அழியாநின்றது. இராப்படை ஏறுவாரைப் போலே உடம்பிலே படக்காணும் தீண்டப்போக்கி, கண்ணுக்குத் தோற்றுதாய்த்து; கண்டு தப்பவொண்ணாது. இத்தென்றலுக்குக் கண்டவிடமெங்கும் வாயாயிராநின்றது. [ஈருமாலோ] பண்டே பிரிவாலே சென்றற்றிருக்கிற உடம்பை, பலகை பலகையாக ஈராநின்றது. [வண்குறிஞ்சியிசை தவழுமாலோ] அழகிய குறிஞ்சியிசையானது அலையாநின்றது. காற்று ஈர்த்துப்போகட்ட புண்ணின் மேலே துளைத்துப் போகடாநின்றது. தென்றல் புறம்பே ஈவிற்றவித்ததனை; இசை செவிவழியே உள்ளே புகுந்து நலியாநின்றது. [வண்குறிஞ்சி] இசைக்கு எவ்வளவு செவிப்பாடுண்டு, அவ்வளவும் பாதகமாயித்தனையிறே. அவன் கூடவிருந்தபோது எவ்வளவு போக்யமாயிருக்கும், வ்யதிரேகத்தில் அவ்வளவும் நலியுமிறே. குறிஞ்சியும் தென்றலும் கூடி க்ருதஸங்கேதிகளாய் வந்து, ஒன்று அதிகரித்த கார்யத்தின் சேஷத்தை ஒன்று செய்யாநின்றது. "கற்கொலையாகக் கொல்லவொண்ணாது, உயிர்க்கொலையாகக் கொல்லவேணும்; அதில் நீ இவ்வளவு செய், நான் இவ்வளவு செய்கிறேன்" என்று க்ருதஸங்கேதராய் வந்தாரைப்போலேயாய்த்திருக்கிறது. [செல்கதிர் இத்யாதி] செல்லப்பட்டிருக்குமுள்ள கதிரையுடைத்தான மாலையானது, மயக்கப் பண்ணுகின்றது. அஸ்தமியாநின்றுள்ள ஆதித்யனையுடைய ஸந்த்யையானது, மோஹிப்பியாநின்றது. வாயிலே சிறையைத் துறுத்துக் கொல்லுவாரைப்போலே, ஆற்றாமைக்குப் போக்குவிட்டுக் கூப்பிட்டு தரிக்கவு மொட்டுகிறதில்லை. [செக்கர் நன்மேகங்கள் சிதைக்குமாலோ] ஸந்த்யாராகத்தையும் ச்யாமமான நிறத்தையுமுடைத்தான மேகங்கள் அவனுடைய அவயவசோபைக்கும் வடிவுக்கும் ஸ்மாரகமாய், "இவை என்னம்பு செய்தது" என்று அவற்றைக் கர்வித்துக்கொண்டு, "ஆச்ரயங்கிடக்கவோ நலிவது?" என்று வயிரத்தைச் செற்றுகின்றது.- [அல்லியந்தாமரைக்கண்ணனித்யாதி] நாம் இவற்றை யின்னாதாகிறதென்? அவன்றான் முன்னே நம்மை முடிக்கக் கார்யம் பார்த்து வைத்திலனோ? "காலந்தாழப் பிரியவே இவள் முடியும்" என்றன்றோ அவன் பிரிந்தது? இவையாறுல் போக்குவிட்டபடித்தனையிறே; புகலறுத்தான் அவனிறே. [அல்லியித்யாதி] (அல்லியையுடைத்தாய் அழகிய தாமரைபோலேயிருந்த திருக்கண்களையுடையவன்) முதலுறவு பண்ணுவது கண்ணிறே; திருவடி பர்த்தம் பிறந்திறே ஸம்ச்லேஷிப்பது. [எம்மான்] அக்கண்ணழகாலே என்னை அநந்யார்ஹையாக்கினவன். [ஆயர்களேறு] அவ்வழகாலே இடையரைத் தோற்பித்தாப்போலே. ***புஞ்ஸாம்*** வயிரவுருக் காய்த்து அவனுடைய ஸௌந்தர்யம். தன்னோடொத்தாரை அப்படி நலியாநின்றால் அபலைகளை நலியச் சொல்ல வேண்டாவிறே. [அரியேறு] கண்ணாலே குளிரநோக்கி இவ்வளவு அநந்யபரையாக்கி, இவளோபாடே ஸம்ச்லேஷித்து, அத்தாலே தான் பெறும்பேறு பெற்றானாய் மேனாணிப்புத் தோற்ற நின்றபடி, ஸிம்ஹச்ரேஷ்டம். [எம்மாயோன்] அம்மேன்மையையுடையவன், தாழ்ந்தார் சிலர் உயர்ந்தவர்களோடே கலக்குமாபோலே, கையைக் காலைப் பிடித்துத் தாழநின்று பரிமாறினபடி. கலக்கிறபோது மின்மினி பறக்கும்படி காணும் கலந்தது. [புல்லிய முலைகளும் தோளுங்கொண்டு] அவனும் வாராதிருக்கின்றான்; நானும் வருந்தி ஒருபடி ஜீவித்துக் கிடக்கிறேன்; அவனுக்குப் பிறந்த ப்ரஜைகளைக்கொண்டு புகலிடம் அறிகிலேன். [நான் செய்தபடிசெய்ய, இம்முலைகளின் விக்கம் தீர அநுபவிக்கப் பெறுவது எப்போதோ? க்ஷாமகாலத்தில் ப்ரஜைகள் "சோறு சோறு" என்னுமாபோலே படுத்தாநின்றன. அவன் தானும் கலக்கிற

போது ஸர்வாங்க ஸம்ச்லேஷக்ஷமனன்று போலே காணும். அவையிற்பித்த அவையும், இவைப் பாரினவிடமும், புல்லியவித்யாதி] கலக்கிறபோது அவனுடைய அமைப்பையும் தம்முடைய கரணங்களுக்கு உண்டான ப்ராவண்யாதிசயத்தையும் அவன் பெரும்பேறு பெற்றுப் பின்று பரிமாறினபடியையும் தமக்கொரு புகலற்றிருக்கிறபடியையும் சொல்லுகிறது. [புகலிட மறிகிலம்] அயநிரேசத்தில் தென்றல் முதலான பதார்த்தங்களைத் தப்பிச் சென்று புகுகைக்கு இடம் காண்கிறிலோம். [தமியமாலோ!] இத்தசையில் ரக்ஷகனானவனும் வாராமையாலே தனிமைப்பட்டாநின்றோம். இப்படி தன் விபூதியாக பாதகமானவும், பகவத்தன் விட்ட அஸ்த்ரத்துக்கு அர்ஜுனனைத் தள்ளித் தான் மார்வையேற்றுப்போலே, "இவை வரும் என்று" அறிந்தால் தான் கூடவிருக்க வேண்டாவோ? அவன் கூடவிருந்தானாகில் இவை தாம் இறி தொழில் செய்யத் தொடங்குமோ. *ராமஸ் ஸௌமித்ரிஸஹித:* என்று அவர் தாம் நோவுபட்டுக் கூப்பிடுகிறபோது ஒரு தம்பியாராகிலும் கூடவுண்டு நோவுபடுகைக்கு; அங்ஙனும் ஒரு துணையில்லை எனக்கு. *ஸ:* பிராட்டியைப் பிரிந்து நடுவே கபந்தன் கையிலே அகப்பட்டு நோவுபட்டு நிற்கிற நிலையைச் சொல்லுகிறது. *தாம்* இப்படியும் ஆற்றாமையுமில்லாதாரையும் அழிக்கவற்றாய்த்து. *புஷ்கரிணீம்* பரப்புமாறப்பூத்த பொய்கைகளும் சோலைகளுமாய், ஜலக்ரீடைக்கு யோக்யமான தேசமாய்த்து. பிரிந்து தனியிருப்பார்க்குக் கண்கொண்டு காணப்போகாது. *கந்யா* வினை நிகழுகையிருக்கச்செய்தே, ம்ருத்யுவினுடைய ஆஸ்யத்திற் புகுவாரைபோலே வந்து கிட்டிக்கொடு நின்றார். ம்ருத்யுவாகிற புடைதான் ஏதென்றால் *பத்மோத்பலஜஷாகுலாம்* முகத்துக்கும் கண்ணுக்கும் போலியானவற்றையுடைத்தாயிருக்கது. "உயர் தாமரைசெங்கழுநீர் மாதர்கள் வாண்முகமும் கண்ணுமேந்தும்" என்னக்கடவதிறே. *ராம:* பிராகூப்பிடு தவிர்த்தும் போந்தவராய்த்து *ஸௌமித்ரிஸஹித:* *ரக்ஷ தர்மேண* என்று ஏதேனுமனவிலும் கூட நின்று நோக்கிக் கொண்டு போந்தவரும் மூன்றாக; ஆதியுமவன் தெய்வம் மூன்றாக இழியுமாபோலே. *விலலாபாகுலேந்த்ரிய:* அநேக லக்ஷணங்களோடேயாய்த்துக் கூப்பிட்டது. ப்ராப்யவஸ்துவைப் பெறும் வனுமென்னும் மனோரதமாய், இப்ப இவருடைய மனோரதத்துக்கிடாக வந்து கிட்டும்படி அவனும் வாராதே நிற்க, அவனுடைய வரவுக்கீடான தூர்ய கோஷம், ஸ்ரீபாஞ்சஜன்யத்வனி, ஜயகோஷம், திருவடி இருச்சிறகோசை, மற்றுமுண்டான நன்னிமித்தங்கள், மந:ப்ரஸாதாதிகள் என்றுப்போலே சொல்லுகிறவை ஒன்றும் காணாமையாலே, அநுகூலபதார்த்தங்கள் பாதகமாகிறது. கரணங்களும் சரீரமுமாய் க்லேசப்படுகையாகிறவித்து, விரோதியான ஸம்ஸாரத்தினின்றும் கால் வாங்கவும் மாட்டாதே, இங்குப் பொருந்தவதும் செய்யாதே, கண்டதடைப் பகையாயிருக்கிறபடி. ஆக, இங்குப் பொருந்தாதே அங்குப் புகப் பெறாதே நடுவே நின்று க்லேசப்படுகிற அவஸ்தையைச் சொல்லுகிறது என்று இங்ஙனே ஒருதாத்பர்யஞ் சொல்லக் கடவதாயிருக்கும்.

**புகலிடமறிகிலம்தமியமாலோ! புலம்புறுமணிதென்றலாம்பலாலோ!***

**பகலடுமாலைவண்சாந்தமாலோ! பஞ்சமம்முல்லைதண்வாடையாலோ!***

**அகலிடம்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்து எங்குமளிக்கின்றஆயன்மாயோன்***

**இகலிடத்தசுரர்கள்கூற்றம்வாரான் இனியிருந்தென்னுயிர்காக்குமாறென்? (2)**

ஒ.—இரண்டாம்பாட்டில், பாதகபதார்த்தங்கள் தனித்தனியே நலிந்து அவை பலவாறு மிகமிகப் பல கூடிவந்து நலியாநின்றன என்கிறாள். [புலம்பென்று தொடங்கி] - சேக்கள் கழுத்தில் சப்திக்கிற மணி, தென்றல், குழல் இவையெல்லாம் அவற்றுக்கு ஸ்யாதகமாய்க்கொண்டு நலியாநின்றன. ஆச்வாஸகரமான பகலைப்போக்கின ஸந்த்யை, அழகிய சந்தனம், பஞ்சமம், முல்லையென்கிறபாழ், குளிர்ந்த வாடை இவையெல்லாம் நலியாநின்றன. இப்பதார்த்தங்களுடைய தர்சநத்தாற்பிறந்த பீடையாலே அவற்றுலேவந்த நலிவு சொல்லமாட்டாதே பதார்த்தத்தைச் சொல்லுகிறாள். [அகலிடம் படைத்தென்று

இனியிருந்தென்னுயிர்காக்குமாறென் இணைமுலைநமுகநுண்ணிடைநுடங்க*
துனியிருங்கலவிசெய்தாகந்தோய்ந்து துறந்தெம்மையிட்டகல்
கண்ணன்கள்வன்*
தனியிளஞ்சிங்கமெம்மாயன்வாரான் தாமரைக்கண்ணுஞ்செவ்வாயும்* நீலப்
பனியிருங்குழல்களும்நான்குதோளும் பாவியேன்மனத்தேநின்றீரு
மாலே! (3)

ஒ.—மூன்றாம்பாட்டில், அவனுடைய திவ்யாவயவங்கள் ஹ்ருதயத்திலே ஸ்ம்ருதமாய்நின்று நலியாநின்றன என்கிறாள். [இனியிருந்தென்னுயிர் காக்குமாறென்] - அவனுடைய ஸௌந்தர்யமே உள்ளே நின்று நலியாநின்றால், இனி ப்ராணனைக் காக்கவிரகுண்டோ? என்கிறாள். [இணைமுலையென்று தொடங்கி] - ஸம்ச்லேஷ ஸுகாதிசயத்தாலே முலைகளிரண்டும் குழையவும் நுண்ணிடையிடை நுடங்கும்படியாகவும் து:க்கபலகமான ஸம்ச்லேஷத்தைப் பண்ணி என்னை நீராக்கி என்னுடம்பிலே தோய்ந்து ; பொறுக்கவொண்ணாதபடி நிரதிசய ஸுகமாம்படி கலந்ததென்றுமாம். [துறந்தெம்மையிட்டகல் கண்ணன்] - அசேதநங்களைப் போகடுமாபோலே எங்களைப்போகட்டு அகலுகையே ஸ்வபாவமான க்ருஷ்ணன், [கள்வன்தனியென்று தொடங்கி] - ஸம்ச்லேஷ தசையில் ஸர்வஸ்வாபஹாரிகளான ஆலோகாலாபாதிகளை யுடையவனாய், என்னோட்டைக் கலவியாலே இளைப்பு பதித்து மேனாணிப்பதுஞ் செய்து, விச்லேஷ தசையில் என்பக்கலிலே அதிசாபலத்தையுடையவன் வருகிறிலன் ; தாமரைப்பூப் போலேயிருக்கிற கண்ணும் சிவந்த திருப்பவளமும், கறுத்துக் குளிர்ந்திருந்துள்ள பெரிய திருக்குழல்களும் நாலு திருத்தோள்களும் இவ்வழகுகளை அநுபவித்து இழந்தால் மறக்கொடாதே நினைத்து நோவுபடுகைக்கீடான பாபத்தைப்பண்ணின என்னுடைய மநஸ்ஸிலே நிரந்தரமாகநின்று நலியாநின்றன.

ஈ.—மூன்றாம்பாட்டில், கண்ணாற்கண்டவை பாதகமாகப் புக்கவாறே, அவற்றுக்கஞ்சிக் கண்ணைச் செம்பனித்தாள்; அகவாயிலே அவன் அழகுகள் ஸ்மாரகமாய் நின்று நலியாநின்றன என்கிறாள். [இனியிருந்தென்னுயிர்காக்குமாறென்] - எனக்கு தாரகமான அழகு பாதகமானால் எனக்கு ப்ராணனை ரக்ஷிக்கவிரகுண்டோ? [இணைமுலை] - அவன் சேர்த்தியழகு கொண்டாடும் முலை. [நமுக] - குழைய. கடினஸ்தநம் வர்ஷத்தாலே நெகிழுமாபோலே ஸம்ச்லேஷ தசையில் ஸ்பர்சத்தாலே குழைக்கும்படி. [நுண்ணிடை நுடங்க] - வெறும்புறத்திலே அருகுநிற்கில் விளைவதும்போலே, கேட்கவரிதான இடை நுடங்கும்படியாகவும்: கலக்கும்போது எதிர்த்தலையைப் பேண அறியான்: தன் அபிநிவேசம் தீர்வானத்தனை. [துனியிருங்கலவிசெய்து] - து:க்கபலமான கலவி செய்து. [இருங்கலவி] - கலக்கிற போது பரிமாற்றவகைகள், ஆச்ரயத்தளவன்றிக்கே யிருக்கை. ஸம்ச்லேஷம் விச்லேஷாந்தமாயல்லதிராமையாலே து:க்கத்தை விளைக்குமென்னுதல்; அத்தசையில் பொறுக்கப் போகாதபடியிருக்கையாலே து:க்கரூபமென்னுதல். [ஆகம் தோய்ந்து] - என்னை நீராக்கி என்னுடம்பிலே தோய்ந்து: "க்ரீடமே சீதமிவ ஹ்ரதம்" என்னுமாபோலே, தன்விடாய் கெட்டானாயிருந்தான். என்னுடம்போடே அணைத்து தனக்குப் பெரும்பேறாக நினைத்திராநின்றான். [துறந்தெம்மையிட்டு] இப்படி விருப்பத்துக்கு விஷயபூதையான என்னைக் கைவிட்டு அசேதநத்தைப் போகட்டாப்போலே போகட்டோம் என்றும் நினைவு மில்லாதபடி போகட்டு. இப்படி அவகாஹித்ததெல்லாம் கைவிடுகைக்கு உடலாய்த்தென்கை. [அகல் கண்ணன்] - அகலுகையே ஸ்வபாவமான க்ருஷ்ணன். அவனுக்குக் கலவி காதாசித்கம்; அகலுகையே நிரூபகம்; கலவியாலல்லது பிரிவுண்டாகாமையாலே கலந்தானித்தனை. [கள்வன்தனியிளஞ்சிங்கம்] - கலக்கிற போதை நோக்கும், பேச்சும், பண்ணின வ்யாபாரங்களும் ஸர்வஸ்வாபஹாரிகளாயிருக்கை; அப்போது தன் ஆர்த்தியாலே கலக்கிறானென்று தோற்றும்படியாய் பலத்தில் பிரிந்துநோவுபடுத்தச் செய்தானாயிருக்கை யென்றுமாம். [தனி] - என்னோட்டைக்கலவியாலே அத்விதீயனென்று தோற்றும்படி யிருக்கிறவன். [இளஞ்சிங்கம்] - என்னோட்டைக்கலவியாலே இளைப்பதித்து மேனாணித்திருக்கிறவன். [எம்மாயன் வாரான்] - பிரிவை நினைத்துக் கலக்கிப் போகமாட்டாதே என்பக்கல் அதிசாபலத்தாலே அத்தசையில் தடுமாறினவன் இப்போது வருகிறிலன். அத்தசையில் சாபலத்தோபாதி போரும் இப்போதை விரக்தியும். [தாமரை இத்யாதி] - அவன் கண்ணுக்கு விஷயமாகாதொழிந்தால் இவை

நெஞ்சுக்கு விஷயமானதொழிந்தால் ஆகாதோ? தான் போகாநின்றால் இவற்றை வைத்துப் போக வேணுமோ? கலந்தபோது தன்பேறென்று தோற்றும்படியான ஹர்ஷமடங்கக் கண்ணிலே தோற்றும்படியான திருக்கண்களையுடையவன் என்னுதல்; பிரிவைநினைத்து வாய்விடமாட்டாதே ஆற்றாமையடங்கலும் நோக்கிலே தோற்ற நின்ற நிலையென்னுதல். [செவ்வாயும்] - பிரிவை ப்ரஸங்கித்து முடியச்சொல்லமாட்டாத போதைச் சிவந்த அதரமும். [நீலப்பணிதிருங் குழல்களும்] - கலவியாலே குலைந்து பிரிவை நினைத்துப் பேணமாட்டாதபோதைக் கறுத்துக்குளிர்ந்த பெரியதிருக்குழல்களும். [நான்கு தோளும்] - இவன்தடுமாற்றத்தைக் கண்டு குழலைப்பேணி வருந்தினவும் தரிப்பிக்கைக்காக நான் எதிரே அணைந்த நாலு தோளும். "உபஸம்ஹர" என்றது கம்ஸாதிகளுக்கிறே; பெண்களுக்கு நாலாய்த் தோற்றுமிறே. [பாவியேன்] - இவ்வழகுகளை யநுபவிக்க இழந்தால், அறிவழிந்திருக்கப்பெறாதே நினைக்கைக்கு அடியான பாபத்தைப் பண்ணின என்னுடைய. [மனத்தேநின்று ஈருமாலோ] - மனஸ்ஸிலே நிரந்தரமாகநின்று நலியாநின்றது. அணைக்க எட்டுதல், நெஞ்சுக்கு எட்டாதொழிதல் செய்யப் பெற்றிலேன். அறிவழிந்து மறந்துபிழைக்கவும் பெற்றிலேன்.

௩௫.—மூன்றாம்பாட்டு. கண்ணுக்கிலக்கான பதார்த்தங்களடங்க பாதகமாகப்புக்க வாறே அவற்றுக்கு அஞ்சாக் கண்ணைச் செம்பளித்தாள்; அகவாயிலே அவன் அழகு ஸ்ம்ருதிவிஷயமாகாநின்றதென்கிறாள்.

[இனியிருந்தென்னுயிர்காக்குமாறென்] என்னதென்றபிமானித்த உடம்பு பகையாய்த்து; என்னதென்று அபிமானித்த அழகு பகையாய்த்து; இனியிருந்து என்னுடைய ப்ராணரக்ஷணம்பண்ண என்றொரு பொருளுண்டோ? [இணைமலர்நாள்] அவன் சேர்த்தியழகுசொல்லி வாய்வெருவும் பூக்களானவை, கடினஸ்தலத்திலே வர்ஷித்தால் பதமாமா போலே, ஸம்ச்லேஷஸமயத்தில் அவனுடைய ஸ்பர்சத்தால் செல்லிக்குழைந்தபடி. கழுகுதலை-குழைதலை. [நுண்ணிடைநுடங்க] நெருப்புறத்திலும் அருக்குலுக்கிழ் வினால்போலே நோக்கவரிதான இடை நுடங்கும்படியாகவும். கலக்கும்போது எதிர்த்தலையைப் பேண அறிந்திலன்; தன் அபிநிவேசம் தீர்ந்தானத்தனை. [அனியிருங்கலவிசெய்து] அதிப்ரபலமான கலவியைச் செய்து. [இருங்கலவி] கலக்கிறபோது பரிமாறின வகைகள், ஆச்ரயத்தளவன்றிக்கே மிருக்கை. ஸம்ச்லேஷம் விச்லேஷாந்தமாயல்ல நிராமயமாலே துக்கத்தை விளைக்குமென்னுதல்! அத்தனையிலே தலைதடுமாறுதல் கலக்கையாலே பொறுக்கவொண்ணாதபடி துக்கருபமென்னுதல். [ஆகந்தேய்ந்து] இக்கலவியாலே சிராக்கி, "ஏஷ ப்ரம்மஹப்ரவிஷ்டோ ஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம்" என்கிறபடியே இவளோடே கலந்தானுய்த்து; க்ரீஷ்மகாலத்தில் மடுவிலே முழுகித் திடபபாரைப்போலே. [துறந்து] இப்படி ஸ்வகார்யத்தில்லாம் பெயுகடுகைக்கு உடலாய்த்து. [எம்மைவிட்டு] இப்படி என்பக்கலிலே விருப்பத்தைப் பண்ணிவைத்து, சில அசித்பதார்த்தம் கிடைப் பொகடுமாபோலே பொகட்டேபோமென்கிற நினைவும் கூடப் பொகட்டானாய்த்து. [அகல்கண்ணன்] இவனுக்குக் கலவி காதாசித்கம்; அகலுகை நிரூபகம். கலவியாலல்லது பிரிவு கூடாமை கலந்தானத்தனை. [கள்வன்] ஸம்ச்லேஷத்தில் குளிர நோக்கும் நோக்கும், பேசின பேச்சும், பரிமாறின பரிமாற்றமும் எல்லாம் ஸர்வஸ்வாபஹார ஸாதனமாயிருக்கிறது. கலக்கிறபோது செய்ததையடையத் தன்னுடைமையாலே செய்தானென்று தோற்றும்படியாய்ப் பிரிவில் இவை நம்மை பாதிக்கைக்காகச் செய்தானென்கிறது. [தனியிப்பாதி] "யஸ்ய ஸா ஜநகாத்மஜா - அப்ரமேயம் ஹி தத்தேஜ:" என்னுமாபோலே, இவளோட்டைக் கலவியாலே அத்விதீயனென்று தோற்றும்படியிருந்தான். [இளம்]-கலக்கக்கலக்கக்கிழ் நோக்குப் ப்ராயம் புகாநின்றான். [சிங்கம்] - இவளோட்டைக்கலவியாலே பெறுபேறு பெற்றுப் பேணனித் திருந்தபடி. [எம்மாயன்வாரான்] பிரிவை நினைத்துக்கலங்கிப் போகமாட்டாதே என்பக்கல் அதிசாபலத்தாலே அத்தனையில் தடுமாறினவன் இப்போது வருகிறிலன். அத்தனையில் சாபலத்தோபாதியும் போரும் இப்போதை விரக்தியும். அப்போது போகையிலுள்ள அருமை போரும் இப்போது வருகையிலுள்ள அருமையும். [தாமரைக்கண்ணும்] அவன், கண்ணுக்கு விஷயமாகா தொழிந்தால் இவை நெஞ்சுக்கு விஷயமாகாதொழிந்தாலாகாதோ? தான் போகிறான், இவற்றை வைத்துப் போகவேணுமோ? கலந்தபோது தன்பேறென்று தோற்

அவனுடையருள்பெறும்போதரிதால் அவ்வருளல்லன அருளுமல்ல*
அவனருள்பெறுமளவாவிநில்லாது அடுபகல்மாலையும்நெஞ்சுங்காணேன்*
சிவனொடுபிரமன்வண் திருமடந்தைசேர்திருவாகம்எம்மாவியீரும்*
எவமினிப்புகுமிடம்?எவம்செய்கேனோ? ஆருக்கென்சொல்லுகேன்?
அன்னைமீர்காள். (6)

ஒ.—ஆறும்பாட்டில், அநந்யபரையான பெரியபிராட்டியாரோடு அந்யபரரான ருத்ராதிகளோடு வாசியின்றிக்கே எல்லார்க்கும் ஸுலபனானவனுடைய ஸௌசீல்யம் என்னுடைய ஆத்மாவை ஈராநின்றதென்கிறாள். [அவனென்று தொடங்கி] - அவனுடைய ப்ரஸாதம் பெறுகைக்கு அரிதாயிராநின்றது; அவனுடைய ப்ரஸாதமல்லாத பந்துக்களுடைய ஸாந்த்வநாதிகள் தாரகமாகமாட்டா; அவனுடைய ப்ரஸாதம் பெறுந்தனையும்செல்ல ப்ராணன் தரிக்கிறதில்லை. [அடுபகல்மாலையும் நெஞ்சுங்காணேன்] - "மேல்வருகிற வ்யஸந பரம்பரைகளைப் பார்க்க ஸுகரம்" என்னலாவதும் செய்து பகலுக்கு நாசகமான ஸந்த்யையும் எல்லாக்காலத்திலும் தரிக்கைக்குத் துணையான நெஞ்சையும் காண்கிறிலேன்; பகலையடுகிற ஸந்த்யையும் வந்தது நெஞ்சுகாண்கிறிலேன் என்றுமாம். [எவமென்று தொடங்கி மேலுக்கு] - அன்னைமீர்காள்! புகுமிடம் எது? எத்தைச்செய்வேன்? ஆருக்கு எத்தைச் சொல்லுவேன்?

இ.—ஆறும்பாட்டில், நித்யாநபாயிநியான பிராட்டியோடு அந்யபரரான ருத்ராதிகளோடு வாசியற உடம்பு கொடுக்குமவனுடைய ஸௌசீல்யம் என்னாத்மாவை ஈராநின்றது என்கிறாள். [அவனுடைய இத்யாதி] - அவனுடைய ப்ரஸாதம்பெறுகை அரிதாகாநின்றது; கொள்வார் தேட்டமான அருள் நமக்குத் தேட்டமாவதே! ஸர்வஸாதாரணமான ஜலம் அதொழியச்செல்லாத ஸத்வங்களுக்கு அரிதானாப்போலே. அவனருள் கிடைக்குமளவும் பந்துக்களுடைய இன்சொல்லாலே தரித்தாலோவென்ன?— [அவ்வருளல்லன அருளுமல்ல] - தாபார்த்தர் அக்நியைக்கொண்டு விடாய்தீருமாபோலே தாய்மாருடைய ஹிதவசநத்தாலே தரிக்கவோ? விடாய்தீராதவளவல்ல; விடாயை விஞ்சப்பதும்செய்யும். அவனருள் தப்பாதபின்பு கிட்டுந்தனையும் ஆறியிருந்தாலோவென்னில்?—[அவனருள்பெறுமளவாவி நில்லாது] - அவன்ப்ரஸாதம் கிட்டுமளவும் ப்ராணன் தரிக்கிறதில்லை. க்ரம ப்ராப்தியை ஸஹிப்பதொரு ப்ராணனைப் பெற்றேனாகில் ஆறியிருக்கலாய்த்திறே. [அடுபகல்மாலையும் நெஞ்சும் காணேன்] - ஆச்வாஸஹேதுவான பகலையும் முடித்துக்கொண்டு மாலையுமாகாநின்றது, ஸர்வகாலத்துக்கும் துணையான நெஞ்சையும் காண்கிறிலேன் என்னுதல்; மாலையும் காண்கிறிலேன் என்னுதல். மேல்வருகிற வ்யஸந பரம்பரைகளைப் பற்ற மாலைதான் ஸுகரம் என்னலாம்படியிருந்ததென்கை. [சிவனொடு இத்யாதி] - பிராட்டியோடு அந்யபரரான ருத்ராதிகளோடு வாசியற உடம்புகொடுக்கும் சீலம் ஸ்மாரகமாய் நித்யமான ஆத்மாவை முடியாநின்றது. அந்யபரர்க்கு எளிதான வுடம்புவிடீர் எனக்கு அரிதாய்த்து! [எவம் இனிப்புகுமிடம்] - ஸர்வஸாதாரணமான உடம்பையிழந்தால் இனி எங்கேபுக்கு தரிப்பது? "அவன் உடம்பு கிட்டிற்றில்லை" என்று, ஹிதம் சொல்லுகிற உங்கள் உடம்பைப்பற்றி தரிக்கவோ? ஆறுதல் லோகயாத்ரையைப்பற்றி தரித்தாலோவென்ன? [எவம் செய்கேனோ] - அவ்வளவிலே தரிக்கலாம் விஷயமன்றே. தோழிமாரோடே வ்ருத்தகீர்த்தநம்பண்ணி தரித்தாலோவென்ன? [ஆருக்கு] - வடுகர்க்குத் தமிழ் வார்த்தைபோலே சொல்லும் வார்த்தைக்கு அதிகாரிகள் யார்? வ்ருத்தகீர்த்தநம்பண்ணும் தோழிமார் எனக்குமுன்னே அழிந்தார்கள். [என்சொல்லுகேன்] - கேட்பாரைப்பெற்றால் சொல்லுகைக்குப் பாசுரந்தான் உண்டோ? [அன்னைமீர்காள்] - தோழிமார் அழிந்தார்கள்; நாட்டார் அந்யபரர்; சேஷித்திகோள் நீங்களாயிருந்திகோள். உங்களுக்குச் சொல்லவோ?

ஈடு.—ஆறும்பாட்டு, நித்யாநபாயிநியான பிராட்டியோடு அந்யபரரான ப்ரஹ்மருத்ராதிகளோடு வாசியற உடம்புகொடுக்குமவனுடைய ஸௌசீல்யம் என் ஆத்மாவை ஈராநின்றதென்கிறாள்.

[அவனுடைய இத்யாதி] கொள்வார் தேட்டமாயிலே அவனுடைய அருள் இருப்பது; தண்ணீர்ப்பந்தலில்சேர்ந்து குளிர்ந்ததண்ணீர் விடாயர்க்கு அரிதானாப்போலேயிறே எனக்

அறநல்ல அதிற்புகை யாழோசை பஞ்சமமாகிறபண் பசுஞ்சாந்து இவற்றைத் துணையாகக்கொண்டு பொருகையிலே சமைந்தவாடை ச்ரமஹரமான மல்லிகைப்பூவினுடைய புதியநாற்றத்தை முகந்து கொண்டு எறியாநின்றது.

இ.—ஏழாம்பாட்டில், கீழ்ச்சொன்ன பாதகபதார்த்தங்கள் திரள்வந்து கண்பாராதே நலியாநின்ற தென்கிறாள். [ஆருக்கு இத்யாதி] - நெஞ்சம் உங்களதாய் பாதகபதார்த்தங்களை போக்யவஸ்துக்களென்று அவற்றைத் தேடித்திரிகிற உங்களுக்குச் சொல்லவோ! 'நெஞ்சு தந்தாமதன்றோ? அநுகூலபதார்த்தங்கள் தேட்டமன்றோ? என்ன, உங்களுக்குச் சொல்லுவோம்! — [ஆருயிர் அளவன்றிக்கூர்தண்வாடை] - மிக்கிருந்துள்ள குளிர்ந்தவாடை இவ்வாத்மாவோடு போமளவன்று. பாதகவர்க்கம் மிகைத்தாலும் நெஞ்சுஉண்டாகில் தரிக்கலாமிறே; அது மீளாதவிடத்தே புக்கது. [காரொக்கும் இத்யாதி] - மேகம் போலே ச்ரமஹரமான திறத்தாலே அஸ்மத்ஸ்வாமி நமக்கு பவ்யனான க்ருஷ்ணனுடைய கள்வமுண்டு - ஸம்ச்லேஷதசையிற் சொன்ன தாழ்வுகளும் செயல்களும்: அவற்றுலே அபஹ்ருதமாய் அத்விதீயமான என்னெஞ்சானது அவன்பக்கலது. [சீருற்ற இத்யாதி] - ப்ரதானமான வாடையை ஒழியவே பாதகபதார்த்தங்கள் அநேகமும் மேல்விழுந்து நலிகிறபடியைச் சொல்லுகிறது. சீருற்றகையாவது - அழகு மிக்கிருக்கை: அதாகிறது - பரிமளிதமாய் க்ராணேந்த்ரியத்தை நலிபுமவன்றிக்கே கண்ணையும் நலியும் படியான தர்சநீயமான அகிற்புகை, யாழ் நரம்பு பண்பட்டிருந்துள்ள யாழ், பஞ்சமமாகிற பண். [தண் பசுஞ்சாந்து] - ஆறிக்குளிர்ந்து செவ்வி அழியாதசாந்து. [அணைந்து] - இவற்றைக் கூட்டிக்கொண்டு. [போருற்றவாடை] - "கூடின பரிகரங்கள் பங்களம்" என்னும்படி தனிவீரஞ்செய்கிற வாடை. பொருகையிலே சமைந்தவாடையானது. [தண்மல்லிகை இத்யாதி] - ச்ரமஹரமான மல்லிகைப்பூவின் செவ்வியான பரிமளத்தை முகந்துகொண்டு. முகப்பார் தாழ்வரம்படி குறைவற்றிருக்கிறபடி. [எறியுமாலோ] - இவளுடைய விரஹாக்னி தன்மேல் தட்டாதபடி கடக்கநின்று வீசாநின்றது. ஆருயிர்அளவன்றிக்கூர் தண்வாடை என்றவயம்.

ஙு.—ஏழாம்பாட்டு. கீழ்ச்சொன்ன பாதகபதார்த்தங்கள் திரளவந்து கண் பாராதே நலியாநின்ற தென்கிறாள்.

[ஆருக்கென்சொல்லுகேனித்யாதி] நெஞ்சும் உங்களதாய், பாதகபதார்த்தங்களை "போக்ய வஸ்துக்கள்" என்று அவற்றைத்தேடித்திரிகிற உங்களுக்குச் சொல்லவோ? இத்தைச் சொன்னவாறே என்! நெஞ்சும் "தந்தாமதாய்," தந்தாமுக்கென்ன அநுகூலபதார்த்தங்களும் தேடக்கடவதன்றோ?" என்பார்களிறே தங்கள்வாஸனையாலே; உங்களுக்குச்சொல்லுவோம்:- [ஆருயிரளவன்றிக்கூர்தண்வாடை] மிகைத்துக்குளிர்ந்து வருகிறவாடையானது நம்முடைய ஆத்மாவினளவிற்போமதல்ல. பாதகபதார்த்தம்கூறைத்தாலும் தரித்திருக்கலாமிறே, நமக் கென்ன ஒருநெஞ்சுபெற்றோமாகில்; "என்னெஞ்சினாரும் அங்கேயொழிந்தார்" என்று அதுவும் மீளாதவிடத்தே புக்கதே. [கார் இத்யாதி] மேகம்போலே ச்ரமஹரமான வடிவை யுடையனாய், அவ்வடிவைக்காட்டி நம்மை யகப்படுத்துமாத்ரி நமக்கு பவ்யனான க்ருஷ்ணனுடைய, கள்வமுண்டு-ஸம்ச்லேஷதசையில் தாழ்ந்தபேச்சுக்களும் செயல்களும்; "பேச்சும்செய்கையும்" என்னக் கடவதிறே; அவற்றாலே யபஹ்ருதமாய் அத்விதீயமான என்னெஞ்சானது அவன் பக்கலது. [சீர் இத்யாதி] "இங்குள்ளது கேவலசரீரமேயிறே" என்றறிகிறனவில்லை அவ்வா வாடைதானே ப்ரதானமாய் வருகையன்றிக்கே, மற்றும் அப்ரதானமானவற்றையும் கூட்டிக் கொண்டு, *ஸஹவாஸம்பந்து வர்காம்* என்கிறபடியே அநேகமும்மிகவர மேல்விழாநின்றது. [சீருற்ற இத்யாதி] சீருற்றகையாவது - அழகுமிக்கிருக்கை. அதாவதுஎன்னென்னில்,-பரிமளமே யாய்க் கண்ணுக்குப்புகைந்து பருஷமாமாகாரமின்றிக்கே யிருக்கை. பண்பட்டயாழ், பஞ்சம மாகிற பண். [தண்பசுபஞ்சாந்து] ஆறிக்குளிர்ந்து வாஸிதமான த்ரவ்யங்களில் செவ்விமாறாத சாந்து. [அணைந்து] இவற்றைக் கூட்டிக்கொண்டு. [போருற்றவாடை] "கூடினபரிகரங்கள் பங்களங்கள்" என்னும்படி தனிவீரம் செய்கிற வாடையானது. பொருகையிலே சமைந்த வாடையானது. [தண்மல்லிகைப்பூ] ச்ரமஹரமான மல்லிகைப்பூவின் செவ்விப்பரிமளத்தை முகந்துகொண்டு. முகப்பார் தாழ்வேயாய்த்து; மணத்திற்குறையில்லை. [எறியுமாலோ] இவள்

[அதுமணக்குறித்யாதி] வாக்குக்கு அவிஷயமாம்படியாய்த்துக் கலந்தது. சோகவிஷயமாக இருபத்து நாலாயிரம் க்ரந்தம் சொன்னவன், ஸம்ச்லேஷவிஷயமாக வொன்றும் சொல்லித்திலனிறே. அவிஷயமாகவே வாக்குக்கு. "சோக: ச்லோகத்வமாகத:" என்று சோகவிஷயமாக விறே சொல்லிற்று. அப்படி கலந்தகன்ற நமக்கு பவ்யனானவனுடைய கள்வம் - கலக்கிற போதைத் தாழ்ந்த பேச்சுக்களும் பரிமாற்றங்களும். [கன்னவிற்கொடிது] கலக்கிறபோது நமக்கு ஸ்வம் என்னும்படியிருக்க க்ருஷ்ணனுடைய அக்காலத்தில் பரிமாற்றம், அவன் தன்னிற் காட்டில் பாதகமாகாநின்றது. இச்செயல்களில் இன்னம் அவன்தானே நல்லன். [இனியத னிலும்பரி] பின்னையும் அதுக்குமேலே. [மதுமணமல்லிகைமந்தக்கோவைஇத்யாதி] மதுவையும் மணத்தையுமுடைத்தான மல்லிகையாலே செறியத்தொடுத்தமாலை, அழகிய பசுஞ் சாந்து, இவையும் கலியாநின்றன; அதுக்குமேலே பஞ்சமமாகிற பண்ணையும் கூட்டிக்கொண்டு குழலோசை பாதகமாகாநின்றதென்னுதல்; இவற்றிலே பஞ்சமமென்கிற-பண்ணையும் கூட்டிக் கொண்டென்னுதல். [அதுமணந்து] அப்படியே கலக்கைக்காகவென்னுதல், அப்படிகலந்த ஆய்ச்சியர்க்கென்னுதல். [இன்னருளாய்ச்சியர்க்கே] தன்ப்ராவாதத்துக்குஇலக்கான இடைப் பெண்களுக்கே. [ஆய்ச்சியர்க்கேயூதும்] அதாவது காவல்காத்துக் கிடக்கிறவர்களைத்தொடை குத்திபுறத்தே ஒரு பருவத்திற் பெண்களை மயிரைப்பற்றியிழுக்குமாய்த்து இக்குழலோசை. இன்னார்க்குத் தொடுத்தஅம்பு என்னுமாபோலே. அல்லாத பாதகபதார்த்தங்களுக்கு ஜீவித் திருந்தேனேயாகிலும், இக்குழலோசைக்கு நான் ஜீவிக்கமாட்டேன். அவையெல்லாம் ஒருபடியும் இது ஒருபடியுமாய்த்து நலிகிறபடி.

ஊதுமத்தீங்குழற்கேயுய்யேன்நான் அதுமொழிந்திடையிடைத்தன்
செய்கோலத்*
தூதுசெய்கண்கள்கொண்டொன்றுபேசித் தூமொழியிசைகள்கொண்
டொன்றுநோக்கி*
பேதுறுமுகஞ்செய்துநொந்துநொந்து பேதைநெஞ்சறவறப்பாடும்பாட்டை*
யாதுமொன்றறிகிலமம்மவம்ம மாலையும்வந்ததுமாயன்வாரான். (9)

ஒ.—ஒன்பதாம்பாட்டில், இடைப்பெண்கள்நடுவு இவன் திருக்குழலூதிபருகுகிறபோது நடுவே நடுவே தன்னுற்றுமையாலே சில உக்திசேஷ்டிதங்களைப் பண்ணநின்றுகொண்டு பாடுகிறபாட்டை நினைத்து ஒன்றும் தரிக்கமாட்டுகிறிலேன் என்கிறாள். [அதுமொழிந்தென்று தொடங்கி] - திருக்குழல் ஊதநிற்க, நடுவேநடுவே இடைப்பெண்களுடைய நோக்குக்களுக்கும் வடிவழகுக்கும் தோற்றுப் பேசநில்லாமல்வாதபடியான வார்த்தைகளைச்சொல்லியும் குழலூதுகையிலே மிகவும் நூன்று வாயாலே வார்த்தைசொல்ல அவஸரமில்லாதபோது தன்கருத்தை அவர்களுக்கு அறிவிக்கவல்ல திருக்கண்களாலே வார்த்தைசொல்லியும் தன்திருமிடற்றில் அழகியபேச்சோடுகூடின இசைகளாலே அழகியகண்களாலே நோக்கி ஈடுபடுத்துமாபோலே ஈடுபடுத்தியும் தன்மிடற்றில் ஓசை தன்செவிக்கினித்தாகையாலே தான் மூந்துற மிகவும் ஈடுபட்டுப் பின்னை பெண்களுடைய நெஞ்சில்ஊறலை அறமறக்கும்படி பாடுகிறபாட்டை. அதுவொழிந்தென்று- அது தவிர என்னவுமாம். [ஆதுமொன்று தொடங்கி] - ஒன்றும் தெரிகிறதில்லை. அதுக்கு மேலே மிகவும் பயாவஹமாம்படி ராத்ரியும் வந்தது. ஆச்சர்யபூதனானவனும் வருகிறிலன். [மாயன்] - தன்னைப் பிரிந்தார், லஜ்ஜிக்கும்படி தானே இழவாளனாய் வந்து தோற்றுமவன்.

இ.—ஒன்பதாம்பாட்டில், இடைப்பெண்கள்நடுவே இவன் குழலூதுகிற போது நடுவே தன்னுற்றுமையாலே சில உக்திசேஷ்டிதங்களைப் பண்ணநின்றுகொண்டு பாடும்பாட்டை நினைத்து ஒன்றும் தரிக்கமாட்டுகிறிலேன் என்கிறாள். [ஊதும் இத்யாதி] - "கீழ்வானம் வெள்ளென்று" என்னும்படி குழலோசை பாதகமாகிறபடி. [இடையிடை - அதுமொழிந்து] - குழல் ஊதும்போது "பிரிந்தேன் ஆற்றேன்" என்றும் போலே நீசபாஷணங்களை வைத்தாய்த்துக் குழலூதுவது. அவற்றைத் தன்வாயால் சொல்லவொண்ணாமையாலே 'அது' என்கிறாள். "அதுவொழிந்து" - தவிர்ந்தென்றுமாம். [தன்செய்கோலத் தூதுசெய் கண்கள்] - தனக்குத்தானே ஆபரணமாய்த் தன்கருத்தை அவர்களுக்கு அறிவிக்கவல்ல திருக்கண்கள்.

நெஞ்சில் மறந்தாலே "கிட்டக்கடவோமல்லோம்" என்றிருக்கிற பெண்களுடைய காலைச் சென்றுபிடியா நிற்கும் கண்கள் என்கை. "ஸந்தேசைஸ் ஸாமமதுரை:ப்ரேமகர்பைரகர்விதை:, ராமேணாச்வாஸிதா கோப்யோ ஹரிணா ஹ்ருதசேதஸ:" நம்பி மூத்தபிரான் செய்யுமத்தைச் செய்யாநிற்கும். [ஒன்றுபேசி] - கண்ணானது வாக்வ்ருத்தியை அதிகரித்தது. பேச்சால் பிறக்கும் ஸ்பஷ்டதை நோக்காலே பிறக்கை. [தூமொழியிசைகள் கொண்டொன்று நோக்கி] - அழகிய பேச்சோடுகூடின இசைகளாலே கண்ணாலே நோக்கி ஈடுபடுத்துமாபோலே ஈடுபடுத்தி. இசையோடே கூடச்செய்தேயும் இயலும் தெரிந்திருக்கை. வாக்வ்யவஹாரமும் நேத்ரவ்ருத்தியும் மாறுடினபடி. [பேதுறுமுகஞ்செய்து நொந்து நொந்து] – கேட்கிறவர்களிலும் தன்செவி பணித்தாகையாலே, "நாம் ஈடுபடுகிறபடி கண்டால் அபலைகளானவர்கள் என்படுகிறார்கள் ?" என்று மிகவும் நொந்து; "வன்னெஞ்சரான நம்மை வருத்தினபடி கண்டால் அபலைகள் என்படுகிறார்களோ" என்று மிகவும் நோவுபட்டான். [பேதைநெஞ்சறவறப்பாடும் பாட்டை]- பெண்களுடைய நெஞ்சம் ஊடலை யறமறந்து பொருந்தும்படி பாடுகிற பாட்டை. ஒரு மிடற்றோசையிலே அழிகிற நெஞ்சுகொண்டிறே மறம்கொண்டாடுவது. [ஆதுமொன்று அறிகிலம்] - அது பாதகமாகிறபடி எனக்கு ஒன்றும் தெரிகிறதில்லை. [அம்மவம்ம மாலையும் வந்தது] - மிகவும் பயாவஹமாம்படி ராத்ரியும் வந்தது. இனியிருந்து க்லேசிக்கவேண்டாதபடி இது முடித்தே விடும்போலே யிருந்தது. [மாயன் வாரான்] - தன்னைப்பிரிந்தார் லஜ்ஜிக்கும்படி தானே பிறவாளனாய்வந்து காலபிடிக்கும் ஆச்சர்யபூதன் வருகிறிலன்.

௯௫.—ஒன்பதாம்பாட்டு. பண்டே இடைப்பெண்கள்நடுவே இவன் குழலூதுகிறபோது நடு நடுவே தன்னுற்றாமையாலே சிலஉக்திசேஷ்டிதங்களைப்பண்ணுமின்றுகொண்டு பாடும்பாட்டை நினைத்து ஒன்றும் தரிக்கமாட்டுகிறிலேனென்கிறாள்.

[ஊதுமத்தீங்குழற்கேயுய்யேன்நான்] "குழலவை மிகை" என்னும்படி குழலோசையே பாதகமானபடி. [இடையிடை அதுமொழிந்து] "பிரிந்தேன் - ஆற்றேன்" என்றாப்போலே சொல்லுகிற ஸம்பாஷணங்களை யிடையிடையே சொல்லியாய்த்துப் பாடுவது. தாழ்ந்த சொல்லும் பேச்சும் தன் வாயால் சொல்லமாட்டாமையாலே, 'அது' என்கிறாள். எம்பார், இவ்விடத்தே வந்தவாறே, "மொருள்ளதனையுஞ்சொரேயோ? தெளிகருங்கூடப் பாசுரமிட்டுச் சொல்லமாட்டாதே 'அது' என்றால், மத்யஸ்தரான நாம் இதுக்கு என்னபாசுரமிட்டுச் சொல்வது !" என்றருளிச்செய்தாராம். அன்றிக்கே, "அதுமொழிந்து" அது தவிர்த்தென்னவுமாம்; நடுவே நடுவே பாடுகிற பாட்டைவிட்டென்னவுமாம். [தன்செய்திகபாதி] தனக்குத் தானேயபாரணையாய், தன் கருத்தை அவர்களுக்கு அறிவிக்கவல்ல திருக்கண்கள். நெஞ்சில் மறந்தாலே "கிட்டக்கடவோமல்லோம்" என்றிருக்கிற பெண்களுடைய காலைச்சென்று பிடியாநிற்கும் கண்களென்கை. நம்பிமூத்தபிரான் செய்வதற்றையடையச் செய்யாநிற்குமாய்த்து. குழலூதுகையிலேமூண்டு மீண்டு வார்த்தைசொல்லவொண்ணாமையாலே வாக்வ்யாபாரத்தை பெறட்டுக்கொள்ளாநிற்குமாய்த்து. பேச்சாற்பிறக்கும் ஸ்பஷ்டதை நோக்காலே பிறக்கை [தூமொழியிசைகள் கொண்டொன்று நோக்கி] அழகிய பேச்சோடே கூடின இசைகளாலே, கண்ணாலே நோக்கி யீடுபடுத்துமாபோலே யீடுபடுத்தி, இசையோடே கூடச்செய்தேயும் இயலும் தெரிந்திருக்கை. வாகவ்யவஹாரமும் நேத்ரவ்ருத்தியும் மாறுடினபடி. [பேதுறுமுகஞ்செய்து நொந்து நொந்து] கேட்கிறவர்களிலும் தன்செவிபணித்தாகையாலே, "நாம் ஈடுபடுகிறபடி கண்டால் அபலைகளானவர்கள் என்படுகிறார்களோ ? என்று மிகவும் நொந்து. "வன்னெஞ்சரான நம்மை வருத்தினபடி கண்டால், அபலைகளென்படுகிறார்களோ ?" என்று மிகவும் நோவுபட்டான். [பேதை நெஞ்சற வறப்பாடும் பாட்டை] பெண்களுடைய நெஞ்சு ஊடலை மறந்துவந்து பொருந்தும்படி பாடுகிற பாட்டை. [ஆதுமொன்றறிகிலம்] அது பாதகமாகிறபடி எனக்கொன்றும் தெரிகிறதில்லை. [அம்மவம்ம] பூசல்பூசல். [மாலையும் வந்தது] மிகவும் பாதகமாம்படி ஸந்த்யையும் வந்தது. இனியிருந்து க்லேசிக்கவேண்டாதபடி இது முடித்தே விடும்போலேயிருந்தது. [மாயன்வாரான்] தன்னைப்பிரிந்தார் லஜ்ஜிக்கும்படி தானேபிறவாளனாய்வந்து காலபிடிக்கும் ஆச்சர்யபூதன் வருகிறிலன்.

த்ருஷ்டிபண்ணுகின்றன். [கொடியனவித்யாதி] தூரப்போன பசுக்களை ஓரிடத்திலே திரட்டுகைக்காக அங்குமிங்கும் சிதறின இடையரடையத் திரண்டு எல்லாருமொக்கக் குழல்களை வாங்கி ஸந்த்யாஸமயத்திலே தங்கள் வரவை ஊரறியும்படியாகவும் பெண்கள் நெஞ்சில் மறமறும்படியாகவும் எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதபடி ஒன்றாக விரவியெழும்படி ஊதுமதொரு குழலோசையுண்டு, அது பாதகமாகாநின்றதாய்த்து. [வாலொளி இத்யாதி] - மிக்க ஒளியையுடைத்தாய்க் கண்டவிடமெங்கும் தானேயாம்படி படர்ந்த முல்லை, அப்படியிருக்கிற கருமுகை, மல்லிகை, இவற்றிலே புக்கு மதுபானம் பண்ணி அலைகிற - ஆலிக்கிற வண்டுகளானவை ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணுகின்றன; திர்யக்குக்களானவை, ஸம்ச்லேஷத்தால் வந்த ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டுக் களிப்பனவும், ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணுவனவுமாகாநின்றன. [வேலையும்] கடலும், ஆகாசத்திலே நின்று கூப்பிடாநின்றது. ஸம்போகமத்யத்திலே தைர்யபங்கம் பிறந்து கூப்பிடும்படிக்கு ஸ்மாரகமாய் நலியாநின்றது. [இங்கவனைவிட்டு- என்சொல்லியுய்வன்] பாதகபதார்த்தங்களின் நடுவே, அவனையொழிய எத்தைச்சொல்லி உஜ்ஜீவிப்பது? இவை மென்மேலென நலியாநின்றன; அவனோ வந்திலன், நான் உஜ்ஜீவிக்கவென்று ஒன்றுண்டோ? முடிந்தேனென்றபடி.

அவனைவிட்டகன்றுயிராற்றகில்லா அணியிழையாய்ச்சியர்மாலைப்பூசல்*
அவனைவிட்டகல்வதற்கேயிரங்கி யணிகுருகூர்ச்சடகோபன்மாறன்*
அவனியுண்டுமிழ்ந்தவன்மேலுரைத்த ஆயிரத்துள்ளிவைபத்துங்கொண்டு*
அவனியுளலற்றிநின்றுய்ம்மின்தொண்டீர்! அச்சொன்னமாலைநண்ணித்
தொழுதே. , (11)

ஒ.—நிகமத்தில், அவன்பக்கல் சாபலமுடையார் இத்திருவாய்மொழியைச் சொல்லி அவனைப் பெறுங்கோள் என்கிறார். [அவனையென்று தொடங்கி] - எம்பெருமானை விச்லேஷித்து ஆத்மதாரண க்ஷமைகளன்றிக்கே யிருக்கிற விலக்ஷணைகளான இடைப்பெண்கள் அவன்வரவுதாழ்த்த ஸந்த்யா காலத்தில் கூப்பிட்ட பாசுரத்தை ஆழ்வார் அவனுடைய பிரிவாலே நோவுபட்டு எல்லார்க்கும் எல்லாப் படிகளாலும் ரக்ஷகனானவன் விஷயமாகச் சொன்ன ஆயிரந் திருவாய்மொழியிலும் இத்திருவாய் மொழியைக் கொண்டு. [அவனியென்று தொடங்கி] - அப்படி ரக்ஷகனாகச்சொன்ன எம்பெருமானை அவன்பக்கல் சாபலமுடையார் பூமியிலே நிரந்தரமாக ஆச்ரயித்து உஜ்ஜீவியுங்கோள் என்கிறார்.

இ.—நிகமத்தில், அவன்பக்கல் சாபலமுடையார் இத்திருவாய்மொழியைச் சொல்லி அவனைப் பெறுங்கோள் என்கிறார். [அவனைவிட்டகன்று உயிராற்றகில்லா] - அவனை விச்லேஷித்து ப்ராண தாரணக்ஷமைகளன்றிக்கே யிருக்குமவர்கள். [அணியிழையாய்ச்சியர்] - ஒப்பிக்கப்பட்ட ஆபரணங்களையுடைய இடைப்பெண்கள். "கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து" என்கிறபடியே, அவன்வரவுக்குடலாகத் தங்களை அலங்கரித்து வரும்காலத்தில் வரக் காணாமையாலே கூப்பிட்ட கூப்பீட்டை. [அவனையித்யாதி] - அவனுடைய பிரிவாலே நோவுபட்டு அருளிச்செய்த ஆழ்வார். அவர்களெல்லாரும் பட்ட க்லேசத்தை இவரொருவருமே பட்டாரென்கை. [அவனியுண்டு உமிழ்ந்தவன் மேலுரைத்த] - ஸர்வத்தையும் ப்ரளயாபத்திலே ரக்ஷித்து அழிந்தவற்றை வடக்க உண்டாக்கின ஸர்வேச்வரன் திருவடிகளிலேயாய்த்துச் சொல்லிற்று. விரஹப்ரளயத்தில் நின்றும் தம்மை யெடுக்க வேணுமென்று சொன்ன வார்த்தையாய்த்து. [அச்சொன்னமாலை நண்ணித் தொழுது தொண்டீர்- அவனியுளலற்றிநின்றுய்ம்மின்] - அப்படி வ்யாமோஹத்தையுடையவனைக்கிட்டித் தொழுது சாபலமுடையார் பூமியிலேநின்று அலைவுகெடக் கூப்பிட்டு உஜ்ஜீவியுங்கோள். இத்திருவாய்மொழியை அப்யஸித்தார்க்கு, என்னைப்போலே "என்சொல்லியுய்வன்?" என்று கூப்பிடவேண்டா; பேற்றிலே அந்வயமென்கை.

ஈடு.—நிகமத்தில், அவன்பக்கல் சாபலமுடையார், இத்திருவாய்மொழியைச் சொல்லி அவனைப் பெறுங்கோளென்கிறார்.

விரும்புகையாலும் சரீராவஸாநத்தளவுமிருக்கப் பொறுக்கிறான்; அங்ஙனேயாகில் ப்ரபந்நனான இவன் நிர்த்துக்கனுமிராதே, வ்யாத்யாதிபீடைகளாலே நலிவுபடுவானென்? என்னில், ஸம்ஸாரத்திலே பழகிவந்த இவனுக்கு இங்கே நிர்துக்கமாக ஸுகங்களைக்காட்டில் இவற்றைப்பற்றித் தன்னை ஆசைப் படாதேயொழியுமென்றுபார்த்து துக்கோத்தரமாக வைக்கிறான். அதுவும் இவர்கள்பக்கலுண்டான அநுக்ரஹாதிசயமான பின்பு இவ்விடத்தில் ஒரு ஸங்கடமில்லை.

இ.—பத்தாந்திருவாய்மொழியில், அறுக்கும்வினையிலே "அவனைப் பெற வேணும்" என்றும் "பெறும்நாள் என்று?" என்றும் மநோரதித்தார். மநோரதித்த அநந்தரம் லாபத்தாறுமையாலே மல்லிகை கமழ் தென்றலிலே மிகவும் நோவுபட்ட இவர்க்கு, இவர் துக்கமெல்லாம் நீங்கும்படி திருக்கண்ணபுரத் திலே நின்றருளினபடியைக் காட்டியருளி "உம்மைப்பெறுகைக்கு மநோரதமும் இழவும் நம்மதன்றோ" என்று ஸமாதாநம்பண்ண, "என் அபேக்ஷிதம் ஸித்திக்கும்நாள் என்று?" என்று இவர்கேட்க, "சரீராவஸா நத்திலே பெறுகக் கடவது" என்றருளிச்செய்ய, "நமக்குஇனி பேற்றுக்குத் தட்டில்லை" என்று ஹ்ருஷ்டராய், ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸர்வேச்வரனை ஐச்வர்யத்தோடுங்கொண்டு திருக்கண்ணபுரத்திலே எழுந்தருளி நின்றான், அவனை ஆச்ரயிக்கப் பாருங்கோள்!" என்று பரோபதேச ப்ரவ்ருத்தராகிறார். "ஆச்ரயிக்கு மிடத்திலும் அவன்திருவடிகளிலே பக்தியைப் பண்ணுங்கோள்! அதுக்குப் பரிகரமில்லாதார் ப்ரபத்தி பண்ணுவது. அதுக்குத் தக்க வ்யவஸாயமில்லாதார் உக்திமாத்ரத்தையாகிலும் பண்ணுவது. அவ்வளவு உண்டாகவே அவன் விடான். ஆனபின்பு அவனையே ஆச்ரயிக்கப் பாருங்கோள்!" என்கிறார். இவர் தாம் இழந்துநோவுபடுதல், சிறிது ஆச்வாஸம் பெற்றாராகில் பரஹிதத்திலே ப்ரவ்ருத்தராதல் செய்யு மித்தனை. வேதாந்தங்களில் ப்ராரப்தகர்மாவஸாநகம் பகவத்ப்ராப்திக்குக் காலமாகச் சொல்லாநிற்க இச்சரீராவஸாநத்தைக் காலமாக அருளிச்செய்தது இது அவற்றோடு விரோதியாதோ? என்னில், உபாஸகரான பக்தியோகநிஷ்டர்க்கு ஸாதநஸமாப்தியிலே பெறவேண்டுகையாலே கர்மாவஸாநமாகக் கடவது. ப்ரபந்நனுக்குக் கேவல பகவத்ப்ரஸாதத்தாலே பேறாய்க் காலவிளம்பம் வேண்டாமையாலே சரீராவஸாநமாகக் கடவது. இத்திருவாய்மொழிதன்னிலும் பக்தியைவிதித்து அதில் அசக்தர்க்கு ப்ரபத்தியை விதித்ததிறே. "தஸ்ய தாவதேவ சிரம் யாவந் ந விமோக்ஷ்யே" என்கிற வாக்யம் ந்யாஸாபேக்ஷமாகையாலே, இந்ந்யாயம் அதிலும் ஸஞ்சரிக்கும். ப்ரபந்நனுக்கு அவன்பக்கலிலே பரந்யாஸம் பண்ணினவனுக்கு யாதோ தன்பக்கல் விளம்பஹேதுவில்லை; அவன் ஸர்வசக்தியாகையாலே அவன்பக்கல் விளம்பஹேதுவில்லை. ஆனபின்பு ப்ரபத்திபண்ணினவனந்தரம் பெறுதொழிகிறது என்? என்னில், - ப்ரபத்யநந்தரத்திலே சரீரத்தைவிடில் மரணபயத்தாலே, இஜ்ஞாநத்துக்கு ஆள் கிடையாதென்றும், ஜ்ஞாநப்ரவர்த்தகார்த்தமாக இவனிருக்க வேண்டுகையாலும், சரமதேஹத்தை ஈச்வரன்தான் விரும்புகை யாலும் சரீராவஸாநத்தளவுமிருக்கப் பொறுக்கிறான். "பகவந்தம் ப்ரபந்நவான்" என்று பெரிய பெருமாள்திருவடிகளிலே ப்ரபந்நையான மைதிலி ருசியினுடைய தீவ்ர ஸம்வேகத்தாலே அநந்தரம் முக்தையானாளிறே. ஆனால், இவன் நிர்துக்கனுமிராதே கர்மத்தாலே யிருக்கிறான் என்று தோற்றும்படி ஸாம்ஸாரிகமான வ்யாத்யாதிகளோடே யிருப்பானென்? என்னில்,—இதில் உபேக்ஷைபிறந்து தன்னையே ஆசைப்படுகைக்காக. ஸுகோத்தரனாகவைக்கில் இதுதன்னிலேசபலனாய்த் தன்னை விஸ்மரிக்குமென்று. ஆக இப்படிவைக்கிறதும் அநுக்ரஹ கார்யமாகையாலே ஒரு தட்டில்லை; ப்ரபதநகாலத்தில் இவ்வதி காரிக்குத்தான் சரீரஸமநந்தரம் பரமபதப்ரவேசம் பண்ணுதல் கர்ப்பவாஸம் பண்ணுதல் செய்யாதே பகவல்லாபமுண்டாக வேணுமென்னும் இவ்வளவே இவனுக்கு ஸம்பவிப்பது; ஆகையாலே, தத்க்ரது ந்யாயத்தாலே அவ்வளவிலே ப்பலமாகக்கடவது என்னவுமாம்.

ஈடு.—அறுக்கும் வினையிலே அவனைப் பெறவேணுமென்று மநோரதமாய்ச் சென்றது; மநோரதஸமயத்திலே அபேக்ஷித்தபடி கிடையாமையாலே மிகவும் க்லேசப்பட்டபடி சொல்லிற்று மல்லிகைகமழ்தென்றலில்; அதுதான் ராத்ரி வ்யஸநமாய் நோவுபட்டபடியிறே, இப்படி மநோரதித்துப் பெறாமையாலே நோவுபடுகிற இவருடைய அவஸாதத்தை யநுஸந்தித்து, ஸர்வேச்வரன் "நீரோ இப்படி மநோரதிப்பீரும் அது கிடையாமல் க்லேசப்படு வீரும்? உம்மைப் பெறவேணுமென்று மநோரதிப்போமும் நாமன்றோ! உம்மைக் கிடையாமை

யால் இழவுபட்டோமும் நாமன்றோ? உமக்கொரு குறையுண்டோ? கலங்காப்பெருநகரம் கலவிருக்கையாயிருக்க அவ்விடத்தைவிட்டுத் திருக்கண்ணபுரத்திலே நாம் வந்து ஸந்நிதி பண்ணிற்றும் உமக்காகவன்றோ? சரீராவஸாநத்திலே உம்முடைய அபேக்ஷிதம் செய்யக் கடவோம்" என்று ஸமாதாநம் பண்ண, ஸமாஹிதராய், இவரும் ஹ்ருஷ்டராகிறார். அவன் "ஒன்றுசெய்யக்கடவோம்" என்றால் அப்போதே பெற்றதாக நினைத்து ஹ்ருஷ்டராகலாம்படி யிறே அவன்படியிருப்பது.

இப்படி ஹ்ருஷ்டராய், "அவன்படியிதுவானபின்பு, ஸர்வேச்வரன் ஸர்வஸமாச்ரயணீயனாய்க்கொண்டு திருக்கண்ணபுரத்திலே ஸந்நிதி பண்ணினான்; எல்லாருமொக்க அவனையாச்ரயியுங்கோள்; ஆச்ரயிக்குமிடத்தில், அவன்திருவடிகளிலே பக்தியைப் பண்ணுங்கோள்; பக்திக்குப் பரிகரமில்லாதார் ப்ரபத்தியைப் பண்ணுங்கோள்; அதுக்கேடான அத்யவஸாயமில்லாதார் உக்திமாத்ரத்தையாகிலும் பண்ணுங்கோள்; அவ்வளவேகொண்டு அவன்தான் கைவிடான்; ஆனபின்பு, எல்லாருமொக்க அவனையாச்ரயியுங்கோள்" என்று பரோபதேசத்திலே ப்ரவ்ருத்தராகிறார். மோஹித்துக்கிடந்தாராகில் கிடக்குமித்தனைபோக்கி, உணர்ந்தாராகில் பிறர்க்கு ஹிதஞ்சொல்லியல்லது நிற்கமாட்டார்.

"சரீராவஸாநத்திலே உம்முடைய அபேக்ஷிதம் செய்யக்கடவோம்" என்று ஈச்வரன் சொன்னவிடமும், அது கேட்டு இவர் ஹ்ருஷ்டரானவிடமும் கூடாது; "ப்ராரப்தகர்மாவஸாநத்திலே மோக்ஷமாகக் கடவது" என்றன்றோ வேதாந்தங்களில் வாஸனை" என்னில்,— இத்திருவாய்மொழிதன்னிலே, "பக்தியைப்பண்ணுங்கோள்" என்றும், "அது மாட்டாதார் ப்ரபத்தியைப்பண்ணுங்கோள்" என்றும் சொல்லிற்றிறே. அதில் உபாஸகனுடைய அதிகாரியைப்பற்றச் சொல்லுகிறது; இங்கு ப்ரபந்நனுக்குச் சொல்லுகிறது: *தஸ்ய தாவதேவ சிரம் யாவந் ந விமோக்ஷ்யே* என்கிற வாக்யமன்றோ இவ்வர்த்தத்தைச் சொல்லுகிறது. "இதுதான் சரீராவஸாநத்தைப் பற்றச்சொல்லுகிறதோ, கர்மாவஸாநத்தைப்பற்றச் சொல்லுகிறதோ? என்று விசாரித்து, கர்மாவஸாநத்தைப் பற்றச்சொல்லுகிறதென்று ஸித்தாந்தித்ததில்லையோ? அத்தோடு விரோதியாதோ இது?" என்னில்,—ந்யாயாநுக்ருஹீதமாயிறே வாக்யம் அர்த்தப்ரத்யாயகமாவது: உபாஸகனுக்குத் தான் பற்றினவுபாயம் மூர்த்தி ப்பலிக்கவேண்டுகையாலே அவ்வளவும் ந்யாயம் நடக்கும். இவன், முதலடியிலே "என்னுடைய ஸர்வபாரங்களுக்கும் கடவாய் நீயே" என்றுகொண்டு ஸர்வேச்வரன்பக்கலிலே பரந்யாஸம் பண்ணினவனிறே; "இவன்தான் செய்கிறது ஒன்றுண்டாய் அது பக்வமாய்ப் பெறவேணும்" என்னும் விளம்பஹேதுவுமில்லை! இவன்தான் பரந்யாஸம்பண்ணின ஈச்வரனுக்கு அசக்தியுண்டாய் அது விளம்பஹேதுவாகிறதுமன்று. ஆக, இப்படி ந்யாயங்கள் காட்டினவாறே இவனுக்கு சரீராவஸாநத்திலே பேறுகைக்குத் தட்டில்லையிறே. இனித்தான் *பகவந்தம் ப்ரபந்நா ஸா பகவந்தமவாப ஹ* என்று மாதவி ப்ரபத்திபண்ணி அநந்தரம் பெற்றாளாகச் சொல்லாநின்றதிறே. முத்கலோபாக்யாநத்திலே வந்தவாறே "நரகாநுபவம் பண்ணுகிறவர்கள் பகவந்நாமச்ரவணத்தாலே அநந்தரம் முக்தரானார்கள்" என்றதிறே; "அவதாரரஹஸ்யஜ்ஞானமுடையவன் இச்சரீராவஸாநத்திலே பெறக்கடவன்" என்றே சொல்லாநின்றதிறே; *த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி* *ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி* என்றும் சொல்லாநின்றதிறே. ஆனால், ப்ரபத்தி பண்ணின அநந்தரத்திலே பகவத்ப்ராப்தியாகவேண்டாவோ? "இவ்விரோதியைப்போக்கி உன் திருவடிகளைத்தரவேணும்" என்றன்றோ இவன் அபேக்ஷிக்கிறது. பின்னையும், அநபிமதமான சரீரத்தோடே யிருக்கிறவிருப்பு கர்மசேஷத்தாலேயாயவோ, ஈச்வரன்வைக்க இருக்கிறதுவோ என்னில்? ஈச்வரன் வைக்கிறானாகில், அவனுக்குச் சிலதோஷம் ப்ரஸங்கிக்கும்; அவன்தான் நம்விரோதியை நடுவே துண்டித்து அவ்வருகே கொண்டுபோகிறேன் என்று சொன்னதோடும் விரோதிக்கும்; ஆனபின்பு கர்மவச்யரோபாதி ஸாதநாநுஷ்டாநம் இவனும் பண்ணியிருக்கையாலே கர்மத்தாலேயா மித்தனையன்றோ! இனி, கர்மம் நடையாடக்கடவதாகில் அவ்வளவும் போகத்தட்டென்? என்னில்,—அது வேண்டா; அதிகாரிவிசேஷத்தாலே. இவன் ப்ரபத்திபண்ணினவநந்தரம் முக்தனுமாகில் இதுதன்னை நச்சுப்பொய்கையோபாதியாக நினைத்

*யித்யாதி] நக்ஷத்ரபதத்தளவும் ஓங்கின மதிளென்னுதல்; வெள்ளியாலே செய்யப்பட்ட (தருதி யான) மதிளென்னுதல், ப்ரத்யக்ஷிக்கிறீலோமாகிலும் ப்ரமாதிசயத்தாலே அதிவிலக்ஷண மாய்த் தோற்றுமிறே. [திருக்கண்ணபுரமுள்ளி] க்ஷேமத்தாலே ஸ்ப்ருஹணீயமான தேசமென்று அநுஸந்தித்து, இவ்விஷயத்திலே சபலராயிருப்பார், நித்யமாகத்தொழுது உஜ்ஜீவியுங்கோள். "அபர்வணி கடல் தீண்டலாகாது" என்னுமாபோலே இவ்விஷயத்தில் காலநியதியில்லை.*

தொண்டர்நுந்தம்துயர்போக நீர்ஏகமாய்*
விண்டுவாடாமலரிட்டு நீர்இறைஞ்சுமின்*
வண்டுபாடும்பொழில்சூழ் திருக்கண்ணபுரத்
தண்டவாணன்* அமரர்பெருமானையே. (3)

**ஒ.—மூன்றும்பாட்டில், சாபலமுடைய நீங்கள் து:க்கம்கெட உபயவிபூதியுக்தனும் திருக்கண்ண புரத்திலே நின்றருளினவனை அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு ஆச்ரயியுங்கோள் என்கிறார். [வண்டு பாடும் பொழில்] - நிரதிசயபோக்யமான திருச்சோலை. [அண்டவாணன்] - லீலாவிபூதியையுடையான். [அமரர்பெருமான்] - நித்யவிபூதியையுடையான்.**

**இ.—மூன்றும்பாட்டில், திருக்கண்ணபுரத்திலே நின்றருளினவன் உபயவிபூதியுக்தனுமத்து: உங்கள் து:க்கம் கெட அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு ஆச்ரயியுங்கோள் என்கிறார். [தொண்டர்] - ஆசாலேசமுடைய நீங்களென்னுதல். "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்றிருக்கும் நீங்களென்னுதல். [நுந்தம் துயர்போக] - துயரும் வ்யாவ்ருத்தமாயிறே யிருப்பது. விஷயப்ராவண்யத்தால்வந்த து:க்கமென்னுதல். இறைஞ்சப்பெறாத தன்னுடைய விரஹத்தால் வந்த து:க்கமென்னுதல். [நீர் ஏகமாய்] - நீங்கள் அநந்யப்ரயோஜநராய் என்னுதல். நீங்களெல்லாம் ஒருமிடறாய் என்னுதல். 'தொண்டர்' என்கையாலே எல்லாரும் ஒருமிடறுகலாமிறே. [விண்டு வாடாமலர்] - அலரத் தொடங்கினவளவாய்க் கழியவலர்ந்து வாடாத பூ. செவ்விப்பூவைக்கொண்டு ஆச்ரயியுங்கோள் என்கை. [வண்டுபாடும் இத்யாதி] - வண்டுகள் மதுபானமத்தமாய்க்கொண்டு பாடாநின்றுள்ள சோலை சூழ்ந்த தேசம்: "ஏதத்ஸாம காயந்நாஸ்தே" என்கிறபடியே நிரதிசயபோக்யமான தேசமென்கை. [திருக்கண்ணபுரத்து அண்டவாணன் அமரர் பெருமானையே] - திருக்கண்ணபுரத்திலேவந்து எளியனாயிருக்கிறவன் உபயவிபூதிநாதனுமத்து. பரமபதநிலயனும் அயர்வறுமமரர்கள் அதிபதியுமானவன் என்னுதல், லீலாவிபூதிக்கு நிர்வாஹகனுமாய் நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவன் என்னுதல். இங்கே ஆச்ரயித்துவிரோதியைப்போக்கி, பூர்ணாநுபவம்பண்ண ஒரு தேசவிசேஷம் தேடிப் போகவேண்டா. நித்யஸூரிகளும் இங்கேவந்து அநுபவிக்கும் சீலாதிகுணாதிக்யமுண்டு-இங்கு; ஸம்ஸாரிகளுக்குக் கிட்டவொண்ணாத குறையுண்டு பரமபதத்தில்.**

*கூடு.—மூன்றும்பாட்டு. திருக்கண்ணபுரத்திலே நின்றருளினவன் உபயவிபூதிநாதனுமத்து; உங்கள் து:க்கம் கெட அநந்யப்ரயோஜனராய்க்கொண்டு ஆச்ரயியுங்கோளென்கிறார்.*

*[தொண்டர்] ஆசாலேசமுடையாரான நீங்களென்னுதல், "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி"க்கு இட்டுப்பிறந்த நீங்களென்னுதல். [நுந்தம் துயர்போக] துயரும் இவர்களுக்கு வ்யாவ்ருத்த மாயிறே யிருப்பது: விஷயப்ராவண்யத்தால் வந்த து:க்கமென்னுதல், இறைஞ்சப் பெறாத து:க்கமென்னுதல். [நீரேகமாய்] நீங்கள் அநந்யப்ரயோஜநராயென்னுதல், நீங்களெல்லாரும் ஒருமிடறாயென்னுதல். "தொண்டர்" என்கையாலே எல்லாரும் ஒருமிடறாகலாமிறே. [விண்டு வாடாமலர்] அலரத்தொடங்கினவளவாய்க் கழியஅலர்ந்து வாடாத பூ. செவ்விப் பூவைக்கொண்டு ஆச்ரயியுங்கோளென்கை. [வண்டுபாடும் இத்யாதி] வண்டுகள் மதுபானமத்தமாய்க் கொண்டு பாடாநின்றுள்ள சோலை சூழ்ந்த தேசம்; "ஏதத்ஸாம காயந் நாஸ்தே" என்கிறபடியே நிரதிசய போக்யமான தேசமென்கை. [திருக்கண்ணபுரத்தண்ட வாணனமரர்பெருமானையே] திருக்கண்ணபுரத்திலே வந்து எளியனாயிருக்கிறவன் உபய விபூதிநாதனுமத்து; பரமபத நிலயனும், அயர்வறுமமரர்களதிபதியுமானவனென்னுதல்;*

*லீலாவிபூதிக்கு நிர்வாஹகனுமாய், நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனுமானவ னென்னுதல். இங்கே ஆச்ரயித்து விரோதியைப் போக்கிப் பூர்ணாநுபவம் பண்ண ஒருதேசவிசேஷம் தேடிப் போகவேண்டா; நித்யஸூரிகளும் இங்கே வந்து அநுபவிக்கும்படி ஸௌலப்யம் உண்டிறே இங்கு. அத்தர்க்கு வைத்த சாலையில் விழித்திருப்பார்க்கு உஜ்ஜீவனமில்லையே; அப்படியன்றிறே இங்குத்தை நிலை. *ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம்*, இதுக்கு ஆளவந்தார் அருளிச் செய்யும்படி "அம்மேட்டிலும் அபிப்ராயமின்றால் தேசிகருக்குச் சொல்ல வேணுமோ?" என்று.*

**மானைநோக்கி மடப்பின்னைதன்கேள்வனை***
**தேனைவாடாமலரிட்டு நீர்இறைஞ்சுமின்***
**வானையுந்துமதிள்சூழ் திருக்கண்ணபுரம்***
**தான்நயந்தபெருமான் சரணாகுமே. (4)**

ஐ.—நாலாம்பாட்டில், திருக்கண்ணபுரத்திலே எம்பெருமானை நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாக ஆச்ரயியுங்கோள் என்கிறார். [மானைநோக்கியென்று தொடங்கி] - மான்கள் தோற்கும்படியான நோக்கையும் ஸ்த்ரீத்வத்தையுமுடைய நப்பின்னைப்பிராட்டிக்கு நாதனும் நிரதிசயபோக்யனுமானவனைச் செவ்விப்பூவையிட்டு நீங்கள் தொழுங்கோள். [வானையுந்துமதிளென்றுமேலுக்கு] - மிகவும் உயர்த்தான மதிள்சூழ்ந்த திருக்கண்ணபுரத்தை ஆதரம்பண்ணின ஸர்வேச்வரனானவன்தான் உங்களுக்கு ரக்ஷகனாம்.

இ.—நாலாம்பாட்டில், ஆச்ரயிக்குமிடத்தில் நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாக ஆச்ரயியுங்கோள்; அவன் உங்களுக்கு ரக்ஷகனுமென்கிறார். [மானைநோக்கி] - மானினது நோக்கையுடையவள். மான் தோற்று நாணும்படியாய்த்து நோக்கிருப்பது. [மடப்பின்னைதன் கேள்வனை] - ஸ்த்ரீத்வம் முதலான ஆத்மகுணங்களையுடைய நப்பின்னைப் பிராட்டிக்கு வல்லபனானவனை. [தேனை] - நிரதிசய போக்யனானவனை. இதிறே நான் உங்களுக்குச் சொல்லுகிற வேப்பங்குடி நீர். [வாடாமலரிட்டு நீர் இறைஞ்சுமின்] - செவ்விப்பூவையிட்டு நீங்கள் ஆச்ரயியுங்கோள். [தேனையும் செவ்விப்பூவையும் சேர்க்கைபோலே காணும் ஆச்ரயணமாவது] [வானையுந்துமதிள்] - ஆகாசத்தோடே ஸ்பர்த்தைபண்ணி அத்தைத் தள்ளுமாபோலே இருக்கிறமதிளாலே சூழப்பட்டவூர். துஷ்ப்ரக்ருதிகளுக்குக் கிட்டவொண்ணாதபடி ஸுரக்ஷிதமான ஊரென்கை. [தான்நயந்த பெருமான்] - ஆச்ரிதஸம்ச்லேஷத்துக்குப்பாங்கான தேசம் என்று அத்தை விரும்பி வர்த்திக்கிற ஸர்வேச்வரனானவன். [சரணாகுமே] - உங்களுக்கு ரக்ஷகனாம். அம்மதிள் அவனுக்கு அரணுமாபோலே, உங்களுக்கு அவன் மதிளாம்.

ஈடு.—நாலாம்பாட்டு. ஆச்ரயிக்குமிடத்தில் நப்பின்னைப் பிராட்டி புருஷகாரமாக ஆச்ரயியுங்கோள்; அவன் உங்களுக்கு ரக்ஷகனும் என்கிறார்.

*[மானைநோக்கி] மானினது நோக்கையுடையவள். மான் தோற்று நாணும்படியாய்த்து நோக்கிருப்பது. [மடப்பின்னைதன் கேள்வனை] ஸ்த்ரீத்வம் முதலான ஆத்மகுணங்களையுடைய நப்பின்னைப் பிராட்டிக்கு வல்லபனுமுள்ளவனை. [தேனை] நிரதிசய போக்யனானவனை. இவ்வேப்பங்குடி நீரையன்றோ நான் உங்களைக் குடிக்கச்சொல்லுகிறது. [வாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின்] செவ்விப்பூவிட்டு நீர் ஆச்ரயியுங்கோள். தேனையும் செவ்விப் பூவையும் சேர்க்கைபோலேகாணும் ஆச்ரயணமாவது. [வானையுந்துமதிள்] ஆகாசத்தோடே ஸ்பர்த்தை பண்ணி அத்தைத் தள்ளுமாபோலே யிருக்கிற மதிளாலே சூழப்பட்டவூரை. துஷ்ப்ரக்ருதிகளுக்குக் கிட்டவொண்ணாதபடி ஸுரக்ஷிதமான ஊரென்கை. [தான் நயந்த பெருமான்] "ஆச்ரித ஸம்ச்லேஷத்துக்குப் பாங்கானதேசம்" என்று அத்தை விரும்பி வர்த்திக்கிற ஸர்வேச்வரனானவன். [சரணாகுமே] உங்களுக்கு ரக்ஷகனும். அம்மதிள் அவனுக்கு அரணானாப்போலே உங்களுக்கு அவன் மதிளாம்.*

சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்*
மரணமானால்வைகுந்தம்கொடுக்கும்பிரான்*
அரணமைந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தரணியாளன்* தனதன்பர்க்குஅன்பாகுமே. (5)

ஒ.—அஞ்சாம்பாட்டில் இப்படி பக்தியோகத்தால் அவனை ஆச்ரயிக்க க்ஷமரன்றிக்கே தன் திருவடிகளே உபாயமாகப் பற்றினார்திறத்தில் செய்தருளும்படியை அருளிச்செய்கிறார். [சரணமென்று தொடங்கி] - தன்திருவடிகளையே உபாயமாகப்பற்றினார் ஜந்மவ்ருத்தாதிகளால் குறையநின்றாரேயாகிலும் அவர்களுக்கு ரக்ஷகனும். மேலும் "எல்லாம்" என்றவற்றுக்கும் பொருள் இப்படியே [மரணமென்று தொடங்கி] - ப்ரபந்நராமவர்கள் அவர்களையொழியத் தனக்குச் செல்லாதிருக்கச் செய்தே அவர்கள் இசையக் கொண்டுபோய் சரீராவஸாநத்திலே மஹோபகாரத்தைக் கொடுக்கும் மஹோபகாரகன். பண்டுவாஸிதமான விஷயங்கள் இந்தசரீரத்தோடேபோம்; இனி ஒரு சரீரத்திலே ப்ரவேசித்து விஷயங்களிலே நசைபண்ணுவதுக்கு முன்பே தசையிலே மிகவும் போக்யமான தன்னழகைக்காட்டி இவனை இச்சையித்து அப்போதே விஷயீகரிக்கும் என்றுகருத்து. [அரணமைந்த மதிளென்று மேலுக்கு] - அரணமாகப் போரும் மதிள் சூழ்ந்த திருக்கண்ணபுரத்திலே யிருந்து ஸம்ஸாரிகளுக்கு ரக்ஷகனானவன் தனக்கு ஸ்நேஹிகளானவர்க்கு மிகவும் ஸ்நேஹியாம்.

இ.—அஞ்சாம்பாட்டில், இப்படி பக்தியோகத்தால் ஆச்ரயிக்க க்ஷமரன்றிக்கே தன் திருவடிகளே உபாயமாகப் பற்றினார்திறத்தில் செய்தருளும்படியை அருளிச்செய்கிறார். [சரணமாகும் இத்யாதி] - ஜந்மத்தாலும் வ்ருத்தத்தாலும் ஜ்ஞானத்தாலும் குறைய நின்றாரேயாகிலும் தன்திருவடிகளே உபாயமாகப் பற்றினார்க்கெல்லாம் ரக்ஷகனும். கீழ் மூன்றுபாட்டாலும் சொன்ன பக்தியோகம் அதிக்ருதாதிகாரம். இதில் சொன்ன ப்ரபத்தி ஸர்வாதிகாரமென்கிறது. [மரணமானால் இத்யாதி] - தன்பக்கலிலே ந்யஸ்த பரனானவன்று தொடங்கி, இவனையொழியத் தனக்குச் செல்லாதிருக்கச் செய்தே இவனுடைய ருசியை வர்த்தித்து சரீராவஸாநத்திலே பரமபதத்தைக் கொடுத்த மஹோபகாரகன், தன்னழகைக்காட்டி அத்தாலே இவற்றுக்கு ருசிபிறக்குமளவும் அவஸரப்ரதீக்ஷனாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. [மரணமானாலென்று] - தனக்கு அசக்தியில்லை; இவனுக்குக் கர்த்தவ்யமில்லை: இவன்ருசியைக் கடாக்ஷித்திருக்கிறவித்தனை. இப்பாட்டில் "மரணமானால்" என்றத்தைக்கொண்டிறே கீழ்ச்சொன்ன நிருபணமெல்லாம். [அரணமைந்த மதிள்] - 'நித்யஸூரிகள் பரியவிருக்கிறவன் இங்கே வந்துநின்றான்: என்வருகிறதோ ?' என்று அஞ்சவேண்டாதபடியிருக்கை [தரணியாளன்] - பூமிக்கு நிர்வாஹகன். ஸம்ஸாரிகளுக்கு ரக்ஷகனென்கை. [தனதன்பர்க்கன்பாகுமே] - தனக்கு ஸ்நேஹிகளானார் பக்கல் அதிப்ரவணனும். [அன்பாகும்] - அன்புடையன் என்று பிரிக்கவொண்ணாதபடி அன்புதான் ஒருவடிவு கொண்டாற்போலேயிருக்கை.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. இப்படி பக்தியோகத்தால் ஆச்ரயிக்க க்ஷமரன்றிக்கே தன் திருவடிகளையே உபாயமாகப் பற்றினார் திறத்து அவன் செய்தருளும்படியை யருளிச்செய்கிறார்.

[சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்] - ஜந்மவ்ருத்த ஜ்ஞானங்களால் குறைய நின்றாரேயாகிலும், தன் திருவடிகளையே உபாயமாகப் பற்றினார்க்கெல்லாம் ரக்ஷகனும். கீழ் மூன்றுபாட்டாலும் சொன்ன பக்தியோகம் அதிக்ருதாதிகாரம், இதில் சொல்லுகிற ப்ரபத்தி ஸர்வாதிகாரமென்கிறது; "ஸமோஹம் ஸர்வபூதேஷு" என்னக்கடவதிறே. பகவத்விஷயந்தான் ஸ்பர்சவேதியாயிருக்குமிறே. ஸகிதத்தில் பகவத்ஸம்பந்தமுடையானொரு சண்டாளனோட்டை ஸம்பாஷணம் ப்ராம்மணனுடைய ஆசார வைகல்யத்துக்குப் பரிஹாரமாய்த்து. அவ்விடத்திலெல்லாம் சொல்லுகிற அர்த்தம் இதுவேயாய்த்து. [மரணமானால் வைகுந்தம் கொடுக்கும்பிரான்] இவன் தன்பக்கலிலே ந்யாஸம் பண்ணினவன்று தொடங்கி இவனையொழியத் தனக்குச் செல்லாமை யுண்டாயிருக்கச்செய்தேயும், இவனுடைய ருசியை யநுவர்த்தித்து, சரீர விச்லேஷத்தளவும் அவஸரப்ரதீக்ஷனாய் நின்று, பின்னையதுண்டானால் பரம

பதத்தைக் கொடுக்கும் உபகாரகன். தன் திருவடிகளைப் பற்றினவன்றே தானிருக்கிறவிடத்திலே இவனைக்கொடுபோய்ச் சேரவைத்துக்கொள்ள வேண்டியிருக்கச்செய்தேயும், நடுவு இவனிருக்கும் காலநாளும் அவனுக்கு ஒரு பகலாயிரயுகமாயிருக்கையாலே 'மரணமானால்' என்கிறது. "மரணமானால்" என்கிறது - தனக்கு அசக்தியில்லை, இவனுக்குக் கர்த்தவ்யமில்லை, இவன் ருசியைக்கடாக்ஷித்து நிற்கிறவித்தனை. இப்பாட்டில் "மரணமானால்" என்றதைக் கொண்டிறே கீழ்ச்சொன்ன திருப்பணமெல்லாம். [அரணமைந்த] 'நித்யஸூரிகள் பரியவிருக்கிறவன் இங்கேநின்றான்; என்வருகிறதோ?' என்று அஞ்சவேண்டாதிருக்கை; அரணமாம்படி அமைந்த. [தரணியாளன்] பூமிக்கு நிர்வாஹகன். ஸம்ஸாரிகளுக்கு ரக்ஷகனென்கை. [தனதன்பர்க்கன்பாகுமே] தனக்கு ஸ்நேஹிகளானார்பக்கல் அதிப்ரவணனும். [அன்பனாகும்] - "அன்புடையவன்" என்று பிரிக்கவொண்ணாதபடி அன்புதான் ஒருவடிவுகொண்டாற்போலேயிருக்கை.

அன்பனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்*
செம்பொனாகத்து அவுணனுடல்கீண்டவன்*
நன்பொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தன்பன்* நாளும்தனமெய்யர்க்குமெய்யனே. (6)

ஒ.—ஆறும்பாட்டில், திருக்கண்ணபுரத்தில் எம்பெருமான் ஆச்ரயிப்பாருடைய ப்ரதிபந்தகங்களைப்போக்கி அவர்களுக்கு மிகவும் ஸ்நேஹியாயிருக்கிறார். [செம்பொனாகத்தவுணன்] - ஹிரண்யன், [நன்பொனேய்ந்த மதிள்]-"ஆச்ரிதவிஷயீகாரத்துக்கு உறுப்பான தேசம்" என்று நல்ல பொன்னாலே செய்யப்பட்ட மதிள்சூழ்ந்த திருக்கண்ணபுரத்துக்கு ஸ்நேஹியானவன் தன்னிறத்து அநந்யப்ரயோஜநரானவிருப்பார்க்குத் தானும் என்றும் அநந்யப்ரயோஜநனாயிருக்கும்.

இ.—ஆறும்பாட்டில், தன்னை ஆச்ரயிப்பாருடைய ப்ரதிபந்தகங்களைப் போக்கி அவர்களுக்கு மிகவும் ஸ்நேஹியாம் என்கிறார். [அன்பனாகும் இத்யாதி] - தன் திருவடிகளே உபாயமென்று பற்றினார்க்கு, "சரணாகத வத்ஸல:" என்கிறபடியே அவர்கள்தோஷம் தோன்றுதபடி ஸ்வாமுக்தனாயிருக்கும். "தோஷோயத்யபி தஸ்ய ஸ்யாத்". இவர்களுடைய விரோதிசெய்வது என்? என்னில்; ஸ்ரீப்ரஹ்லாதனுடைய விரோதி பட்டதுபடும். ஹிரண்யனுகிற அஸுரனுடைய சரீரத்தை அநாயாஸேந கிழித்தவன். [நன்பொன் ஏய்ந்தமதிள்] - நல்பொன்னாலே செய்யப்பட்ட மதிள்; ஸ்ப்ருஹணீயமான மதிளென்கை. [திருக்கண்ணபுரத்தன்பன்] - ஆச்ரிதரக்ஷணத்துக்கு உறுப்பான தேசம் என்று அவன் விரும்பி வர்த்திக்கிற ஊர். [தனமெய்யர்க்கு - நாளும் மெய்யனே] - தன்பக்கல் அநந்யப்ரயோஜநரானவிருப்பார்க்கு என்றுமொக்கத் தான் அநந்யப்ரயோஜநனாயிருக்கும். தன்பக்கல் மித்ரபாவமுடையார்க்கு "ந த்யஜேயம்" என்றிருக்குமவன்.

ஈடு.—ஆறும்பாட்டு. தன்னை ஆச்ரயிப்பாருடைய ப்ரதிபந்தகங்களைப்போக்கி அவர்களுக்கு மிகவும் ஸ்நேஹியாமென்கிறார்.

[அன்பன் இத்யாதி] - தன் திருவடிகளையே உபாயமாகப்பற்றினார்க்கு, *சரணாகதவத்ஸல:* என்கிறபடியே அவர்கள்தோஷம் தோற்றாதபடி ஸ்வாமுக்தனாயிருக்கும்; *தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்*. இவர்களுடைய விரோதி செய்வதென்னென்னில் — ப்ரஹ்லாதனுடைய விரோதி பட்டதுபடும். ஹிரண்யனுகிற அஸுரனுடைய சரீரத்தை அநாயாஸேந கிழித்தவன். [நன்பொனேய்ந்த மதிள்] நல்ல பொன்னாலே செய்யப்பட்ட மதிள்; ஸ்ப்ருஹணீயமான மதிள் என்கை. [திருக்கண்ணபுரத்தன்பன்] "ஆச்ரிதரக்ஷணத்துக்குப் பாங்கான தேசம்" என்று விரும்பி வர்த்திக்கிற ஊர். [நாளும் தனமெய்யர்க்கு மெய்யனே] - தன்பக்கல் அநந்ய ப்ரயோஜனராயிருப்பார்க்கு, தானும் அவர்கள்பக்கல் என்றுமொக்க அநந்ய ப்ரயோஜனனாயிருக்கும். தன்பக்கல் மித்ரபாவமுடையார்க்கு *ந த்யஜேயம்* என்றிருக்குமவன்.

மெய்யனாகும் விரும்பித்தொழுவார்க்கெல்லாம்*
பொய்யனாகும் புறமேதொழுவார்க்கெல்லாம்*
செய்யில்வாளையுகளும் திருக்கண்ணபுரத்
துறையான்* ஆகத்தணைப்பார்கட்கு அணியனே. (7)

ஆ.—ஏழாம்பாட்டில், அநந்யப்ரயோஜநர்க்குத் தான் ஸுலபனும் ப்ரயோஜநாந்தரபரர்க்கு அவர்களுடைய அபேக்ஷிதங்களையே கொடுத்துத் தன்னை அகற்றும் என்கிறார். [செய்யில்வாளையென்று மேலுக்கு] - அதிஸம்ருத்தமான திருக்கண்ணபுரத்திலே எழுந்தருளியிருக்கிற பரமபந்துவானவன் அநந்யப்ரயோஜநரானார்க்கு ஸுலபனும். இதில் ஒரு ஸந்தேஹமுமில்லை.

இ.—ஏழாம்பாட்டில், அநந்யப்ரயோஜநர்க்கு ஸுலபனும் ப்ரயோஜநாந்தரபரர்க்கு அவற்றைக் கொடுத்துத் தான் அகலும் என்கிறார். [மெய்யன் இத்யாதி] - அநந்யப்ரயோஜநராய் ஆச்ரயிக்குமவர்கள் ஏரேனுமாகிலும் அவர்கள் அபேக்ஷிதத்தை முடியநடத்தும்; ப்ரயோஜநங்களைப் பற்ற ஆச்ரயிப்பார்க்கு பந்தகமான அந்த பதார்த்தங்களை ஆதரித்துக்கொடுத்தானும் தன்னைக்கொண்டகலும். "க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா:" என்றிருக்கும் பாண்டவர்களுக்கு மெய்யனாயிருக்கும்; படைத்துணை வேண்டிவந்த துர்யோதநனுக்கு நாராயணகோபாலர்களை அடையக் கொடுத்தானும், தான் பாண்டவர்களுக்காய் நின்று அத்தனையை அழியச்செய்கையாலே பொய்யனுமாகும். [செய்யில் இத்யாதி] - செய்களிலே மத்ஸ்யமானது உகளித்துவர்த்திக்கிற திருக்கண்ணபுரத்திலேயிற்கிற பரமபந்து. திர்யக்குக்களும் களித்துவர்த்திக்கும்படி போகபூமி என்கை. [ஆகத்து இத்யாதி] - தன்னை ஹ்ருதயத்திலே வைப்பார்க்குக் கையாளாயிருக்கும். அநந்ய ப்ரயோஜநர்க்கு, "கிங்கரௌ ஸமுபஸ்திதௌ" என்றிருக்கும்.

ஈடு.—ஏழாம் பாட்டு. அநந்ய ப்ரயோஜநர்க்கு ஸுலபனும் ப்ரயோஜநாந்தரபரர்க்கு அத்தைக் கொடுத்துத் தான் அகல நிற்குமென்கிறார்.

[மெய்யனாகும் இத்யாதி] - அநந்ய ப்ரயோஜனராயிருப்பார்க்கு அவர்களாரேனுமாகிலும் அபேக்ஷிதத்தை முடிய நடத்தும்; புறம்பே ப்ரயோஜனங்களைப்பற்ற ஆச்ரயிப்பார்க்கு பந்தகமான அப்புருஷார்த்தங்களை யாதரித்துக் கொடுத்தானும் தன்னைக் கொண்டகலும். *க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா:* என்றிருப்பார்க்கு மெய்யனாயிருக்கும். படைத்துணை வேண்டிவந்த துர்யோதநனுக்கு நாராயண கோபாலர்களை யடையக்கொடுத்தானும், தான் பாண்டவர்களுக்காக நின்று அத்தனையும் அழியச் செய்கையாலே பொய்யனுமாம். [செய்யில் இத்யாதி] செய்களிலே மத்ஸ்யமானது உகளித்து வர்த்திக்கிற திருக்கண்ணபுரத்திலே நிற்கிற பரமபந்து. திர்யக்குக்களும் களித்து வர்த்திக்கும்படியான போக்யதையையுடைய தேசமென்கை. தன்னை ஹ்ருதயத்திலே வைப்பார்க்குக் கையாளாயிருக்கும்; அநந்யப்ரயோஜநர்க்கு *கிங்கரௌ ஸமுபஸ்திதௌ* என்றிருக்கும்.

அணியனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்*
பிணியுஞ்சாரா பிறவிகெடுத்தாளும்*
மணிபொன்னேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
பணிமின்* நாளும்பரமேட்டிதன்பாதமே. (8)

ஆ.—எட்டாம்பாட்டில், ஸர்வேச்வரனை ஆச்ரயியுங்கோள்- உங்களுடைய துக்கத்தையும் துக்கஹேதுவான ஸம்ஸாரத்தையும் போக்கியருளுமென்கிறார். [மணிபொன்னேய்ந்த என்று மேலுக்கு] - ச்லாக்யமான மதிள்சூழ்ந்த திருக்கண்ணபுரத்திலே இருநாட்டிற்படியே நின்றருளினவன் திருவடிகளைப் பணியுங்கோள்.

*ஈடு.—ஒன்பதாம்பாட்டு. உபதேசநிரபேக்ஷமாக நாங் முன்னம் அவனை யாச்ரயித்து லாபிகளாகப் பெற்றோமென்று ப்ரீதராகிறார்.*

*[பாதநாளும்பணியத் தணியும்பிணி] - அவன் திருவடிகளை யாச்ரயிக்கவே, அநாதிகாலார்ஜிதமான பூர்வாகம் நசிக்கும், இனிமேல் செய்ய, விரோதியான பாபம்போமென்கை. [ஏதஞ்சாரா] - உத்தராகமான து சலேஷியாது. [எனக்கேல்இனியென்குறை] - அவன் திருவடிகளிலே தலைசாய்க்க என் ஸகல துரிதங்களும் போகுநானபின்பு, எனக்கு ஒருகுறையுண்டோ? [வேதநாவர் இத்யாதி] - வேதார்த்த வித்துக்கள் விரும்பி வர்த்திக்கிற திருக்கண்ணபுரத்திலே ஸந்நிஹிதனை ஜகத்காரணபூதனை. 'வேதநாவர்' என்கிறது - திருமங்கையாழ்வார்போல்வாரை: விரும்புகைபாவது - "கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேனொருவர்க்கு உரியேனோ" என்கை, ப்ரமாணம் வேதமாய், ப்ரமேயம் ஜகத்காரணமாயிறேயிருப்பது. "காரணம் து த்யேய:" என்று ஜகத்காரணவஸ்துவிறே த்யேயம். [ஆதியானை யடைந்தார்க் கல்லல்இல்லையே] - தாய்மடியிலே சாய்ந்தார்க்கு க்லேசமில்லையென்னுமிடம் ஸித்தம்.*

இல்லையல்லல் எனக்கேல்இனியென்குறை?*
அல்லிமாதரமரும் திருமார்பினன்*
கல்லிலேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
சொல்ல*நாளுந்துயர்பாடுசாராவே. (10)

ஒ.—பத்தாம்பாட்டில், ச்ரீத்வதிசயத்தாலே மீளவும் ஸ்வலாபத்தைச் சொல்லி பக்தி ப்ரபத்தியநுஷ்டாநங்களுக்கு க்ஷமரல்லராகில், திருக்கண்ணபுரமென்று வாயாலேசொல்ல ஸமஸ்த துக்கங்களும் போமென்கிறார். [அல்லிமாதரமரும் திருவென்று மேலுக்கு] - ஆச்ரயிப்பாருடைய ஆச்ரயணத்தில் குறைவுபாராதே அவர்களைத்தானே விஷயீகரிக்கும்படி பண்ணும் ஸ்வபாவையான பெரியபிராட்டியார் நிரந்தரவாஸம்பண்ணும் திருமார்வை உடையவனுடைய ஸ்தானமான திருக்கண்ணபுரத்தை.

இ.—பத்தாம்பாட்டில், ப்ரீத்யதிசயத்தாலே ஸ்வலாபத்தைச்சொல்லி பக்திப்ரபத்த்யநுஷ்டாநங்களுக்கு க்ஷமரல்லாதார்க்குத் திருக்கண்ணபுரமென்கிற உக்தியாலே ஸமஸ்தது:க்கங்களும் போம் என்கிறார். [இல்லையல்லல்] - ஸகலதுக்கங்களும் போம். இனி எனக்கு என்ன குறையுண்டு? பகவதநுபவவிரோதி துரிதங்கள் போனபின்பு, எனக்கு அநுபவிக்கைக்கு ஒரு தேசவிசேஷம் தேடிப்போகவேண்டியிருந்ததோ? என்னால் வருவது போவதான பின்பு, அவனால் வருவதுக்கு ஒருகுறையுண்டோ? [அல்லிமாதரித்யாதி] - பெரிய பிராட்டியார் நித்யவாஸம்பண்ணுகிற திருமார்வை யுடையவன். ஆச்ரயணத்தில் குறைவுபார்த்து அவன் அநாதரியாதபடி "ந கச்சித்நாபராத்யதி" என்பாரும் அருகேயுண்டு. திண்ணிதானமதிளையுடைய திருக்கண்ணபுரத்தை வாயாலேசொல்ல. பக்தியிலே மூழ்குகைக்கும் பரிகரமின்றிக்கே ப்ரபத்திக்கும் வ்யவஸாயமில்லாதார் "திருக்கண்ணபுரம்" என்று வாயாலேசொல்லவே ஸமஸ்தது:க்கங்களும் போம்.

*ஈடு.—பத்தாம்பாட்டு. ப்ரீத்யதிசயத்தாலே ஸ்வலாபத்தைச்சொல்லி, பக்தி ப்ரபத்த்யநுஷ்டாநங்களுக்கு க்ஷமரல்லாதார் திருக்கண்ணபுரமென்கிற உக்தியைச் சொல்லவே ஸமஸ்த து:க்கங்களும் போமென்கிறார்.*

*[இல்லையல்லல்] - ஸகலது:க்கங்களும் போம். [எனக்கேல் இனியென்குறை] - இனியெனக்கென்ன குறையுண்டு? பகவதநுபவவிரோதியான துரிதங்களும்போனபின்பு, எனக்கு அநுபவத்துக்கு ஒரு தேசவிசேஷம் தேடிப் போகவேண்டியிருந்ததோ? [அல்லிமித்யாதி] - பெரியபிராட்டியார் நித்யவாஸம்பண்ணுகிற திருமார்வையுடையவன். ஆச்ரயணத்திற்குறை*

பார்த்து அவன் அகாதரியாதபடி *ந கச்சித்நாபராத்யதி* என்பாரும் அருகேயுண்டு. திண்ணிதான மதிளையுடைய திருக்கண்ணபுரத்தை வாயாலேசொல்ல. பக்தியின்மிகைக்குப்பரிகாரமின்றியே ப்ரபத்திக்கு வ்யவஸாயமின்றிக்கே யிருக்குமவர்கள், ''திருக்கண்ணபுரம்'' என்று வாயாலேசொல்லவே, ஸமஸ்த து:க்கங்களும் போம்.

பாடுசாரா வினைபற்றறவேண்டுவீர்!*
மாடநீடு குருகூர்ச்சடகோபன்சொல்*
பாடலானதமிழ் ஆயிரத்துள் இப்பத்தும்*
பாடியாடிப் பணிமின் அவன்தாள்களே. (11)

ஓ.—நிகமத்தில், ப்ரதிபந்தகங்களெல்லாம் பாடுசாராது பற்றறவேண்டியிருக்கும் நீங்கள் இத் திருவாய்மொழியை ப்ரீதிபூர்வகமாகச் சொல்லிக்கொண்டு அவனை ஆச்ரயியுங்கோள் என்கிறார்.

இ.—நிகமத்தில், ப்ரதிபந்தகங்கள் ஸவாஸநமாகப் போகவேண்டியிருக்கில், இத்திருவாய் மொழியை ப்ரீதிபூர்வகமாகச் சொல்லிக்கொண்டு அவன்திருவடிகளை ஆச்ரயியுங்கோள் என்கிறார். [பாடுசாரா இத்யாதி] வினையானது உங்கள் பார்ச்வத்தில் வந்து கிட்டாதபடி வாஸனையோடே போக வேண்டியிருந்தீர்களாகில் நித்யமான மாடங்களையுடைத்தான திருநகரியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த. ஆப்தோபதேசமாகையாலே திருவாய்மொழியில் பிறந்தவற்றில் அர்த்தவாதமில்லை. [பாடலித்யாதி] - அநாப்தர்சொல்லிலும் விடவொண்ணாத போக்யதையையுடைத்தான இப்பத்து. புஷ்பம் பரிமளத்தோடே அலருமாபோலே இசையோடேகூடப் பாடின தமிழ், ப்ரீதிபூர்வகமாகப்பாடி, இருந்த விடத்திலிருக்க வொட்டாதே ஆடி ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு அவன்திருவடிகளிலே விழுங்கோள்; இதன்றோ நான் உங்களைக் குடிக்கச்சொல்லுகிற வேப்பங்குடிநீர் ?

ஈடு.—நிகமத்தில், ப்ரதிபந்தகங்கள் ஸவாஸநமாகப் போகவேண்டியிருக்கில், இத் திருவாய்மொழியை ப்ரீதிபூர்வகமாகச் சொல்லிக்கொண்டு அவன் திருவடிகளை யாச்ரயியுங்கோளென்கிறார்.

[பாடுசாரா வினைபற்றற வேண்டுவீர்] வினை உங்கள் பார்ச்வத்திலே வந்து கிட்டாதபடி ஸவாஸநமாகப் போகவேண்டியிருந்தீர்களாகில். [மாடநீடு இத்யாதி] நித்யமான மாடங்களையுடைத்தான திருநகரியையுடைத்தான ஆழ்வாரருளிச்செய்த. ஆப்தோபதேசமாகையாலே, திருவாய்மொழியிற்பிறந்தவற்றிலர்த்தவாதமில்லை. [பாடல் இத்யாதி] அநாப்தர்சொல்லிலும் விடவொண்ணாத போக்யதையையுடைத்தான இப்பத்து. புஷ்பம் பரிமளத்தோடேயலருமாபோலே, இசையோடேகூடப்பாடின தமிழ். பாடியாடிப் பணிமின் அவன்தாள்களை] ப்ரீதிபூர்வகமாகப்பாடி, இருந்தவிடத்திலிராதே யாடி, ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு அவன் திருவடிகளிலே விழுங்கோள். இதன்றோ நான் உங்களைக் குடிக்கச் சொல்லுகிற வேப்பங்குடிநீர்? தேனைமலரும் திருப்பாதத்தையிறே சேரச்சொல்லுகிறது.

மணவாள மாமுனிகள் அருளிச்செய்த

## திருவாய்மொழி நூற்றந்தாதி

கொண்டபெண்டிர்தாம்முதலாக் கூறுமுறவோர்கள் அத்தால்*
அண்டினவரென்றே யவரைவிட்டு —* தொண்டருடன்
சேர்க்கும் திருமாலைச்சேருமென்றான்* ஆர்க்குமிதம்
பார்க்கும் புகழ்மாறன் பண்டு. 81

பண்டையுறவான பரனைப் புளிங்குடிக்கே
கண்டு* எனக்கிவ்வுறவின் காரியமும் —* தண்டறநீ
செய்தருளென்றேயிரந்த சீர்மாறன் தாளிணையே*
உய்துணையென்றுள்ளமேயோர். 82

ஓராநீர்வேண்டியவை உள்ளதெல்லாம்செய்கின்றேன் *
நாராயணனன்றோ நானென்று —* பேருவகைக்
காட்ட அவன்நிலத்தில்கால்தாழ்ந்தமாறனருள்*
மாட்டிவிடும் நம்மனத்துமை. 83

மையார்கண்மாமார்பில் மன்னும்திருமாலை*
கையாழி சங்குடனே காணவெண்ணி —* மெய்யான
காதலுடன்கூப்பிட்டுக் கண்டுகந்தமாறன்பேர்*
ஓதவுய்யுமே யின்னுயிர். 84

இன்னுயிர்மால்தோன்றிலனா இங்கென்னெஞ்சிலென்று* கண்ணுறவ்
அன்னவனைக் காணவெண்ணியான்பெண்ணாய் —* பின்னையவன்
தன்னைநினைவிப்பவற்றால் தான்தளர்ந்தமாறனருள்*
உன்னுமவர்க் குள்ளமுருகும். 85

உருகுமால்நெஞ்சம் உன்செயல்களெண்ணி*
பெருகுமால் வேட்கையெனப்பேசி —* மருவுகின்ற
இன்னாப்புடன் அவன்சீரேய்ந்துரைத்தமாறன்சொல்*
என்னாச்சொல்லாதிருப்பதெங்கு. 86

எங்காதலுக்கடிமாலேய்ந்தவடிவுறவென்று*
அங்காதுபற்றாசாவாங்கவன்பால் —* எங்குமுள்ள
புள்ளினத்தைத் தூதாகப்போகவிடும்மாறன்றான்*
உள்ளினார்க்குத் தீங்கையறுக்கும். 87

அறுக்குமிடரென்றவன்பால் ஆங்குவிட்டதூதர்*
மறித்துவாராப் பற்றுமனத்தால் —* அறப்பதறிச்
செய்யதிருநாவாயில் செல்லநினைந்தான்மாறன்*
மையலின்றுச் செய்வறியாமல். 88

மல்லடிமைசெய்யுநாள் மால்தன்னைக்கேட்க* அவன்
சொல்லுமளவும் பற்றாத்தொன்னலத்தால் —* செல்கின்ற
ஆற்றாமைபேசி அலமந்தமாறனருள்*
மாற்றுகைப் போகுமென்றன்மால். 89

**மாலுமதுவாரஞ்சூழ்ந்தும் மன்னுமுடம்பின்முடிவில்*
சாலவென்னைச்செய்வனென்று தானுகந்து —* மேல்வைகுந்தச்
சீரார்க்கண்புரத்தே சேருமெனும்சீர்மாறன் *
தாராயிது நந்தமக்குத்தான். 90

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஒன்பதாம் திருவாய்மொழி முற்றிற்று.